








# லைப்பாய்
# சோப்

தினசரித் தொல்லையான அழுக்
கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களைப் பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 252-50 TM

# கல்கி

மலர் 14
இதழ் 38

மன்மத வரு
சித்திரை 4


# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்: சம்பவங்களும் கற்பனையே.



# மன்மத ஆண்டில்

நல்ல மழைபெய்து நாடு செழிக்க
கடவுளைப் பிரார்த்திக்கின்றோம்.



★







★

எங்கள் 40 குச்சி கோபுரம், சிம்கோ லைட், சிம்கோ சைகிள்
தீப்பெட்டிகளும் 60 குச்சி வேட்டை சிங்கம் தீப்பெட்டிகளும்
கடற்கரை, குளிர்ப் பிரதேசங்களுக்கும் மற்றும் மலபார் மழைக்கும் உகந்தது

*சிறந்த சரக்கு உற்பத்தி! சிறப்பான பொதுஜன ஆதரவு !!*

காந்திய முறைப்படி இனம் குடிசைத் தொழிலாகத் தயாராகும் 3,300 குரோஸ்
தீப்பெட்டிகளும் எங்களுடைய டிப்போக்களில் செலவாகி வருகின்றன.




டிப்போக்கள் : ★ அருப்புக்கோட்டை
ஆத்தூர் ★ கண்ணனூர் ★ கள்ளிக்
கோட்டை ★ கள்ளக்குறிச்சி
கருநாகப்பள்ளி ★ காயங்குளம்
கொல்லம் ★ கோவை ★ குடந்தை
சீர்காழி ★ சேலம் ★ தலைச்சேரி
தஞ்சாவூர் ★ திருவாரூர் ★ திருத்
துறைப்பூண்டி ★ தர்மபுரி ★ தென்காசி
தூத்துக்குடி ★ பழனி ★ பரக்கோடு
பரமக்குடி ★ பாலக்காடு ★ பொள்
ளாச்சி ★ மங்களூர் ★ மாயூரம்
மதுரை ★ மன்னார்குடி ★ ராசிபுரம்
ஈரோடு ★ விழுப்புரம் ★ திருக்
கோவிலூர் ★ உடுமலைப்பேட்டை

கல்கத்தா ஸ்டாக்கிஸ்ட் :
சிங் பிரதர்ஸ், 50, தர்மதோலா தெரு




**சிம்கோ, சிவகாசி. S.I. போன். 63. தந்தி. SIMCO**

மலர் 14 இதழ் 38




தமிழ்த் திருநாடு தன்னைப் – பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்

# மன்மத வரவு

த்தாண்டு பிறந்தது. இந்தப் புண்ணிய வேளையில் 'கல்கி'ப் பத்திரிகை அன்பர்கள் அனைவருக்கும் நல்வாழ்த்துக் கூறுகிறோம்.

நம்முடைய செந்தமிழ் நாட்டில் பரிபூரணமான செழிப்பு ஏற்பட்டு, ஒற்றுமையும் அமைதியும் மேலும் மேலும் வளர்ந்து, தமிழ்நாடு யாதொரு தடையும் இன்றி முன்னேற வேண்டும் என்று திருவருளைச் சிந்திக்கிறோம்.

இன்பப் பெயர் சூடி வரும் மன்மத ஆண்டில் நம்முடைய நாட்டு மக்களுக்குப் பரிசுத்தமான இன்பமும், ஆரோக்கியமான நலங்களும் உண்டாக வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

'கல்கி' அன்பர்களுக்கெல்லாம் இந்தச் சந்தர்ப்பத்தில் எங்களுடைய உள்ளம் தோய்ந்த நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறோம். பேராசிரியர் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மறைந்த பின்பு, இந்தக் 'கல்கி'ப் பத்திரிகையை அவருடைய ஊனும் உடலுமாகவே கருதி வளர்த்து வருகிற பணியில், எங்களுக்கு ஊக்கமும் ஆதரவும் தந்து உற்சாகப்படுத்தி வரும் நமது வாசகர்களுக்கு இந்த ஸ்தாபனத்தின் சார்பில் நன்றி செலுத்துகிறோம்.

புதிதாக வெளி வந்துள்ள மன்மத ஆண்டுப் பஞ்சாங்கம் சொல்லுகிறது: "இந்த மன்மத நாம ஸம்வத்சரத்தில் சுபக் கிரகங்களுக்குப் பத்தொன்பது பதவிகளும் பாபக் கிரகங்களுக்குப் பதினொன்கு பதவிகளும் கிடைத்திருப்பதால், தேசத்தில் ஜலம் அபிவிருத்தியாகி, விவசாயம் அபிவிருத்தியாகி, நெல், கரும்பு, கோதி, கடலை முதலிய தானியங்களுக்கு விலை குறைந்து, ஜனங்கள் பாக்ய ஐஸ்வர்ய யுக்தராய் நாட்டில் சுபிட்சம் ஏற்படும்."

ஜோதிஷப் பலன்களும், பஞ்சாங்க முடிவுகளும் வேறு எந்த விஷயத்தில் பலித்தாலும் பலிக்கா விட்டாலும், இந்த ஹேஷ்யங்களை ஆண்டவனுக்குச் செலுத்திய பிரார்த்தனைகளாக வைத்துக் கொண்டு நூற்றுக்கு நூறு பலிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறோம்.

தமிழ் நாட்டில் அரசியல் முறைமையும், மொழி வளர்ச்சியும், சமூக அமைப்பும் யாதொரு சிக்கலும் இன்றி, நமது தென்னாட்டு மக்கள் பூரண ஒற்றுமையோடு பாரதத்தின் வளர்ச்சியிலே பங்கு கொள்ள வேண்டும் என்பதே நமது இலட்சியம். இந்த இலட்சியத்தோடு அரசியல், தமிழ் வளர்ச்சி, கலை முதலிய எல்லாத் துறைகளிலும் மேலும் மேலும் ஊக்கம், தன்னம்பிக்கை, தைரியம் இவை நிறைந்த இதயத்தோடு சேவை செய்ய வேண்டும் என்பதே நம்முடைய ஆசை. பத்திரிகையின் இந்த ஆசையை நிறைவேற்றுவதில் அனைவருடைய ஆசியும் அன்பும் எப்பொழுதும் துணை நிற்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

'ஒழுக்கமே தேசியப் பெருந் திட்டம்' என்று, சென்ற குடியரசு தினச் செய்தியில் ராஜாஜி குறிப்பிட்டார். இதை யோசிக்க யோசிக்க இதில் எவ்வளவு உண்மை பொதிந்திருக்கிறது என்பது ஆழ்ந்து சிந்திப்பவருக்குத் தெரியும். ஒழுக்கம் என்பது தனிப்பட்டவரின் சொல்லிலும் செயலிலும் ஏற்படுவதோடு, அதுவே நாட்டு நிர்வாகத்திலும் இலக்கிய வளர்ச்சியிலும் பிரதிபலிக்க வேண்டும். நம்முடைய தமிழ் நாட்டுக்கதைகள்,

நாடகங்கள், கவிதைகள், சித்திரங்கள், இசை, இலக்கியம் — எல்லாமே நல்லொழுக்கத்தைக் குறிக்கோளாகக் கொண்டு அமைய வேண்டும். நம்முடைய முன்னேற்றத்தைக் கண்டும் அநுபவித்தும் நம்முடைய சந்ததியாரும், பிற நாட்டாரும் பெருமையும் வியப்பும் கொள்ளும் முறையில் தமிழ் நாடு உருவாக வேண்டும்.

புதுமை என்கிற ஒன்றில் மட்டும் மோகம் கொண்டு பள்ளத்தில் விழலாகாது. உண்மைப் பண்புகளையே பெரிதாகக் கருத வேண்டும்.

மூல விருக்ஷத்திலிருந்து ஜீவனோடு கிளைத்து எழுந்த கொப்பிலேதான் புதிய மலரும் புதிய கனிகளும் உண்டாகும். கலைகளிலும் இலக்கியத்திலும் புதிய வழிகளைக் காணும் போது, இந்தத் தாவர உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது. ஏழை பணக்காரன் என்கிற ஏற்றத் தாழ்வு துயரத்தை உண்டாக்காமல், அமைதி முறையில் சமூகம் மகிழ்ச்சி நிலையை அடைய வேண்டும். எல்லாரும் ஏழைகளாக இருக்க வேண்டும் என்பது அல்ல, சமத்துவத்தின் பொருள்.

கல்வி கலை முதலிய மறுமலர்ச்சித் துறையிலும், பாஷையானது அனைவருக்கும் பொதுவாக இருக்கவேண்டும். ஒரு தாய்மொழி என்பதில் ஏற்றத் தாழ்வு இருக்கக் கூடாது. 'பத்திரிகைத் தமிழ்' என்றும், அது தினசரி அவசரத்தில் பிறக்கும் ஒரு பொருள் என்றும், தாழ்ச்சி சொல்லும் வகையில் இல்லாமல் எளிமையோடு திருத்தமும், ஆழமும், அழகும் கொண்டதாய், எல்லாக் கருத்துக்களையும் வெளியிடக் கூடிய ஆற்றலோடு இலக்கியப் பண்பும் பொருந்தியதாய் நமது தமிழ் மொழி வளர்ந்து படர வேண்டும் என்று விரும்புகிறோம். எத்தனை தூரம் ஆங்கிலம் விரிந்து பரந்திருந்தாலும், அந்த மொழியை உபயோகிக்கிறவர்கள், பேசும் போதும், எழுதும் போதும், வாக்கிய அமைப்புக்களிலும், உச்சரிப்பிலும், எழுத்துக் கூட்டுவதிலும் எத்தனை கவனம் செலுத்திப் பிழைகள் நேர்ந்தால் அவற்றுக்காகக் கூச்சப்பட்டு, எவ்வளவு நிதான நிர்ணயத்தோடு அந்த பாஷையைக் கையாளுகிறார்கள். இந்தக் கவனம் நமது தாய்மொழியில் வேண்டாமா!

முன்னேற்ற மயக்கத்தில் பொருளற்ற பொய் நாகரிகம் நமது நம்பிக்கைகளையும் பண்பாட்டையும் கெடுத்து விடாதபடி காப்பாற்ற வேண்டியது தமிழர்களின் கடமை.

"ஒன்று கண் டீர் உல
 குக்கொரு தெய்வமும்
ஒன்று கண் டீர் உல
 குக்கு உயிர் ஆவது"

என்று பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் ஞான சீலர் திருமூலர் பெருமையோடு பாடினார் அல்லவா! அவ்வாறே, வேதாந்த தேசிகர்,

"காணும் இமயமும் கங்கையும்
 காவிரியும் கடலும்
நானு நகரமும் நாகமும்
 கூடிய நன்னிலமே"

என்று பாடிப் பரவசம் அடைந்தார்.

இப்படிப்பட்ட புனிதமான பரம்பரைக்கு இழுக்கு வராத முறையில் தமிழ்க் குலம் செழித்தோங்க வேண்டும் என்று அன்னையைத் துதிக்கிறோம்.

வாழ்க தமிழ் நன்னாடு! வாழ்க பாரதப் பெரு நாடு!

அட்டைப்பட விளக்கம்

# அவன் தவம்!

மைக்கருங் கண்ணாள் இரதிக்கு
மால் கொண்ட மன்மதா! —குற்றாலக் குறவஞ்சி

மன்மத வருஷம் பிறக்கிறது என்றதும் நமக்குக் காதல் தெய்வமாகிய மன்மதனின் நினைவு வருகிறது. மன்மதனின் மலர்க் கணைகளுக்கு இலக்காகிய இளம் உள்ளங்கள் எத்தனை! இந்தத் தத்துவம் ராமாயண மகாபாரத காலத்திலிருந்து இன்றுவரை உண்மையாக நின்று நிலவி வருவதைப் பார்க்கிறோம். கண்ணுக்குப் புலனாகாத கடவுள் தத்துவத்தைக் காண முடியாதவர்களும் இவ் அனங்கனின் ஆட்சியைப் பற்றி ஐயப்பாடோ மறுப்போ கூறக் கேள்விப்பட்டதில்லை.

இப்படி அதி வீர தீர சாமர்த்தியத்துடன் பவனி வரும் மன்மதனுக்கு ஒரு இடத்தில் தன் வீர தீரப் பிரதாபத்தை யெல்லாம் மூட்டை கட்டி வைக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது. அது எந்த இடம் என்கிறீர்களா! ரதி தேவியின் சந்நிதியின் முன்னால்தான். அவளுடைய கடைக் கண் பார்வைக்கு, அஞ்சனம் தீட்டிய விழியின் கடை நோக்குக்குத் தவம் கிடக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது மன்மதனுக்கு. எந்தக் காதல் நோயை உலகத்தில் பரப்புகிறானோ அந்த நோய்க்கு மன்மதனும் உள்ளாகித்தான் இருக்கிறான்!

ஆண்டாளின் திவ்ய ஸ்தலமாகிய ஸ்ரீவில்லிபுத்தூர் ஆலயத்தில் உள்ள அருமையான ரதி சிலையின் பாணியைப் பின்பற்றி இவ்விதம் அட்டைச் சித்திரத்தை வரைந்துள்ளார் நமது ஓவியர் மணியம்.






இந்தியா ஒன்றுபட்டு வாழவேண்டுமானால், ஒருமித்த மக்கட் தொகுதியாக முன்னேற வேண்டுமானால், சிறு விஷயங்களில் நமக்குள் சச்சரவும் போட்டியும் நடப்பது தவறாகும். போட்டிகள் இருந்து கொண்டே போனால் இந்திய நாட்டின் சக்தி வளராது, குறைந்தே போகும்.

ஒரு குறிப்பிட்ட பாஷையைப் பேசுகிறவர்கள் தங்கள் பாஷையைக் கற்க வேண்டும் என்று மற்றொரு சமூகத்தாரைப் பலாத்காரம் செய்வது அன்பு முறைக்கு மாறுபட்ட செயலாகும். அது வெற்றி பெறாது. ஒரு சர்க்கார் புதிய வரி ஒன்றைக் கொடுக்கச் சொல்லலாம். கொடுக்க இஷ்டம் இல்லாதவர்களை வற்புறுத்தியும் வசூலிக்க முடியும். ஆனால் ஒரு குறிப்பிட்ட புது பாஷையைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்வது வெறுப்பிலும் துவேஷத்திலும் முடியும். இதை நமது பிரதம மந்திரி நேரு நன்றாக உணர்ந்திருக்கிறார். மற்றவர்கள்தான் சரியாக அறியவில்லை. பாஷைப் பிரச்னையில் ஒற்றுமையும் வெற்றியும் அடைய வேண்டுமானால் அன்பு வழியே சரியான மார்க்கமாகும். நம்முடைய ஹிந்திப் பிரமுகர்கள் இதை உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

அரசியல் சட்டத்தில் ஹிந்தி அமுலுக்கு வருவதற்காக ஒரு தேதியைக் குறிப்பிட்டிருப்பது உண்மை. திருத்த வேண்டுமானால் அந்தக் கெடுவைத் திருத்த வேண்டுமே ஒழிய, அதை வைத்துக் கொண்டு மிரட்டுவது தவறு.

குழந்தைகளை ஹிந்தி படியுங்கள் என்று சொல்வது நியாயம். "நீங்கள் ஹிந்தி படித்தால் உங்களுக்கு மேல் உத்தியோகம் கிடைக்கும்" என்று ஆசை காட்டுவது சரி. பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பே நான் சொன்னேன்: "சுதந்திர இந்தியாவில் உத்தியோகங்களுக்குக் கஷ்டப்படுவீர்கள். இப்பொழுதே ஆரம்பியுங்கள். என்றைக்காவது நாம் சுதந்திர ஆட்சி பெறுவோம். இந்தியா முழுதும் ஒரு ஆட்சியாகும். தனித் தனிச் சிறு நாடுகளாகப் பிளவுபட்டுப் போவதற்கு இனி இடமில்லை. ஹிந்தி படியுங்கள். பரீட்சை வேண்டாம், சும்மா படியுங்கள்" என்று வற்புறுத்தினேன். இதை ஒரு கூட்டத்தார் அப்பொழுது ஆட்சேபித்தார்கள். 'உத்தியோகம்' 'உத்தியோகம்' என்று எப்பொழுதும் எண்ணி எண்ணி ஆசைப்பட்ட கூட்டத்தார்களே ஆட்சேபித்தார்கள். காரியங்களைக் குந்தகப் படுத்தினார்கள்.

இதையெல்லாம் எண்ணி இப்போது வருத்தப்பட்டுப் பயனில்லை. ஆனால் இப்போது பெரிய உத்தியோகங்களுக்கு, அரசாங்கத்தில் பொறுப்பு வாய்ந்த ஸ்தானங்களுக்கு, அன்னிய பாஷையில்—தமிழருக்கு அன்னியமான ஒரு பாஷையில்—தான் எல்லா பரீட்சையும் செய்வோம், அதில் தேறியவர்களைத்தான் ஸ்தானங்களுக்கு எடுப்போம் என்று சொன்னால் யாருக்குத்தான் கோபம் வராது. எனக்குமே கோபந்தான்.

தமிழ்க் குழந்தைகள் ஹிந்தியையும் படிப்பார்கள், தேறுவார்கள்; எந்த பாஷையையுமே படித்துத் தேறுவார்கள். ஆங்கிலத்தையே படித்து எல்லாப் பெரிய உத்தியோகங்களிலும் தங்களையே தேர்ந்தெடுக்கும் அளவுக்குப் போட்டியில் தமிழர்கள் தேறியிருக்க வில்லையா? ஆங்கிலம் படித்தவர்களுக்கு ஹிந்தி ஒரு கஷ்டமா? இல்லை. தமிழ்க் குழந்தைகள் ஹிந்தியைப் படித்து விடுவார்கள். சந்தேகமில்லை. சந்தேகம் எதுபற்றியென்றால், இன்னும் பால் குடிக்கும் பருவம் தீராத ஹிந்தி பாஷையாகிய குழந்தையைப் பற்றித்தான். ஹிந்தி பாஷையானது தற்போது பலவீனமான நிலையில் இருக்கிறது. ஆங்கிலத்துக்குச் சமம் இல்லை என்பதில் வியப்பில்லை. தமிழுக்கும் சமம் இல்லை. வங்காளி பாஷைக்கும் சமம் இல்லை. மராட்டி பாஷைக்கும் சமம் இல்லை. இந்த நிலைமையில் செய்ய வேண்டிய கடமை என்ன? தமிழ்க் குழந்தைகளை மிரட்டுவது அல்ல. ஹிந்தி பாஷையை மிரட்டி அதைக் கொஞ்சம் மேலே தூக்க வேண்டும்! எல்லா விஷயங்களிலும் ஹிந்தி பாஷை மூலமே பரீட்சை செய்யும் அந்தஸ்துக்கு இன்னும் ஹிந்தி வரவில்லை.

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

டில்லி மக்கள் சபையில் ஏதாவது ஒரு விஷயத்தை எடுத்துப் பேசினால், ஆங்கிலத்தில் பேசும் போது, பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு முதல் ஓரளவு படித்த அங்கத்தினர் வரை, சுருக்கமாகப் பேசி முடிக்கிறார்கள். விஷயத்தை ஐயமறச் சொல்லி விடுகிறார்கள். ஆனால் ஹிந்தி பாஷையை உபயோகிக்கும் போது, திரும்பத் திரும்ப ஒரு முறை சொன்னதைப் பன்முறை கூறி விஷயங்களை விளக்கித் துப்புரவாய்ச் சொல்லக் கஷ்டப் படுகிறார்கள். மொழியின் வறுமையும், வளர்ச்சிக் குறைவும், திட்டமான பொருளில் சொற்களைப் பிரயோகிக்கும் வழக்கம் இன்னும் ஹிந்தியில் ஏற்படாமல் இருப்பதுமே, இந்தக் கஷ்டத்துக்குக் காரணம். ஆனபடியினால் தமிழ் மக்களைப் பள்ளிக்கூடம் போகச் சொல்வதைப் பார்க்கிலும், ஹிந்தி மொழியைப் பள்ளிக்கூடம் போகச் சொல்லுவது முதற் கடமை. பரீட்சையில் தேற வேண்டியது தமிழ்க் குழந்தைகள் அல்ல. ஹிந்தி பாஷையானது பரீட்சையில் முதலில் தேறி ஆக வேண்டும்.

இத்தனை எழுதிய போதிலும் மனக் கசப்பு கூடாது. வெறுப்பு உதவாது. இந்திய முன்னேற்றத்துக்கும் இந்திய ஒற்றுமைக்கும் என்ன செய்ய வேண்டுமோ அதைத் தமிழ் மக்கள் செய்யாமல் இருந்துவிட மாட்டார்கள் என்பதை நம்முடைய ஹிந்தி சகோதரர்களுக்குச் சொல்லுகிறேன்!

உத்தரப் பிரதேசத்தில் இருக்கும் மக்களிடம் போய் "தமிழ் மிக நல்ல பாஷை. ஆரிய நாட்டின் பண்பாடு நிறைந்துள்ள பழைய பாஷை. இதை நீங்கள் படித்துத் தேர்ந்தால்தான் உங்களுக்கு உத்தியோகம்" என்று சொன்னால் அவர்களுக்கு எப்படியிருக்கும்! உள்ளம் பதைக்கும் அல்லவா! நம்முடைய மலையாளத்துச் சகோதரர்களை எல்லாப் படிப்பு விஷயங்களிலும் தமிழில் பரீட்சை செய்து தேறச் சொன்னோமா! கன்னட ஜில்லாவில் உள்ள மதி நுட்பம் கொண்ட மக்களுக்குத் தமிழில்லாமலே வேலைகள் கொடுக்கவில்லையா! ஜனநாயகம் என்றால் கொடுமையல்ல. அட்டகாசம் அல்ல. நியாயமும் விசால உணர்ச்சியும் சேர்ந்து இலங்க வேண்டிய ஒரு தத்துவம். தனி ஒரு மனிதனும் சந்தோஷம் அடைய வேண்டிய அமைப்பு, குடியரசு. பெரிய பெரிய மக்கட் தொகுதியைப் பற்றியோ சொல்ல வேண்டியதே இல்லை.

சாந்த முறையில் நடவடிக்கைகள் நடத்தினால் தேசீய பாஷை வெற்றி அடையும். வளர்ச்சியும் பெறும். ஆங்கிலத்தோடு போட்டி போடும்படியான சக்தியை இன்றில்லா விட்டால் சில நாட்களிலாவது ஹிந்தி பாஷையானது பெறும். அவசரப் பட்டால் வழி அடைபட்டுப் போகும். ஹிந்தி பேசுவோர்களுக்கிடையிலேயே இந்த விதமான ஹிந்தி, அந்த விதமான ஹிந்தி, என்று பிளவுகள் உடனே தோன்ற ஆரம்பிக்கும். காசி ஹிந்தி ஒரு விதமாக இருக்கும். அலகாபாத் ஹிந்தி இன்னொரு விதமாக இருக்கும். டில்லி ஹிந்தி மூன்றாவது விதமாக இருக்கும். இவற்றினுக்குள் தீராத போட்டி உண்டாகும்.

தமிழ், ஹிந்தி, வங்காளம் எந்த இந்திய பாஷையுமே அறியாத அன்னிய மேனாட்டு நிபுணர்களைத் தருவித்துப் பொறுப்பும் அதிகாரமும் அவர்களிடம் ஒப்புவிக்கிறோம் அல்லவா! எந்த ஒரு இந்திய பாஷையும் படிக்காத மேனாட்டு நிபுணர்கள் ஒருவர் பின் ஒருவராக அழைப்புப் பெற்று இந்தியாவுக்கு வந்து கொண்டுதானே இருக்கிறார்கள்! இந்நிலையில் இந்தியாவில் பிறந்து, படித்து, பண்பும் கல்வியும் பெற்ற இந்திய மக்களுக்கு மட்டிலுமா தடை! இந்தத் தவறான நோக்கத்தை விட்டு விட்டு, குழப்பம் உண்டாக்கும் இந்த யோசனைகளை உடனே நிறுத்திவிட வேண்டும்.

பரீட்சை முழுவதையுமே ஹிந்தியில் நடத்துவோம் என்று சொல்கிறார்களே அதற்குத் தான் ஆட்சேபணை. பரீட்சையின் பல அம்சங்களுக்குள், ஹிந்திக்காக ஒரு தனி எழுத்துப் பரீட்சையோ அல்லது பேச்சுப் பரீட்சையோ வைத்து அதற்கு என்று ஒரு சில மார்க்குகள் ஒதுக்கி வைத்தால் யாருக்கும் ஆட்சேபம் இராது. பரீட்சை முழுவதுமே, எல்லா அம்சங்களுமே, கேள்விகளும் விடைகளும் ஹிந்தியாகவே இருக்க வேண்டும் என்று சொல்வது தான் பிசகு. ஜனநாயக தத்துவத்துக்கு விரோதம். ஒரு பிரதேசத்தாருக்குப் பட்சபாதம் செய்தவாறாகும்.

"மற்றவர்கள் உடலில் உன் உயிரை வைத்துப் பார்; உன் உடலில் மற்றவர்கள் உயிரை வைத்துப் பார். அப்படிப் பார்த்தாயாகில் பின் கோபம் ஏது, வருத்தம் ஏது, வெறுப்பு ஏது!" என்று ரிஷிகள் உபநிஷத்தில் சொன்னார்கள் அல்லவா! இதை நம்முடைய ஜனநாயகத் தலைவர்கள் பார்த்துப் படித்து அவசரப்படாமல் இருக்க வேண்டும்.

அரசியலுக்காக பாஷையா, அல்லது பாஷைக்காக அரசியலா என்கிற கேள்வியை ஆராய வேண்டும். எந்த விஷயத்தை நிர்வாகம் செய்வதிலும் மக்களுடைய உணர்ச்சி வேகங்களை மறந்து விடலாகாது. மிகப் பிற்போக்கான தென் ஆப்ரிக்க அரசாட்சியிலுங் கூட, ஆங்கில பாஷையைப் புறக்கணித்து விட்டு, டச்சுக் கலப்பான போயர் பாஷையையே அவர்கள் வற்புறுத்த வில்லை. அதை விடவா நம்முடைய ஏக பாஷைப் பித்தர்களின் அவசரப் பைத்தியம் முற்ற வேண்டும்!




வருஷம் தவறினாலும், கம்பன் புகழ் பாடி, கன்னித் தமிழ் வளர்க்கும் அருந்தொண்டை ஆண்டுதோறும் காரைக்குடியில் திரு சா. கணேசன் புரிந்து வரத் தவறுவதில்லை! இவ்வாண்டு ஏப்ரல் 4, 5, 6, 7 தேதிகளில் கம்பன் திருநாள் காரைக்குடியிலும் நாட்டரசன் கோட்டையிலும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இக் கம்பர் விழாவைப் பற்றிய கட்டுரை அடுத்த இதழில் வெளியாகும். இப்பக்கத்தில் அவ்விழாவின் சில காட்சிகளைக் காணலாம்.

1. 'சிறந்த தம்பி யார்?' என்ற தலைப்பில் நடந்த பட்டி மன்ற விவாதத்தில் கலந்து கொண்ட அறிஞர்கள். 2. கம்பன் திருநாளைத் துவக்கி வைத்த நிதி மந்திரி சுப்ரமணியமும், தலைவர் தனிநாயக அடிகளும். 3. கூட்டத்தின் ஒரு பகுதி. 4. சுவாமி சித்பவானந்தர் தலைமையில் திரு மகராஜன் பேசுகிறார். 5. வித்வான் மு. ராகவய்யங்கார் தலைமையில் திரு ம. பொ. சி. கம்பன் புகழை முழங்குகிறார்.

## சமாதான ஒளி

பாண்டுங்கில் ஆசிய ஆப்பிரிக்கா மகாநாடு ஏப்ரல் 18-ந் தேதி ஆரம்பமாகிறது.

## அவள் கவலை

பாகிஸ்தான் பல கவலைகளுக்கு உள்ளாகி யிருக்கிறது.

## அதன் சுபாவம்.




"நிதி கார்ப்பரேஷன்கள் சரியாக இயங்கவில்லை!" —டி. டி. கே.

## யுத்த முழக்கம்!




"பார்லிமெண்டில் விவாதிக்கப்படும் இந்து சட்டத் திருத்த மசோதா கடுமையாக ஆட்சேபிக்கப்படும்" என்று இந்து மகா சபைத் தலைவர் சவர்க்கர் விடுத்துள்ளார்.



# என்ன சேதி



## கல்வி மந்திரியின் விளக்கம்

பொறுப்பு வாய்ந்த அகில இந்திய உத்தியோகங்களுக்கான பரீட்சைகள் ஹிந்தி பாஷையின் மூலமாகவே நடத்தப்படும் என்ற மத்திய அரசாங்கத்தின் ஆலோசனையைப் பற்றி கல்வி மந்திரி திரு சுப்ரமண்யம் சென்னை அரசாங்கத்தின் கருத்தைத் தெளிவாக்கி யிருக்கிறார். ஹிந்தி பேசாத மற்ற மக்களுக்கு இப்படி ஒரு இக்கட்டான நிலையை ஏற்படுவதைச் சென்னை அரசாங்கம் ஆட்சேபிக்கிறது என்பதை வெளியிட்டிருக்கிறார். மத்திய அரசாங்கம் நிச்சயமான முடிவுக்கு இன்னும் வரவில்லை என்றும், அதற்கு முன்பு இவ் விஷயங்களைத் தீர ஆலோசிக்கும் என்று தாம் நம்புவதாகவும் திரு சுப்ரமண்யம் கூறினார். அவ்விதமே எதிர்பார்ப்போம். தமிழ் நாட்டை பலமாகப் பாதிக்கும் இவ்விஷயத்தில் கல்வி மந்திரி அவர்கள் தமது கருத்தை ஐயந்திரிபுக்கு இடமின்றித் தெளிவாகக் கூறியிருப்பதைப் பாராட்டுகிறோம்.

## நானூறு வருஷ சபதம்!

பீஷ்ம சபதம், பாஞ்சாலி சபதம் என்றெல்லாம் கேள்விப்படுகிறோம். அவர்களுடைய சபதங்கள் நிறைவேறிய அற்புத வரலாறுகளைப் புராணக் கதைகள் கூறுகின்றன. நானூறு ஆண்டுகளுக்கு முன் சித்தூர்க் கோட்டையிலிருந்து வெளியேறிய ஒரு வீர சமூகத்தார் ஒரு சபதம் செய்தார்கள். சித்தூர் அன்னியர் ஆதிக்கத்தின் கீழ் அடிமைப் பிரதேசமாக இருக்கும் வரையில் தாங்கள் சித்தூருக்குள் பிரவேசிப்பதில்லை என்று பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள். அந்தப் பிரதிக்ஞையை நானூறு ஆண்டுகளுக்குப் பிறகு சென்ற வாரம் அந்த வீரர்களின் சந்ததிகளான நாலாயிரம் காடியா லோகார்கள் சுதந்திரச் சித்தூருக்குள் பிரவேசித்ததன் மூலம் நிறைவேற்றினர். ஜெய பேரிகைகளும் துந்துபி வாத்தியங்களும் முழங்க ஆயிரக்கணக்கான லோகார்கள் அடங்கிய ஊர்வலம் நேருஜியின் தலைமையில் சித்தூருக்குள் சென்றது. எவரையும் மெய் சிலிர்க்கச் செய்யும் அந்த அற்புதக் காட்சியை லட்சக்கணக்கான மக்கள் கண்டு களித்தனர். அக்பர் சக்கரவர்த்தியை எதிர்த்து இறுதி வரையில் போராடிய சரித்திரப் பிரசித்தி பெற்ற ராணா பிரதாப் சிங்கின் படத்தை லோகார்கள் ஊர்வலமாக எடுத்துச் சென்றார்கள். அப்போது சித்தூர்க் கோட்டையில் உள்ள விஜய ஸ்தம்பத்தின் உச்சியில் நேருஜி பாரத மணிக் கொடியை ஏற்றுவித்து, சித்தூரின் சுதந்திரத்துக்காக ராணா பிரதாப் முதலிய ரஜபுத்திர வீரர்களும் பத்மினி முதலிய வீராங்கனைகளும் செய்த உயிர்த் தியாகத்தைப் பாராட்டிப் பேசினார்.

சித்தூரை அக்பர் சக்கரவர்த்தி வென்ற போது அங்கு இருந்த முப்பதினாயிரம் ஜனங்களும் அவரது ஆதிக்கத்துக்கு அடி பணிய மறுத்து, அந் நகரிலிருந்து வெளியேறினர். மீண்டும் சித்தூர் சுதந்திரம் பெறும் வரையில் தாங்களும் தங்களுடைய சந்ததியாரும் ஓரிடத்திலும் நிரந்தரமாகத் தங்காமல் ஊர் ஊராகத் திரிந்து வாழ்க்கையை நடத்தி வருவதென்று பிரதிக்ஞை செய்து கொண்டார்களாம். அவர்களுடைய சந்ததிகள் மறுபடியும் சுதந்திரர்களாகச் சித்தூருக்குள் பிரவேசித்ததன் மூலம் அவர்களுடைய மூதாதையரின் சபதம் நிறைவேறியது.

## உடன்படிக்கையும் நடவடிக்கையும்

வல்லரசுகளின் விபரீதப் போக்கினால் ஆசியாவில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்த்து, அமைதி உண்டாவதற்கான வழி வகைகளை ஆராய்வதே பாண்டுங்கில் நடக்கப் போகும் மகாநாட்டின் நோக்கமாகும். மத்திய கிழக்கில் முக்கிய ஸ்தானம் வகிக்கும் எகிப்தும் அந்த மகாநாட்டில் கலந்து கொள்வதால், ஆசியாவில் மாத்திரமல்ல, மத்திய கிழக்குப் பிரதேசத்திலும் அமைதி ஏற்படுவதற்கு எகிப்து ஒத்துழைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அணுகுண்டு சம்பந்தமாக ஐரோப்பிய வல்லரசுகள் கடைப்பிடிக்கும் கொள்கையை ஆராய்வதோடு, அணுகுண்டுப் பரிசோதனையில் சற்றும் கலந்து கொள்ளாத நிரபராதியான நாடுகளை இந்தச் சோதனைக்கு உள்ளாக்காமல் இருக்க வேண்டும் என்பதே ஆசிய நாடுகளின் ஆசை. அணுகுண்டுபலத் திமிரினால் அமெரிக்காவும் பிற வல்லரசுகளும், நிரபராதி நாடுகளில் ஆபத்து விளைப்பதைத் தடுப்பதற்கு உலகத்திற்கு உரிமையும் கடமையும் உண்டு என்பதை ஏனோ மறந்து விட்டன. ஆசிய நாடுகளில் தங்கள் பரீட்சையை நடத்தி அபாயம் நேரும் வண்ணம் செய்து விடுவார்களோ என்ற




நா. ராமகிருஷ்ணன்

ஏப்ரல் ௨-ந் தேதி டி. கே. ஜெயராமன் அவர்கள் பாடினர். கல்யாணி, பைரவி ஆலாபனைகள், ராக பாவம் கொண்ட சங்கதி களுடன் நன்ருக இருந்தன. பைரவி ஆலாபனை செய்யும் போது, குரல் சில சமயம் உதவி புரியவில்லை. சங்கதிகளின் இறுதி பாகங்கள் பூரண பரிமளிப்புடன் வெளி வரவில்லை. கீர்த்தனை (கோவிந்தகடய) கச்சிதமாக இருந்தது.

மறுதினம் கனக்காடு எஸ். மஹாதேவனின் இசையில் சாரீரம் இடர் செய்து கொண்டிருந்தது. சிலசமயம், முக்கியமாகக் கற்பனஸ்வரம் பாடும்போது, ச்ருதி லயமின்றி இருந்தது. பிலஹரி ஆலாபனை நல்ல அபிப்பிராயத்துடன் இருந்தது. தாரஸ்தாயி சங்கதிகள் ச்ருதியுடன் ஒன்ருமல் சுகம் குறைந்து இருந்தன. பைரவி ஆலாபனை அழகாக இருந்தது. பைரவி கீர்த்தனையில் (அபிராம) பாடிய நிரவலும், ஸ்வரமும் விதரணையாக இருந்தன.

அன்று சுசீலா அச்சுதராமனின் பந்துவராளி, சங்கராபரண ஆலாபனைகள் நன்ருக இருந்தன. சங்கராபரண ஆலாபனையில் தாரஸ்தாயி சஞ்சாரங்களைச் சுக பாவ நோக்குடன் பாடியிருக்கலாம். சங்கராபரணக் கீர்த்தனை (சங்கராச்சார்யம்) கச்சிதமாகவும், அழகாகவும் பாடப்பட்டது. புரந்தர தாஸரின் ஹம்ஸாநந்திக் கீர்த்தனை (கும்மனே) பொருள் பாவத்துடன் அழகாக இருந்தது.

ஏப்ரல் ௪-ந் தேதி கோட்டுவாத்திய இசை விருந்தளித்தார் ஏ. நாராயணய்யர். அவரது ராமக்ரியா (காமவர்த்தனி) ஆலாபனை பாவத்துடன் இருந்தது. பேகடா ஆலாபனையும், மத்யம கால சங்கதிகளைத் தேவையான அளவு கலந்து வாசித்திருந்தால் இன்னும் பரிமளிப்பாக இருந்திருக்கும். வராளி அழகாக இருந்தது. மத்யம கால சங்கதிகள் இன்னும் மிடுக்காக இருக்க வேண்டும். கீர்த்தனை (கோரேமி) நன்ருக வாசிக்கப்பட்டது.

அருந்தேதி பாடிய பி. என். ராகவராவின் பூர்வ கல்யாணிக் கீர்த்தனை (ஞானமொஸக) கச்சிதமாக இருந்தது. அதில் பாடிய கற்பனஸ்வரம் இன்னும் கச்சிதப்படுத்தப்பட்டிருக்க வேணும். தோடி ஆலாபனையும், கீர்த்தனையும் (கலிதீரவந்தருள்) பாவத்துடன் இருந்தன.

மறுநாள் கோட்டையூர் அண்ணுமலை லாகவமாகப் பாட முடியாமல், அவரது சாரீரம் சிரமம் கொடுத்துக் கொண்டிருந்தது. ஸ்ரீரஞ்சனி ஆலாபனை நன்ருக இருந்தது. கீரவாணியை இன்னும் பாவத்துடன் ஆலாபனை செய்திருக்கலாம். கீர்த்தனைகள் பொருள் பாவத்துடன் இருந்தன.

அதே தினம் பாடிய ஏ. லக்ஷ்மி சாரீரத்தின் வரையை உணர்ந்து கச்சிதமாய்ப் பாடினர். ஆரபி, தோடி ஆலாபனைகள் ராக பாவத்துடன் இருந்தன. தோடி கீர்த்தனை (மூன்றுராவண) அர்த்த பாவத்துடன் பாடப்பட்டு, நேர்த்தியாக இருந்தது.

எஸ். ஸ்ரீனிவாசராவ் அன்றைய தினம் கல்யாணி ராகத்தில் 'ராகம், தானம், பல்லவி' பாடினர். ஒரு தரமான நிகழ்ச்சி. எல்லா அங்கங்களிலும் கற்பனை நிரம்பி இருந்தது. ஆலாபனையில் மத்யம கால மூர்ச்சனைகள் கவர்ச்சியாக இருந்தன. சங்கதிகளுக்கிடையே அதிக இடை நேரம் கொடுத்துப் பாடினல் அவை இன்னும் பரிமளிப்பாக இருந்திருக்கும். குழைவு சங்கதிகளும் அதிகமான இடம் பெற்றிருக்க வேண்டும். தானம் சிறிது விரிவாக இருந்திருக்கலாம். சதுஸ்ர ரூபக தாளத்தில் இரண்டு களைச் சவுக்கப் பல்லவி பாடினர். நிரவல் அழகிய கற்பனைகளுடன் இருந்தது.

---

அச்சம் ஆசியாவில் இருந்து வருகிறது. இது நேராது என்ற ஒரு உறுதி பிறக்குமானல், அதுவே பாண்டுங் மகாநாட்டுக்கு ஒரு பெரும் வெற்றியாகும்.

" இந்தியாவுக்கும் எகிப்துக்கும் ஆயிரக் கணக்கான வருஷங்களாக நெருங்கிய உறவு இருந்து வந்திருக்கிறது " என்று இந்தியாவில் உள்ள எகிப்து ஸ்தானிகர் சென்ற வாரம் குறிப்பிட்டார். இரு நாடுகளுக்கும் பல விதத்திலும் நெருங்கிய ஒற்றுமை உண்டு. இரு நாடுகளும் புராதன சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தவை. இந்தியாவைப்போல் எகிப்தும் அன்னியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக எத்தனையோ கஷ்ட நஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தது. இன்னும் ஐக்கிய நாடுகள் சபையிலே சர்வதேசப் பிரச்னைகளை ஒட்டி இரு நாடுகளின் கொள்கையும் ஒன்ருக இருந்து வருகிறது. இந்தியாவைப் போல் எகிப்தும் காலனி முறையையும் நிற வேற்றுமையையும் எதிர்த்துப் போராடி வருகிறது. இந்தியா - எகிப்து நட்பு உடன்படிக்கை இந்த இரு நாடுகளுக்கும் மாத்திரமின்றி, ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் வல்லரசுகளால் இழைக்கப்பட்டு வரும் அநீதிகள் ஒழிந்து, அமைதி ஏற்படுவதற்குப் பேருதவியாக இருக்கும் என்று நம்பலாம்.

# சந்திரிகா

'சோமு'

## 1. மலைக் கோட்டை

இரண்டு வாரங்களுக்கு முன்பு வெளி வந்த ஆங்கிலப் பத்திரிகை ஒன்றில், 'சர்ப்ப கந்தி' என்ற மருந்துச் செடியைப் பற்றிய ஒரு குறிப்புப் பிரசுரமாகி யிருந்தது. அதைப் பார்த்ததும் எனக்குப் பெரும் வியப்பு உண்டாகி விட்டது!

இமயமலைச் சாரலில் நடந்து சென்று கொண்டிருந்த யாத்திரிகன் ஒருவன் ஒரு பேரதிசயத்தைக் கண்டு திகைத்தானாம்.

மங்கலான சிவப்பு நிறத்தில் கொத்துக் கொத்தாக மலர்கள் பூத்து நின்ற ஒரு சின்னஞ் சிறு செடிக்கு அருகில், கீரிப் பிள்ளை ஒன்று நின்று கொண்டு, அந்தச்





செடியின் இலைகளை மிகப் பிரியத்தோடு சாப்பிட்டுக் கொண்டிருந்ததாம். அதிசயித்து நின்ற அந்த மனிதனுக்கு இதன் காரணத்தை அறிய வேண்டும் என்று ஆசை உண்டாயிற்றாம். புதரின் மறைவில் ஒளிந்து நின்று கொண்டே பார்த்தானாம். கொஞ்ச நேரத்தில் அந்தக் கீரிப் பிள்ளை அங்கிருந்து கிளம்பிச் சென்று சற்றுத் தொலைவிலே ஊர்ந்து கொண்டிருந்த ஒரு நல்ல பாம்பைத் தாக்கிற்றாம். தாக்கி அந்த நல்ல பாம்பைக் கொன்று உட்கொண்டு விட்டுப் பரம நிம்மதியோடு மேலே சென்றதாம் அந்தக் கீரிப்பிள்ளை!

இதன் பயனாக என்ன நேர்ந்தது என்று நினைக்கிறீர்கள்! மங்கிய சிவப்பு மலர்களோடு கூடிய அந்தச் செடியின் இலைகளை மனிதன் ஆராய ஆரம்பித்தான்! அந்தச் செடி பாம்புக் கடி விஷத்துக்குச் சரியான மருந்து என்றும், இமயமலையிலுள்ள அருமையான மூலிகைகளில் தலை சிறந்தது என்றும் தெரிய வந்ததாம்!

“சர்ப்ப கந்தி” என்று அழைக்கப்படுகிற இந்த மூலிகையைப் பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு ஜெர்மன் டாக்டர் நுட்பமாக ஆராய்ந்து பார்த்து, அதனுடைய அதிசய சக்திகளை யெல்லாம் கண்டு தேர்ந்து, வைத்திய உலகுக்கு எடுத்துச் சொன்னாராம்.

பத்திரிகையில் வெளியான இந்தக் குறிப்பில் நான் அப்படி ஒரேயடியாக வியப்படையும்படி என்ன இருக்கிறது என்று நீங்கள் ஆச்சரியப்படக் கூடும்! உண்மையில் நான் வியக்கும்படியாக இரண்டு செய்திகள் அதில் இருந்தன. ஒன்று, இந்த மூலிகையை வடநாட்டில் ‘சந்திரிகா’ என்று அழைக்கிறார்கள் என்பது. இரண்டு, இந்த மூலிகை பாம்பின் விஷத்தைக் குணப்படுத்துவதோடு, பைத்தியம், நரம்பு அதிர்ச்சி, இரத்தக் கொதிப்பு முதலிய நோய்களுக்கும் கை கண்ட மருந்தாம்.

‘சந்திரிகா’ என்ற பெயரில் பைத்தியத்தையும் விஷ நோயையும் தீர்க்கக் கூடிய ஒரு மருந்து இருக்கிறது என்று இரண்டு வாரங்களுக்கு முன்பு வரை எனக்குத் தெரியாது. ஆனால் சந்திரிகா என்ற ஒரு அதிசயப் பெண் இன்னொரு அதிசய மனிதனுடைய வாழ்வில் இத்தகைய ஒரு அரும் மருந்தாக, பைத்தியத்தையும் விஷ நோயையும் தீர்க்கும் பரம சஞ்சீவியாக விளங்கினாள் என்பது மட்டும் ஏற்கெனவே எனக்குத் தெரிந்த விஷயம்.

‘சந்திரிகா’ என்று பெயர் சூட்டிய பெற்றோர்களுக்கு இந்த மூலிகையைப் பற்றி மட்டும் தெரிந்திருக்குமானால், அந்தப் பெயர்ப் பொருத்தத்தைக் குறித்து எத்தனை சந்தோஷப் பட்டிருப்பார்கள் அவர்கள்! உண்மையில் சந்திரிகா என்ற மூலிகையைப் பற்றி முதன் முதல் ரவீந்திரன் அறிந்து கொண்டதும் எத்தனை சந்தோஷப்பட்டான் அவன்! அவனைப் பிடித்த அந்த விஷ நோயைத் தீர்த்து, அவனுடைய பைத்தியத்தையும் குணப்படுத்திய பெருமை மெய்யாகவே ‘சந்திரிகா’வைத்தானே சாரும்?—இதையெல்லாம் எண்ணும்போதுதான் மனிதர்களுடைய பெயரிலுங் கூட ஏதோ ஒரு மாய சக்தி இருந்து கொண்டு வாழ்க்கையை எப்படி யெல்லாமோ ஆட்டி வைக்கிறது என்று சொல்லத் தோன்றுகிறது.

ஆம்; இன்று ரவீந்திரனுடைய வாழ்க்கையை எண்ணிப் பார்க்கும்போது, இப்படித்தான் ஒரு விநோதமான நினைப்பு உண்டாகிறது.

ஜோதிஷம் என்ற சாஸ்திரத்தை ஆராய்ந்து கற்றவர்கள் மனிதர்களுடைய பெயருக்கும், அவர்களை ஆட்டி வைக்கும் கிரகங்களுக்கும் ஒரு தொந்தம் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இதனுடைய பொருத்தத்தை ஆராய்வதற்கு வேண்டிய ஆதாரமோ அல்லது பயிற்சியோ எனக்குக் கிடையாது. ஆனால் ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்ல முடியும். எப்படியெல்லாமோ வட்டம் சுற்றிய ரவீந்திரனுடைய வாழ்க்கைச் சுழலில், சந்திரிகா என்ற பெண்ணரசி தோன்றி எத்தனையோ முக்கியம் பெற்று விளங்கினாள்! இதயங்களின் ஆசா பாசங்களுக்கும், மனிதர்களுடைய சூழ்ச்சிகளுக்

கும் இரையாகிப் போன ஒரு உத்தமனுடைய வாழ்வில் சரியான தருணத்தில் ஒளி கொடுத்தவள் சந்திரிகைதான். இதை எண்ணும்போது, பெண்களின் ஆத்ம சக்திக்குத்தான் எத்தனை வலிமை இருக்கிறது என்று அதிசயிக்கிறேன்.

* * *

அன்று ஞாயிற்றுக் கிழமை. விடுமுறை நாளல்லவா? வழக்கமாகவே சின்னக் கடைத் தெருவில் ஜன நடமாட்டம் அதிகமாக இருக்கும். அன்றோ சொல்லவே வேண்டாம். வெகு நாளாக எதிர்பார்த்த அந்த நிகழ்ச்சி நூற்றுக்கால் மண்டபத்தில் அன்று நடைபெற்றது! பிறகு, கூட்டத்துக்குக் கேட்பானேன்?

மலைக் கோட்டையில் உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குச் செல்லும் படிக்கட்டுகளில் எல்லாம் ஒரே ஜனத்திரள்! மண்டபத்துக்கு உள்ளே யிருந்து சங்கீதம் சுகமாகக் காற்றிலே மிதந்து வந்து கொண்டிருந்தது.

அபூர்வமான ராகத்தில் அருமையாக அமைந்த ஒரு தில்லானா அது. சங்கீதம் தெரிந்தவர்கள் அது தான் ரவிசந்திரிகா ராகம் என்று சொல்லிக் கொண்டார்கள்.

மலை வாசல் படியில் வைக்கப் பட்டிருந்த ஒலிபெருக்கியில் வாத்திய இசை விம்மிக் கொண்டிருந்தது. அந்த இன்னிசையிலே பின்னித் தவழ்ந்து கொண்டு சலங்கையின் 'ஜல் ஜல்' என்ற இன்னொலியும் வந்து கொண்டிருந்தது.

ஒலிபெருக்கியைச் சுற்றி மக்கள் கூட்டம் மொய்த்து நின்று, சின்னக் கடைத் தெருவிலே ஞாயிற்றுக்கிழமைகளில் நடமாடும் ஜனத்திரளின் போக்குவரத்தைத் தடை செய்து கொண்டிருந்தது.

வாத்திய இசையும், சலங்கையின் கொஞ்சலும், மிருதங்கத்தின் சுநாதமும் சேர்ந்து மனத்தைக் கவர்ந்தன. மண்டபத்தினுள் நடனம் நடந்து கொண்டிருந்தது.

நாட்டியத்தை நேரிலே பார்க்க முடியாத ஜனங்கள், ஒலிபெருக்கியைப் பார்த்தவாறு அதிலிருந்து வரும் தில்லானாவையும், பாதச் சலங்கையின் ஒலியையும் கேட்ட வண்ணம் கற்பனைக் கண்ணால் நாட்டியத்தையே நேரிலே பார்ப்பது போல் இமை கொட்டாமல் நின்றார்கள்.

இதென்ன! திடீரென்று அந்த ஜனத்திரளை முட்டித் தள்ளிக்கொண்டு மண்டபத்துக்குள்ளே யிருந்து வெளியே ஒரு மனிதன் ஆவேசமாக வருகிறான்.

நீளமாகத் தொங்கும் தூய வெள்ளை ஜிப்பா. மெல்லிசான மஸ்லின் துணி. நல்ல உயரம் என்று சொல்லுவதற்கில்லை. ஆனால் ஒடிசலான உடம்பு, உயரத்தைச் சற்று எடுப்பாகக் காட்டுகிறது. தலைமயிர் நீண்டு 'ராஜ பார்ட்' முடி போலச் சீவியும் சீவாமலும் படர்ந்து கிடக்கிறது. அந்த மனிதனுடைய கண்களிலே ஒரு பரபரப்பு. நடையில் ஒரு பதற்றம். எங்கே செல்கிறான் இவன், அந்த அருமையான நடனத்தை விட்டு விட்டு?

கூட்டத்தைப் பிளந்து கொண்டு சின்னக் கடைத் தெருவுக்குள்ளே சாடிய அந்த ஜிப்பா மனிதன், பெரிய கடை வீதியிலே புகுந்து வேகமாக நடந்தான்.

கிலேதார் தெருவைத் தாண்டியதும் வலது சாரியில் உள்ள ஒரு பெரிய கடைக்குள்ளே நுழைந்தான்.

"நரசிம்ம செட்டி அண்டு கோ, லேவாதேவிக் கடை. தங்க நகை ஈட்டில் கடன் கொடுக்கப்படும்" என்று கொட்டை எழுத்தில் விளம்பரம் மாட்டியிருந்த அந்தக் கடைக்குள்ளே தான் அவன் நுழைந்தான்.

செட்டியார் இரும்புப் பெட்டிக்கு அருகே திண்டும் தலையணையுமாகச் சாய்ந்து கொண்டிருந்தார். அவருடைய நெற்றி நாமம் துலாம்பரமாகத் துலங்கிக் கொண்டிருந்தது. எதிரே யிருந்த சிறு மேஜைப் பெட்டிக்கு மேலே தராசும் படிக் கல்லும் காட்சி தந்தன. அருகில் ஒரு பலகையில் யாரோ ஒரு நண்பர் உட்கார்ந்து செட்டியாருக்குத் தினப் பத்திரிகையைப் படித்துச் சொல்லிக் கொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் 'வெள்ளிக் கிழமை விடுமுறை நாள்' என்று ஒரு சிறு பலகை தொங்கியது. கடையின் உள் முகப்பில் சிப்பந்திகள் மிகவும் சுறுசுறுப்பாக வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.




கடையினுள் நுழைந்த மனிதர், சிப்பந்திகள் ஒருவரையும் லக்ஷியம் செய்ய வில்லை. நேரே செட்டியாருக்கு எதிரே போய் நின்று கொண்டார்.

"செட்டியார்வாள்! ஒரு அவசரம்! இருபத்தைந்து ரூபாய் தேவை — இதை

வைத்துக் கொண்டு—" என்று சொல்லிய வாறு இடுப்பிலே செருகி வைத்திருந்த ஒரு புல்லாங்குழலை எடுத்துச் செட்டியாரின் மேஜையிலே வைத்தார்.

செட்டியாருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. வந்த மனிதர் உட்காரக் கூட இல்லை. மடியிலிருந்து ஏதோ தங்க நகையை எடுக்கிறாராக்கும் என்று பார்த்தால், ஆசாமி ஒரு புல்லாங்குழலை எடுக்கிறாரே!

செட்டியார் அந்தப் புல்லாங் குழலைக் கையிலே எடுத்துப் பார்த்தார். இரண்டு ஓரத்திலும் வெள்ளியினால் பூண் கட்டியிருந்தது.

"என்னையா இது! இந்த இரண்டு வெள்ளி வளையமும் சேர்த்தாலும் எட்டணுக் கூடப் பெறாதே! வெறும் மூங்கில் குழலுக்கு இருபத்தைந்து ரூபாய் வேண்டுமா!" என்றார் செட்டியார்.

'மூங்கில் குழல்' என்ற வார்த்தைகள் வந்ததும், ஜிப்பா மனிதருடைய முகம் சுண்டியது.

"என்ன சொன்னீர்கள், செட்டியார்வாள்! மூங்கில் குழலா......!"

"ஆமாம். பின்னே இதென்ன வெள்ளிக் குழலா? இல்லை, தங்கக் குழலா? மூங்கில் தானே, ஐயா! அடுப்பு ஊதக் கூட முடியாது, ஒரு பக்கம் அடைத்திருக்கிறது"—என்றார், ஹாஸ்யம் என்ற நினைப்பிலே! வந்த மனிதருக்குக் கண் சிவந்தது.

"இன்னொரு முறை அப்படிச் சொல்லாதீர்கள். இந்த உடம்பில் உயிருள்ள வரை அது மூங்கில் குழலில்லை. செட்டியார்வாள், என்னுடைய சரீரத்தில் ஜீவன் இருக்கு மட்டும், இதன் விலை இருபத்தைந்து ரூபாய் இல்லை. இருபத்தைந்து லட்சம் ரூபாய் தெரியுமா?" — இப்படிச் சொல்லும் போதே ஜிப்பா மனிதருக்கு உடம்பெல்லாம் படபடத்தது.

"சார், கோபப் படாதீர்கள். இங்கே எல்லாம் தங்க நகையின் பேரிலேதான் கடன் கொடுக்கிறது. வைர நகையைக் கூட வாங்குகிற தில்லை. போய் வாருங்கள்!"

செட்டியாருடைய இந்த வார்த்தைகள் முகத்தில் அடிப்பது போல் வந்தன.

புல்லாங்குழல் மனிதருக்குக் கோபமும் ஆத்திரமும் முகத்தில் பிரவாகமாகப் பொங்கின. ஆனாலும் என்ன செய்ய முடியும் அவரால்?

செட்டியார் கையிலே எடுத்துப் பார்த்த குழலை 'டக்' கென்று மேஜையின் மேல் வைத்தார். அதை அப்படியே வெடுக்கென்று எடுத்து இடுப்பிலே செருகிக் கொண்டு விறு விறு என்று வெளியே நடந்தார் அந்த ஜிப்பா மனிதர்.

எல்லாம் ஐந்து நிமிஷ நேரத்துக்குள் நடந்த காரியம். ஆனால் இந்த ஐந்து நிமிஷத்துக்குள் அந்த ஜிப்பா மனிதருடைய உள்ளம் அடைந்த வேதனை! அவருடைய முகத்திலேதான் எத்தனை மின்னல்கள் துவண்டன!

செட்டியாருக்கு அருகில் இருந்த நண்பர் இதையெல்லாம் கவனித்தார். ஏனோ அவருடைய உள்ளம் நெகிழ்ந்தது. அந்தப் புதிய மனிதர் அத்தனை ஆத்திரமாக உள்ளே வந்ததும், அதை விட ஆத்திரமாக வெளியே சென்றதும் அந்த நண்பரை வேதனைப் படுத்தின.

"செட்டியார்வாள், இதோ ஐந்து நிமிஷத்தில் வருகிறேன்" என்று சொல்லியவாறு அந்த நண்பர், கையிலிருந்த தினப் பத்திரிகையைக் கீழே வைத்து விட்டு எழுந்து, புல்லாங் குழல் மனிதரைப் பின் தொடர்ந்தார்.

ஞாயிற்றுக் கிழமைக் கூட்டத்துக்குள் முட்டியும் மோதியும் வெகு வேகமாகச் செல்லும் அந்த மனிதரை எப்படிக் கூப்பிடுவது? கையைத் தட்டினார்! பயனில்லை. அவர் திரும்பியே பாராமல் வேகமாய் நடந்து கொண்டிருந்தார். இவர் அவரைப் பின் தொடர்ந்து ஓடினார்.



"சார், சார்! கைதட்டுகிறேன்! திரும்பிக் கூடப் பார்க்காமல்..."

"கை தட்டிக் கூப்பிடுகிற அநாகரிகமான நண்பர்கள் எனக்குக் கிடையாது" என்று ஒரு போடு போட்டார் அவர், நடந்து கொண்டே!

"சார்! கொஞ்சம் நில்லுங்கள். உங்களுடைய பெயர் எனக்குத் தெரியாது. இந்த நிலைமையில் வேறு எப்படித்தான் உங்களைக் கூப்பிடுவது? சார்—சாரோ—"

புல்லாங்குழல் நண்பர் கொஞ்சம் நிதானித்தார். வந்த நண்பர் அருகே சென்று மறுபடியும் பேச ஆரம்பித்தார்.

"சார், நீங்கள் வந்து செட்டியாரோடு பேசியதை யெல்லாம் கவனித்தேன்—!"

"சரி. கவனித்து சந்தோஷப்பட்டீர்கள். நன்றி. அதற்கென்ன இப்பொழுது?"

"இல்லை. உங்களுக்கு இருபத்தைந்து ரூபாய் தேவை போலிருக்கிறது—"

"அதான் கவனித்தீர்களே, நான் செட்டியாரிடம் சொன்னதை!"

"அதற்கில்லை. உங்கள் கையிலுள்ள புல்லாங்குழலின் மகிமை செட்டியாருக்குத் தெரியாது—அவருக்கு—"

"இந்த மாதிரிக் கொம்பு சீவுகிறதெல்லாம் எனக்குப் பிடிக்காது. விஷயம் என்ன சொல்லுங்கள்!"

"உங்களுக்குத்தேவையான இருபத்தைந்து ரூபாய் நான் தருகிறேன். திரும்பக்கூடத் தர வேண்டியதில்லை."



"ஓகோ! சரிதான்; யாசகன் என்றெ நினைப்போ! சுவாமி! உங்களுடைய தர்ம கைங்கரியத்துக்கு எங்காவது கோவில் உண்டியலைப் பாருங்கள். இது சம்பாதிக்கிற ஜீவன். தெரிந்ததா?"

"ஐயய்யோ! தவறாக நினைக்கிறீர்களே. உங்களுக்குத் தேவையான—"

"சார், சுற்றி வளைத்துப் பேச எனக்கு இப்போது நேரமில்லை. நமக்குத் தேவை இருபத்தைந்து ரூபாய். அதுவும் கடனாகத்தான். யாசகம் இல்லை. தெரிந்ததா? கடனும் வெறுங் கடனாக இல்லை; ஈட்டுக் கடனாகத்தான்."

"சரி, கடனாகவே தருகிறேன்—"

"அப்படியானால் இந்தாருங்கள் பிடியுங்கள். நம்மிடம் ஈடாகக் கொடுப்பதற்கு இதைவிடச் சிறந்த ஆபரணம் கிடையாது. நமக்கும் இது உங்களிடம் இருந்தால்தான் கடனைத் திரும்பக் கொடுக்க வேண்டும் என்ற பிரக்ஞை இருக்கும். புரிந்ததா! இந்தாருங்கள், பிடியுங்கள்!"

ஜிப்பா மனிதர் அந்தப் புல்லாங் குழலை எடுத்து நீட்டினார். மறு பேச்சில்லாமல், நண்பர் தம்முடைய மணிபர்சை எடுத்து இரண்டு பத்து ரூபாய் நோட்டும் ஒரு ஐந்து ரூபாய் நோட்டும் புல்லாங் குழல் மனிதரிடம் கொடுத்தார்.

"என் பெயர் ரவீந்திரன். தாயுமானவர் தெருவில் வாசம். தங்கள் பெயர்?"

"அப்புலிங்கம். என் விலாசம்—"

"உங்களுடைய விலாசமெல்லாம் இந்த அவசரத்தில் நமக்கு ஞாபகத்தில் இராது. மன்னிக்க வேண்டும். திரும்பத் தருவதற்கு இருபத்தைந்து ரூபாய் நம்முடைய கைக்கு வந்த வேளையில் எப்படியாவது உங்களைக் கண்டு பிடித்து வந்து விடுவேன். தீராது என்றால் அந்த மகானுபாவன் செட்டியாரையே கேட்டுத் தெரிந்து கொள்ளுவேன். நம்முடைய உயிரை யல்லவா உங்கள் கையிலே ஈடு கொடுத்திருக்கிறேன் — கவலை எனக்கல்லவா? போய் வாருங்கள். நமஸ்காரம்!"

அவ்வளவுதான். மறு விநாடி அந்தப் பெரிய கடைத் தெருவிலே அலை மோதிக் கொண்டு செல்லும் மனித வெள்ளத்தில் எங்கோ மறைந்து விட்டான், ரவீந்திரன்.

அவன் அந்த இடத்தை விட்டு நகர்ந்த பிறகுதான் இந்த உலகத்துக்கே வந்தார் அப்புலிங்கம். ஆனாலும் ஏதோ நம்ப முடியாத ஒரு அதிசயமான கனவைப் போல் ஓடி மறைந்து விட்ட அந்த விசித்திர மனிதனைப் பற்றிய வியப்பிலிருந்து அவரால் இன்னும் பூரணமாக மீள முடியவில்லை! ரவீந்திரனைப் பின் தொடர்ந்து செல்வோமா, அல்லது பேசாமல் திரும்பி விடலாமா என்று அவருக்குத் தோன்றவில்லை. திரும்பிப் போனால் செட்டியாரிடம் நடந்த விஷயங்களை யெல்லாம் எப்படிச் சொல்லுவது? கஷ்டமான காரியந்தான். அதை விட்டு விட்டு, இந்த மனிதனையே பின் தொடர்ந்தாலோ? எதற்காக இவன் இத்தனை அவசரமாக இருபத்தைந்து ரூபாய்க்கு இப்படி ஆலாய்ப் பறந்தான் என்று தெரிந்து கொள்ளலாம் அல்லவா! ஆனால் இந்த அபூர்வ மனிதனைப் பின் தொடர்ந்து சென்றால் அதிலும் ஆபத்து இருக்கிறது! அடிபிடி சண்டைக்கே வந்தாலும் வந்து விடுவான்; அப்படிப்பட்ட அபூர்வமான மனிதன் தான் இவன்!

என்ன செய்வது என்று தோன்றாமல், நெற்றியைப் பிசைந்த வண்ணம் அந்தக் கடை வீதியிலேயே தயங்கி நின்றார் திருவாளர் அப்புலிங்கம் அவர்கள்! (தொடரும்)

# வாழ்க்கையில் ஆனந்தம்





# லோத்ரா

கர்ப்பாசய ரோக நிவாரணி

வாழ்க்கைக்கு உத்சாகமூட்டுவது ஒரு அருமையான குழந்தை. லோத்ரா உட்கொண்டு இந்த தாய் அவ்வித ஆனந்தத்தை அடைய முடிகிறது.

**கேஸரி குடீரம் லிமிடெட், மதராஸ்-14**

தமிழ்நாடு ஏஜண்டுகள்: சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், மேலக் கோபுர வீதி, மதுரை

---

## இந்தியாவின் சொந்த சோப்பினுடைய

# புது மணத்துடன்

கூடிய

# புதிய தோற்றம்



கடைசி செதில் உள்ளளவும் புதியதாகவும் வாசனை யுள்ளதாகவும் இருக்கிறது.





சுதேசி மற்றும் உயர்ந்தது.




பிரதிநிதித்வம்பெற்ற ஸ்திரீகளாலும் புருஷர்களாலும் அங்கீகரிக்கப் பெற்ற இந்த அதி சுத்தமான எளிதில் கரையாத சோப், மென்மையான நுரையை அபரிமிதமாக உண்டாக்குகிறது; புதிய, அகலாத வாசனையை நிலைத்திருக்கச் செய்ய யந்திரத்தின் மூலம் காகித உறையால் சுற்றப்பட்டுள்ளது. புதிய வத்னியில் ஏதாவது குறைபாடு இருக்கிறதா என்று சொல்லுங்கள்.

சிறந்த பேரம்
பிரசித்தமான விலை
மற்றும் வத்னி பேபி

அங்கத்தினர்:




**Godrej கோத்ரெஜின் வத்னி** ★

லிமிடெட்

**I**இந்தியன் **S**சோப் அண்டு **T**டாய்லெட்ரீஸ் **M**மேக்கர்ஸ் **A**அஸோஸியேஷன்

100% இந்திய நிர்வாகம் — மூலதனம் — உழைப்பு

★ தாய் நாடு என அர்த்தம் உடைய 'வதன்' என்னும் வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

# ஏப்ரல் 14உ முதல்



நரசு ஸ்டூடியோஸ்

# போர்ட்டர் கந்தன்

டைரக்ஷன்: K. வேம்பு

சென்னை:

**பாரகன்**

**ஸ்ரீ கிருஷ்ணா**

**ராக்ஸி**

**ராஜகுமாரி**

மற்றும்

**தென்னாடெங்கும்**









# அன்புப் பிணைப்பு

கிருஷ்ணமூர்த்தி

"மரகத விலாஸ்" அன்று மங்களகரமாகத் திகழ்ந்தது. பங்களாவைச் சுற்றி ஒரே வர்ண ஜாலங்கள். விதம் விதமான மின்சார விளக்குகள் அள்ளி வீசும் வர்ணச் சிதறல்கள் கண்ணைப் பறித்தன. மரக்கிளைகள், ஒன்று விடாமல் மின்சார விளக்குகளினால் வரிசையாக அலங்கரித்திருந்தார்கள்.

வருவோரை வரவேற்பதிலும், வந்தவர்களை உபசரிப்பதிலும் மூழ்கியிருந்தார் ஸ்ரீமான் திவாகரன். எத்தனை வேலைக்காரர்கள் இருந்தென்ன! தன்னுடையதென்று எடுத்துப் போட்டுச் செய்ய யார் இருக்கிறார்கள், வேலைக்காரர்களைத் தவிர! எல்லாவற்றையும் தாமே நேரில் கவனிக்க வேண்டியதாயிருந்தது, அவருக்கு. அவர்தான் என்ன செய்வார், பாவம், ஒண்டிக் கட்டை. சரியான சமயத்தில் அவர் ஒரே மகனான சுந்தரும் அவருடன் கூட இல்லை. அவன் இப்பொழுது எங்கே இருக்கிறானோ! ஆறாயிரம் மைல்களுக்கப்பாலோ! அல்லது விமானத்திலோ! யார் கண்டார்கள்!

இவ்வித கோலாகலத்துடன் மிகவும் சிறப்பாக "மரகத விலாஸ்" கிருகப் பிரவேச விழாவை ஒருவாறு முடித்தார் ஸ்ரீமான் திவாகரன்.

மறுநாள் காலை. திவாகரன் ஏதோ நினைத்தவாறு சோபாவில் சாய்ந்து கொண்டிருந்தார். "என்ன ஒரேயடியாய் அசந்து போய் உட்கார்ந்து விட்டீர்களே, கிருகப்பிரவேசக் களைப்பா!" என்று பரிகாசமாகச் சொல்லிக் கொண்டே வந்து நின்றாள் திவாகரனின் மனைவி மரகதம்.

"ஒன்றும் இல்லை. இந்த நிலையில் நாம் இருப்பதற்குக் காரணமாயிருந்த வெல்ஸைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். இந்தக் குளிர்ந்த நேரத்திலாவது அவரைப் பற்றி நினைக்க வேண்டாமா!" என்றார் திவாகரன். அப்பொழுது அவர் முகத்தில் நன்றி உணர்வு மேலிட்டிருந்தது.

இருபது வருஷங்களுக்கு முன் திவாகரன், ஒரு சாதாரண குமாஸ்தா. துறைமுகத்தில் ஒரு "கப்பல்" கம்பெனியை நம்பித்தான் வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தார். திவாகரன் பேரில் கப்பல் கம்பெனி ஏஜெண்டுக்கு ஒரு கண். அவரது நேர்மையும், நாணயமும் ஏஜெண்ட் வெல்ஷ் துரையைக் கவர்ந்தன. சில வருஷங்களுக்குப் பிறகு அவரைத் தன் அந்தரங்கக் காரியதரிசியாக நியமித்துக் கொண்டார் வெல்ஷ். இதற்குச் சிறிது காலத்துக்குப் பிறகு மரகதத்தை மணந்து கொண்டார் திவாகரன். அதிர்ஷ்டம் யாருக்கு எப்பொழுது வரும் என்று சொல்ல முடியாது அல்லவா!

அன்று மணி இரண்டு இருக்கும். திவாகரனின் வாழ்க்கைத் தரத்தையே உயர்த்தும் ஒரு பொன் நேரம். ஆம், ஒரு சிறு காகிதத்தில் எழுதியிருந்த இரண்டு வரிகள் பிற்காலத்தில் திவாகரனின் வாழ்க்கையையே வளம் பெறச் செய்யும் பொன் எழுத்துக்களாக இருந்தன. அது ஒரு தந்தி! "வெல்ஷின் மனைவி லண்டனில் மரணப் படுக்கையில் இருக்கிறாள்" என்பதே தந்தியின் சாரம். தந்தியைப் படித்த வெல்ஷ் ஒரு கணம் யோசித்தார். திவாகரனைக் கூப்பிட்டு, "உன் கையில் இந்தக் கம்பெனியையே ஒப்படைக்கிறேன். நான் வரும் வரையில் இதை நிர்வகிக்கும் பொறுப்பு உன்னுடையது" என்று சொல்லி அந்தரங்க தஸ்தாவேஜுகளைத் திவாகரனிடம் ஒப்படைத்துவிட்டு அன்றிரவே விமானம் ஏறினார்.

வெள்ளைக்காரக் கப்பல் கம்பெனியின் நிர்வாகம் முழுதும் தாற்காலிகமாகத் திவாகரன் கையில் மாறியது.

வெல்ஷ் துரை சென்று ஒரு மாதமிருக்கும். தம் மனைவிக்குச் சற்றுக் குணமாகி வருவதாகவும், தாம் சில நாட்களில் திரும்புவ

தாகவும் எழுதியிருந்தார். பிறகு அவர் எழுதியிருந்ததுதான் திவாகரன் மேல் அவருக்கு இருந்த நல்லெண்ணத்தை உறுதிப்படுத்தியது. "உன்னைப் பூரணமாக நம்பியே நான் இங்கு சற்று அமைதியுடன் இருக்கிறேன்" என்ற வாசகத்தைப் படித்த திவாகரனுக்கு உடலெல்லாம் புல்லரித்தது. இவ்வாறு சில நாட்கள் சென்றன. திவாகரனும் கம்பெனி விவகாரங்களில் மிகவும் கவனம் செலுத்தி வந்தார். இப்பொழுது தான் சற்றும் எதிர்பாராத விதமாக ஒன்று நிகழ்ந்தது. கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும் என்பார்கள். அது திவாகரன் விஷயத்தில் முற்றும் பொருத்தமாக இருந்தது. வெல்ஷ் தம்முடைய சொந்த கிராமத்திலிருந்து திரும்புகையில் ஒரு கார் விபத்தில் அகப்பட்டு ஸ்தலத்திலேயே மாண்டார் என்று ஒரு அவசரத் தந்தி வந்தது. சென்னையிலேயே பெரிய கம்பெனியின் முதலாளியாயிற்றே! இந்தச் செய்தி காட்டுத் தீ பரவுவது போலப் பரவிற்று. மறுநாள் பத்திரிகைகளிலெல்லாம் இதுதான் முக்கியமான செய்தி.



திவாகரன் கப்பல் கம்பெனியின் முழு நிர்வாகத்தையும் நிரந்தரமாகப் பெற்றுக் கொண்டார். நாளா வட்டத்தில் அவருடைய சாமர்த்தியத்தாலும் ஆழ்ந்த உழைப்பாலும் கம்பெனி விரிவடையத் தலைப்பட்டது. இப்பொழுது ஸ்ரீமான் திவாகரன் சென்னையிலேயே பெரிய செல்வவந்தர். எல்லாக் கம்பெனிகளிலும் அவருக்குப் பங்கு உண்டு. அவர் டைரக்டராக இல்லாத பாங்கே கிடையாது.

* * *

திவாகரன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவராக உட்கார்ந்து கொண்டிருந்தார். "வடபழனிக்குப் போக வேண்டும் என்று நேற்றுச் சொன்னீர்களே!" என்று ஞாபகமூட்டிக் கொண்டே அங்கு வந்தாள் மரகதம்.

"ஆமாம், மறந்தே போய் விட்டேன்! இந்த வேலைத் தொந்தரவில் வேறு எதுவுமே ஞாபகமிருக்கிறதில்லை. அவசியம் இன்று போக வேண்டும்" என்றார்.

அப்பொழுது பங்களா வாசலில் கார் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு யுவதி இறங்கி வந்தாள். அவள் முகத்தில் குதூகலம் நிறைந்து காணப்பட்டது. நல்ல உயரம். உயரத்துக்கேற்ற உடற்கட்டு. சிவந்த மேனி. அவள் நாகரிகமாக அணிந்திருந்த ஜார்ஜெட் சேலையும் சோளி ரவிக்கையும் அவளது இயற்கை அழகை இன்னும் மிகைப்படுத்தின. "மாமி" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள் அவள்.

"என்ன வனிதா, என்ன ஒரே உற்சாகமாயிருக்கிறாயே! வா, உள்ளே" என்று கூறி உள்ளே அழைத்துப் போனாள் மரகதம்.

"இன்று சாயங்காலம் அத்தான் வருகிறார். இதோ தந்தி" என்று அருகிலிருந்த திவாகரனிடம் தந்தியை நீட்டினாள் வனிதா.

"எனக்கு ஒன்றும் வரவில்லையே! உனக்கு மட்டும் தந்தி அடித்திருக்கிறானே" என்றார் திவாகரன், குறும்பாக.

"எனக்குத் தந்தி அடித்தால் அதை உங்களுக்குத் தெரிவிக்க மாட்டேனா என்பதுதான்." இதைச் சொல்லும்போதே அவள் முகம் நாணத்தால் சிவந்தது.

"சரி, எல்லோருமே வடபழனிக்குப் போய் விட்டு அப்படியே மீனம்பாக்கத்துக்குப் போகலாம்" என்றார் திவாகரன். இந்தப் பிரேரணை ஏகமனதாக நிறைவேறியது. வடபழனி ஆண்டவனைக் கண்குளிரக் கண்டார் ஸ்ரீமான் திவாகரன். பெற்ற மைந்தனைச் சிறிது நேரத்தில் காணப் போகிறோம் என்ற மகிழ்ச்சி வேறு அவரை நிலைகொள்ளாமலிருக்கச் செய்தது.

வடபழனியிலிருந்து இரண்டு கார்கள் மீனம்பாக்கத்தை நோக்கிப் பறந்தன. விமானம் வருவதற்கு இன்னும் ஐந்தே நிமிஷம் இருப்பதாக அறிவிக்கப்பட்டது. விமான நிலையத்தில் ஒரே பரபரப்பு ஏற்பட்டது.

சில நிமிஷங்களில் விமானம் வந்து இறங்கி நின்றது. ஒவ்வொருவராகக் கையும் பையுமாக இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

"அதோ சுந்தர்!" என்றாள் வனிதா. அவள் முகத்தில் ஒரு தனி இன்பம் பொங்கித் ததும்பியது. சுந்தர் வேகமாக இவர்கள் நின்றிருந்த இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான். தனியாக அல்ல, ஒரு ஐரோப்பியப் பெண்மணியோடு வந்தான். முதலில் வேறு பிரயாணியோ என்று நினைத்தார் திவாகரன். ஆனால் சுந்தர் இவர்கள் அருகில் வந்து நின்றவுடன் அவனுடன் பக்கத்திலேயே வந்து நின்றாள் அவள். மேலும் சுந்தர் அவளை அறிமுகப்படுத்த ஆரம்பித்தான். "இவள்தான் மிஸ் க்ரேஸ். என்னுடன் ஒரு வருஷகாலம் தங்கி இந்திய நடனக் கலையைப் பற்றி அறிய வந்திருக்கிறாள். ஒரு பட்டதாரி" என்றான் சுந்தர்.

திவாகரன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. சுந்தருக்கு ஒன்றும் புரியவில்லை.

'அப்பா, என்னைத் தவறாக நினைக்காதீர்கள்."

"என்னடா தவறு! பட்டப்பகலில் வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது. நீ அவளை என் வீட்டுக்குள் அழைத்து வரக் கூடாது. மானம் போகிறது. எக்கேடு கெட்டாவது போ!" என்று சொல்லி விட்டு விர்ரென்று காரை நோக்கிப் புறப்பட்டார் திவாகரன். மரகதமும், வனிதாவும் மௌனமாகத் திவாகரனைப் பின் தொடர்ந்தனர்.

கார் பங்களாவை அடையும் வரை ஒருவரோடு ஒருவர் பேசவே இல்லை. பாவம் வனிதா! அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருக்க

வில்லை. துக்கத்தின் எல்லையை அடைந்தவர்களுக்கு அழுகை வருமா என்ன!

வனிதா திவாகரனின் தங்கைபெண். சுந்தரும் வனிதாவும் சிறு குழந்தை முதலே ஒன்றாக வளர்ந்தவர்கள். வனிதா பிறந்த உடனேயே சுந்தருக்கும் அவளுக்கும் முடித்துப் போட்டு விட்டார்கள். கால தேவன் ஆட்சியிலே அவர்கள் இருவர் உள்ளத்திலும் தூய காதல் தழைத்தது. இதற்குத் தடையாக வந்தது சுந்தரின் லண்டன் பிரயாணம். மேற்கத்திய சங்கீதத்தில் படித்துப் பட்டம் பெறவே சுந்தர் லண்டன் பிரயாணமானான். இந்த ஒரு வருஷத்திலே எத்தனை இன்பக் கோட்டைகள் வனிதா கட்டினாள். பாவம், வனிதா! அவையெல்லாம் இன்று கண்ணெதிரிலே சுக்கு நூறாகத் தகர்ந்துவிட்டன, அவள் நினைப்பிலே.

ஐரோப்பியப் பெண்மணி க்ரேஸுக்கு 'வெஸ்டர்ன்' ஹோட்டலிலே ஒரு தனியிடம் அமர்த்திக் கொடுத்தான் சுந்தர். அவள் இந்தியாவுக்கு வந்தது இதுவே முதல் தடவையாதலால் அவளுக்கு எல்லாம் சுந்தர் மூலமாகவே நடந்து வந்தன. தினம் அவளைத் தியேட்டரில் சென்று பார்த்து விட்டு வருவான் சுந்தர். க்ரேஸ் மேற்கத்திய சங்கீதத்தில் ஒரு பட்டதாரி. இந்திய நடனக் கலையைப் பயின்று அதில் ஆராய்ச்சி செய்து ஒரு பட்டம் பெற வேண்டும் என்பதற்காகவே அவள் இந்தியா வந்தாள். சுந்தரும் க்ரேஸும் தெருக் கூத்திலிருந்து அரிய பரத நாட்டியம் வரை எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் கண்டு களித்தார்கள். அவைகளில் ஒரு தனிக் கலை பொதிந்து கிடப்பதைக் கண்டார்கள். இவர்கள் இரண்டு பேரும் இப்படிப் பழகுவதைக் கேள்விப்பட்ட திவாகரனுக்கு ரத்தம் கொதித்தது. அதனால் அவர் சுந்தருடன் பேசியே எத்தனையோ நாள் ஆயிற்று.

க்ரேஸுக்கு வந்த வேலை முடியும் நாள் நெருங்கியது. ஒருநாள் இங்கிலாந்துக்குக் கப்பலேறினாள் க்ரேஸ், சுந்தருடன் பிரியா விடை பெற்றுக் கொண்டு. க்ரேஸை வழியனுப்பிவிட்டு வந்த சுந்தருக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. இத்தனை நாளுமாவது அவளுடன் பேசுவதிலும், அவளுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும் ஒரு அமைதியைக் கண்டான் அவன். தகப்பனார் தன்னைத் தவறாக நினைக்கிறார் என்பது அவனை உறுத்திக் கொண்டேயிருந்தது. ஆனால் அவன் எப்படித் தன்னுடைய நிலைமையை அவரிடம் விளக்குவது! அப்படி விளக்கினால் தான் அவர் அதை நம்புவாரா!

இப்படியே சில நாட்கள் சென்றன. ஒரு நாள் திவாகரன் விலாசமிட்டு ஒரு கவர் லண்டன் முத்திரையுடன் வந்தது. லண்டனிலிருந்து தமக்கு யாரும் எழுதுவார் இல்லையே என்று திகைப்புடன் பிரித்துப் படிக்க ஆரம்பித்தார் திவாகரன்.

அன்பு மிக்க தந்தைக்கு,

வணக்கம். நான் தங்களது மகனின் வாழ்க்கையில் குறுக்கிட்டதாக நீங்கள் தவறாக இது காறும் நினைத்துக் கொண்டிருப்பதைப் போக்கவே இக் கடிதம் எழுதுகிறேன். முதன் முதலில் அவரைச் சந்தித்ததிலிருந்து நாங்கள் இருவரும் பழகிய விதமே வேறு. அவருக்குச்

சங்கீதத்தில் இருந்த பிரேமையும், எனக்கு நாட்டியத்தில் இருந்த இணையிலாப் பற்றும் எங்கள் இருவரையும் பிணைத்தன. அது கலைப் பிணைப்பே தவிர வேறொன்றுமில்லை. நாங்கள் நெருங்கிப் பழகியதும் அப்பிணைப்பிலேதான். லண்டனில், மேற் படிப்புக்காக வந்த அவர் எங்கள் வீட்டில்தான் ஒரு வருஷம் தங்கியிருந்தார். அவர் இருந்த ஒரு வருஷத்தில் எங்கள் குடும்பத்தில் ஒருவராகவே ஆகிவிட்டார். என் தாயார் அவரைத் தன் பிள்ளையாகவே கருதி வந்தார். அவர் இந்தியா திரும்பும்போது நானும் அவருடன் இந்தியாவுக்கு வருவது என்று ஏற்பாடாகியது. நான் இந்தியாவில் இருக்கும் வரை தினந்தோறும் என்னைப் பார்த்து வரவேண்டும் என்று என் அன்னைக்கு வாக்களித்து விட்டு வந்திருந்தார். இவ் விஷயத்தை நான் நேரிலேயே நான் அங்கிருந்த பொழுது தங்களிடம் சொல்லி யிருக்கலாம். ஆனால் நீங்கள் அப்பொழுதிருந்த நிலைமையில் எதுவும் பயன்பட்டிருக்கா தல்லவா! இந்தியாவுக்கு நான் வந்தது முதல் தடவையாதலால் அங்கு எனக்கு யாரும் அறிமுகமில்லை. என்ன இருந்தாலும் அதே சென்னையில், இருபது வருஷங்களுக்கு முன்,—அப்பொழுது நான் மிகவும் சிறு குழந்தை—என் தந்தை பெரிய கப்பல் கம்பெனி ஏஜண்டாக இருந்தார் என்று என் தாயார் சொல்லக் கேட்டிருக்கிறேன். என் தாயார் அபாயகரமாய் இருப்பதைப் பார்க்க வந்தவர் திரும்பவே யில்லையாம். இங்கு ஒரு கார் விபத்தில் மாண்டார் என்று சொல்லிக் கொள்வார்கள். அவர் அப்பொழுது அங்கிருந்தால், அல்லது அவரைப் பற்றித் தெரிந்தவர்கள் இருந்தால், இது போன்ற குற்றச்சாட்டு எனக்கு ஏற்பட்டிருக்குமா! அல்லது தந்தையையும், மகனையும் பிரித்து வைத்த பழிதான் என்னை வாட்டுமா!

கடைசியாக ஒரு வேண்டுகோள். சுந்தர், வனிதா இருவரும் சேர்ந்த ஒரு புகைப் படத்தைத் தாங்கள் மனச் சாந்தியுடன் அனுப்பும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

கிரேஸ் வெல்ஷ்

அக்கடிதத்தின் ஒவ்வொரு வார்த்தையும் திவாகரனின் இதயத்தைப்பிளந்தது. பெரிய கப்பல் கம்பெனி ஏஜெண்ட் வெல்ஷ் என்பதைத் திரும்பத் திரும்பப் படித்தார் திவாகரன். கூரிய வாள் கொண்டு தம்முடைய மார்பை யாரோ அறுப்பது போலிருந்தது அவருக்கு. "சுந்தர்! சுந்தர்!" என்று அலறிக் கொண்டே ஓடினார்.

"சுந்தர் என்னை மன்னிப்பாயா! எனக்கு வாழ்வளித்தவள் மகனை எவ்வளவு இழிவாக நினைத்து விட்டேன்! கிரேஸ் ஒரு மாதர் திலகம்" என்று கூறி அந்தக் கடிதத்தைக் கொடுத்தார்.

கடிதத்தைப் படித்தவுடன் சுந்தர் முகத்தில் ஒரு புன்முறுவல் பூத்தது. 'அப்பா' என்று அப்படியே அணைத்துக் கொண்டான் சுந்தர்.

"நன்றாயிருக்கிறது. நீங்கள் பிள்ளையிடம் மன்னிப்புக் கேட்பது. மேலே நடக்க வேண்டியதைப் பாருங்கள். நல்ல நாளாக ஒருநாள் கலியாணத்துக்குப் பார்த்துக் கொண்டு வாருங்கள்" என்றாள் மரகதம். அப்பொழுது சுந்தர், வனிதா இருவர் கண்களும் சந்தித்தன. அந்தச் சந்திப்பிலே ஒரு இனம் தெரியாத இன்பம் பொங்கியது அக் காதலர்களிடையே!



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை.

## 15. மதுரைமா நகரம்

சங்கத் தமிழ் மாலை பெற்ற நதிகளுள் சாலச் சிறந்தது வையை ஆறு. அந் நதியின் துறைகளிலே முன்னாளில் முத்தமிழ் மணம் கமழ்ந்தது; அதன் தெள்ளிய அலைகளிலே தமிழ் ஏடு தவழ்ந்தது. எண் குணத்தவனாகிய ஈசன் அவ்வாற்றின் கரையிலே மண் சுமந்தான்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த வையை ஆற்றின் கரையிலே வீற்றிருக்கின்றது மதுரைமா நகரம். அதுவே பழம்பதியாகிய பாண்டி நாட்டின் தலைநகரம். தொன்று தொட்டு முத்தமிழையும் முறையாகப் பேணி வளர்த்த பெருமை அந் நகரத்திற்கே உரியதாகும். பாண்டிய மன்னர்கள் அங்கு நிறுவிய தமிழ்ச் சங்கம் ஓர் அறிவுக் களஞ்சியமாகத் திகழ்ந்தது. சங்கப் புலவர்கள் மதுரைமா நகர்க்கு நல்லணியாக விளங்கினார்கள். நற்றமிழ்ச் சங்கத்தை நாடி வந்த பிற நாட்டுத் தமிழறிஞர்க்கும் வரிசை யறிந்து பரிசளித்தனர் பாண்டிய மன்னர். அதனால் நல்ல தமிழ் பாண்டி நாடெங்கும் பரவுவதாயிற்று.

மதுரையம்பதியில் அரசு புரிந்த பாண்டிய மன்னரில் பலர் சிறந்த கவிஞர்களாகவும் புலவர்களாகவும் இருந்தனர். நெடுஞ்செழியன் என்னும் பெயருடைய மன்னரிருவர் பாடிய அருமையான பாடல்கள் புறநானூற்றிலே காணப்படுகின்றன. மக்களாய்ப் பிறந்தோரெல்லாம் கல்வி கற்றல் வேண்டும் என்றும், அறிவுடைய ஒருவனை அரசனும் விரும்புவான் என்றும், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடிய பாட்டு என்றும் இறவாத பெருமை உடையதாகும்.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலைமுனியாது கற்றல் நன்றே
................
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது
அறிவுடை யோனாறு அரசும் செல்லும்"

என்பது அவன் பாடிய பாட்டு. மதிநலமும் நூலறிவும் உடையவரே அமைச்சராதற்கு உரியவர் என்று திருவள்ளுவர் அருளிய கருத்தை ஆதரித்துப் பாடியுள்ளான் பாண்டிய மன்னன்.

இத்தகைய தமிழார்வம் படைத்த மன்னர் அரசு புரிந்த மதுரைமா நகரில் தமிழ் வளம் பெருகிற்று. பல தொழில்களிலும் ஈடுபட்ட மக்கள் தமிழறிவு பெற்றுப் புலவர்களாய் விளங்கினர். அன்னவருள் ஒருவர் கூலவாணிகம் செய்த சாத்தனார் ஆவர். கூலக்கடை வைத்து வாணிபம் செய்த சாத்தனார் கூலவாணிகன் சாத்தனார் என்று பெயர் பெற்றார். இவரே மணிமேகலை என்ற சிறந்த காவியம் இயற்றியவர். சிலப்பதிகாரம் செய்த இளங்கோவடிகளும், மணிமேகலை இயற்றிய சாத்தனாரும் சிறந்த நண்பர்கள். இவ்விருவரும் ஒரு நாட்டவரல்லர்; ஒரு குலத்தவரல்லர்; ஒரு மதத்தினரல்லர். சேரநாட்டைச் சேர்ந்தவர் இளங்கோ. பாண்டி நாட்டைச் சேர்ந்தவர் சாத்தனார். இளங்கோ, அரச குலத்தில் பிறந்தவர். சாத்தனார் வணிகர் குலத்தவர். இளங்கோ சமண சமயத்தைச் சார்ந்தவர். சாத்தனார்

புத்த சமயத்தைத் தழுவியவர். இவ்வாறு நாட்டாலும், குலத்தாலும், மதத்தாலும் வேறுபட்டிருந்த பெருங் கவிஞர் இருவரும் தமிழுணர்ச்சியாலேயே தலைசிறந்த நண்பராயினர்.

பாண்டிய மன்னர் கற்றறிந்தோரை எல்லாம் கண்ணெனக் கருதிப் பாதுகாப்பவர் என்ற செய்தி வடநாட்டிலும் பரவி இருந்தது. அந்நாட்டில் ஒருகால் பஞ்சம் வந்துற்றபோது பல்லாயிரக் கணக்கான மக்கள் தென்னாட்டில் போந்து பாண்டியனைத் தஞ்சமடைந்தார்கள். அன்னார் சமண சமயத்தைச் சார்ந்தவராயினும் அவர்க்கு உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் கொடுத்து ஆதரித்தான் பாண்டியன். தமிழ் மன்னனது நன்மதிப்பைப் பெற ஆசைப்பட்ட சமணர்கள் தமிழ் மொழியை மாசறக் கற்று உணர்ந்தார்கள். மதுரையைச் சூழ்ந்திருந்த எட்டு மலைகளைத் தம் இருப்பிடமாகக் கொண்டு கவலையின்றி வாழ்ந்தார்கள். அவ்வெட்டு மலைகளின் பெயரும் பெருமையும் ஒரு பழம்பாட்டிலே குறிக்கப் பெற்றுள்ளன.

"பரங்குன்று ஒருவகம் பப்பாரம் பள்ளி
அருங்குன்றம் பேராந்தை யானை—இருங்குன்றம்
என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டு மோபிறவித் தீங்கு"

என்ற பாட்டிலே குறிக்கப் பெற்றுள்ள எட்டு மலைகளிலும் எண்ணாயிரம் சமண முனிவர்கள் இருந்ததாகத் தெரிகின்றது. இம்மலைகளிலே பரங்குன்றம் என்பது திருப்பரங்குன்றம். இருங்குன்றம் என்பது அழகர் மலை. யானை என்பது ஆனைமலை. ஏனைய ஐந்தும் இப்போது எப் பெயரால் வழங்குகின்றன என்பது தெளிவாகத் தெரியவில்லை.

இம்மலைகளிலே வாழ்ந்த சமண முனிவர்கள் ஆயிரக் கணக்கான தமிழ்ப் பாடல்கள் இயற்றினர். அவற்றுள் தெரிந்தெடுக்கப்பட்ட நானூறு நீதிச் செய்யுள்கள் நாலடியார் என்ற பெயருடன் இன்றும் வழங்கி வருகின்றன. இரண்டு அடிகளை உடைய திருக்குறளும், நான்கு அடிகளை உடைய நாலடியாரும் நீதி நூல்களுள் தலை சிறந்தன என்பது தமிழ்நாட்டார் கொள்கை. "ஆலும் வேலும் பல்லுக் குறுதி; நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என்னும் பழமொழியே இதற்குச் சான்றாகும்.

பன்னிரு நூற்றாண்டுகளுக்கு முன்னே மதுரையம்பதியில் சமண சமயத்திற்கும் சைவ சமயத்திற்கும் பெரும்போர் மூண்டது. அப்போது பாண்டி நாட்டை ஆண்ட அரசன் சமண சமயத்தைத் தழுவி நின்றான். மன்னனைப் பின்பற்றி நாட்டு மக்களும் சமண சமயத்தை மேற்கொண்டார்கள். ஆயினும் பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியும் அமைச்சராகிய குலச்சிறையாரும் சைவசமயத்தை விடாது பற்றி நின்றார்கள். அவர்களின் வேண்டுகோளுக்கு இசைந்து திருநெறித் தலைவராகிய திருஞானசம்பந்தர் மதுரைமாநகருக்கு எழுந்தருளினார். யானைமலை முதலாய எட்டு மலைகளிலும் இருந்த சமண முனிவர்கள் திரண்டு எழுந்தார்கள். வாக்குவாதம் மிகத் தாக்காக நடைபெற்றது. பாண்டிய மன்னன் மாளிகையில் பல்லாயிரக்கணக்காகக் குழுமி நின்ற சமண முனிவர்களின் எதிரே பச்சிளம் பாலராக நின்ற திருஞான சம்பந்தரின் நிலைகண்டு ஏக்கமும் இரக்கமும் உற்றார் மங்கையர்க்கரசியார். ஞானத்தின் திருவுருவாகிய சம்பந்தரைச் சமண முனிவர்கள் அவமதிப்பார்களோ என்று அஞ்சினார். மங்கையர்க்கரசியின் கருத்தறிந்த ஞானசம்பந்தர் 'அஞ்சேல்' என்று ஆறுதல் அளித்தார். "கண்ணுதற் பெருமான் அருளைத் துணை கொண்டு சமணரை எளிதில் வெல்வேன்" என்று கட்டுரைத்தார்.

"மானின் நேர்விழி மாதராய்
வழு திக்கு மாபெருந் தேவிகேள்
பானல்வாய் ஒருபாலன் ஈங்கிவன்
என்றுநீ பரி வெய்திடேல்
ஆனைமா மலை ஆதியாய இடங்களில்
பல அல்லல் சேர்
ஈனர்கட்கு எளி யேனலேன்
திரு ஆலவாய் அரன் நிற்கவே."

என்று திருஞான சம்பந்தர் அருளிய திருப்பாட்டைக் கேட்டு மனக்கவலை தீர்ந்தார் மங்கையர்க்கரசியார்.

சமண முனிவர்களும் திருஞான சம்பந்தரும் வைகை ஆற்றிலே புனல் வாதம் புரிந்தார்கள். அந்த வாதத்தில் சமணர் தோற்றார். சம்பந்தர் வென்றார். பாண்டிய மன்னனும் சமண சமயத்தை விட்டு மீண்டும் சைவ சமயத்தைச் சேர்ந்தான். மன்னன் முன்னிலையில் நிகழ்ந்த புனல் வாதத்தின் பெருமையைப் பாட்டில் அமைத்துப் பாராட்டினர் பாவலர்.

"பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே இருந்து வையை
ஏட்டிலே தவழ்ந்த பேதை"

என்று போற்றினார் ஒரு கவிஞர். தமிழ்ச் சுவை அறிந்த தன்மையால் அன்றோ ஆற்றுப் பெருக்கற்ற காலத்திலும் தன் ஊற்றுப் பெருக்கால் செந்தமிழ் பயிலும் மதுரைமாநகரை வாழ்வித்து வருகின்றது வைகையாறு?

# தொழில் பெருகுது

எஸ்.வி.எஸ்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

"ஆணி என்ற சமாசாரமே இங்கு இந்த வேலையில் இல்லை. ஒரு தகட்டையும் இன்னொரு தகட்டையும் இரும்பை உருக்கி ஊற்றி இணைத்து விடுவோம். இதற்குத்தான் வெல்டிங் என்று பெயர். இப்படி உருக்கி இணைத்து ரயில் பெட்டியின் முக்கியமான பாகத்தைச் செய்வது தான் இங்கு வேலை" என்றார்.

"இரும்பைக் குழம்பாகக் காய்ச்சி வைத்திருந்து அப்படியே இரண்டு தகடுகளிடையே ஊற்றுவீர்களா!" என்றேன்.

"அது நடக்காத காரியம். மேலும் இங்கு இரும்புத் தகடுகளைக் குழலாக இணைக்க இருப்பதால், இணைக்கும் வேலை செய்யும் வெல்டர் ஒவ்வொரு சமயம் படுத்துக் கொண்டே கூட வேலை செய்ய வேண்டும். அந் நிலையில் படுத்துக் கொண்டே மேல் நோக்கி உருக்கிய இரும்பை ஊற்ற முடியாதல்லவா! அதனால் ஒரு இரும்புக் கம்பியினுள், மிகுந்த சக்தி வாய்ந்த மின்சாரத்தைச் செலுத்தினால், அந்த மின்சாரம் அக் கம்பியை உருக்கி விடும். அப்படி உருகிய இரும்பு பாய்ந்து இரு தகடுகளிடையேயுள்ள இடை வெளியை நிறைந்து இணைந்து விடும். அத்துடன் மின்சாரம் பாய்ந்த கம்பி எந்த இரும்புப் பொருள்களை இணைக்க வேண்டுமோ அவற்றையும் சற்று உருக்கி விடுவதால் இணைந்த இரும்பு ஒரே இரும்புபோல் மிக உறுதியாகி விடுகிறது.

"இன்னொரு விசேஷ அம்சம், ரயில் விபத்துகளினால் ஏற்படும் உயிர்ச் சேதம் இப் பெட்டிகளினால் பெரிதும் குறையும்!"

"எப்படி!" என்றார் ஆசிரியர் சோமு.

"இரண்டு பெட்டிகள் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொள்ளும் போது, பின் பெட்டி முன் பெட்டிக்குள் நுழைந்து, முன் பெட்டியிலிருப்பவர்களை நசுக்கி விடுகிறது! இப்படித்தான் உயிர்ச் சேதம் ரயில் விபத்துகளில் அதிகமாக ஏற்படுகிறது. இப் புதிய முறையில் பெட்டிகள் ஒன்றுக்குள் ஒன்று நுழைந்து விடாதபடி அமைக்கப்படும். மோதுதலினால் ஏற்படும் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளும் வகையில் பெட்டியின் ஓரங்கள் அமைக்கப்படுகின்றன. பெட்டிக்கு அப்படி ஏதாகிலும் சேதம் ஏற்பட்டாலும் இரண்டு ஓரங்களில் தான் ஏற்படும்" என்றார் பிரின்ஸிபல் காமத்.

"மேலும் இப் பெட்டிகளில் கதவுகளும் அதிகம் இரா. இரண்டு ஓரங்களிலும் சேர்த்து நான்கு கதவுகள்தான் இருக்கும். இதனாலும் எல்லா இணைப்பு வேலைகளும் 'ரிவட்' முறையின்றி 'வெல்டிங்' முறையிலே செய்வதாலும் வண்டியின் கனம் குறைகிறது. பார்க்கவும் வழ வழப்பாக முண்டுகள் இன்றி வெகு அழகாக இருக்கும்!" என்றார், தொடர்ந்து.

பிறகு அப் பயிற்சிப் பள்ளிக்கூடத்தைச் சுற்றிப் பார்த்தோம். அந்தப் பள்ளிக்கூடத்தில் 212 மாணவர்கள் இப்போது பயிற்சி பெற்று வருகிறார்கள். ஒன்றரை ஆண்டு எங்காவது தொழிற் பயிற்சி பெற்ற மாணவர்களையே பள்ளியில் எடுத்துக் கொள்ளுகிறார்களாம். இரும்பில் பல பொருள்கள் பல உருவங்களில் செய்யவும், இரும்பை இணைக்கவும் பயிற்சியளிக்கிறார்கள். பள்ளிக்கூடத்தின் ஒரு பெரிய ஹாலில் இரும்புக் குண்டுகள் சதுரமாகவும், உருண்டையாகவும், எண்கோணமாகவும், 'ஃளாவர்' மாதிரியும் காணப்பட்டன.

"இவை யெல்லாம் என்ன!" என்றேன்.

"இவை யெல்லாம் மாணவர்கள் செய்தவை. மிக நுட்பமான வேலைப்பாடு இப்படித்தான் பயிற்றப்படுகிறது" என்றார் திரு காமத்.

வெல்டிங் பகுதியில் இரண்டு இரும்புத் தகடுகளை ஒரு இரும்புக் கம்பியில் மின்சாரம் செலுத்தி இணைக்கும் அற்புதக் காட்சியைப் பார்த்தோம். மின்சாரம் பாய்ச்சி, கம்பி இணைக்கப்படவேண்டிய இரும்புடன் சேரும்போது கண்ணைப் பறிக்கும் மின் ஒளி ஏற்படுகிறது. அந்த மின் ஒளியை வெறும் கண் கொண்டு பார்க்க முடியாது. மேலும் அதிலிருந்து தெறிக்கும் இரும்புப் பொறிகள் கண்ணில் படாமலிருப்பதற்காகவும் முக மூடி கொடுத்தார்கள். அதைப் போட்டுக்கொண்டு பார்த்தோம்.

கோச்சு பாக்டரி ஆண்டு விழாவுக்கு வந்திருந்த பெண்கள் கூட்டத்தின் ஒரு பகுதி. ராஜாஜி, மாதிரிக் கோச்சு ஒன்றைப் பார்வையிடுகிறார்.



அப் பயிற்சிப் பள்ளிக் கூடத்தை விட்டு ஸ்ரீ சாம்பமூர்த்தி ஷாப்புகளுக்கு அழைத்துச் சென்றார். அங்கு கொத்தர்கள் வெகு சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தார்கள். அந்தச் சுறுசுறுப்பைக் கண்டபோது, "வேலை சீக்கிரமே முடிந்துவிடும்போலிருக்கிறதே" என்றேன்.

"ஆமாம், அக்டோபர் முதல் தேதியிலிருந்து கோச்சுகட்டும் வேலை ஆரம்பமாகி விடும்!" என்றார்.

அதிசயம் எல்லாம் உண்மையாகிவந்தால், அதிசயப்படுவதற்கு விஷயமே இல்லாமற் போய் விடுமோ என்று தோன்றியது.

ஒவ்வொரு ஷாப்பிலும் பெரிய ஜாதிக்காய் பலகை அடித்த பெட்டிகள் இருந்தன. "இவை யெல்லாம் என்ன!" என்றேன்.



ஸ்ரீ கே. சடகோபன்

"அந்த அந்த ஷாப்பில் அமைக்க வேண்டிய இயந்திரங்கள் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகின்றன!" என்றார்.

அப்படிச் சொல்லிக் கொண்டிருந்த போதே தலைக்கு மேல் ஏதோ சத்தம் கேட்டது. தூக்கி வாரிப் போட்டது. "பயப்படாதீர்கள், அது க்ரேன்!" என்றார். ஆங்கிலத்தில் க்ரேன் என்பதற்குக் 'கொக்கு' என்ற பொருள் இருப்பது நினைவுக்கு வந்து விட்டது.

இதைப் புரிந்து கொண்டவர் போல் சிரித்துக் கொண்டே, "கொக்கு இல்லை, கனமான பொருள்களைத் தூக்கும் இயந்திரம்!" என்றார். அப்போது, அங்கே நான்கடி அகலமும், உயரமும், நீளமும் கொண்ட ஒரு பெரிய இரும்பு பாரம் வான வெளியை நோக்கி எழும்பியது!

இவைகளுக்கு 'ஓவர்ஹெட் க்ரேன்'கள் என்று பெயராம். இவை ஒவ்வொரு தொழிற்கூடத்திலும் இருக்கின்றன. ஆம். அவை தலைக்கு மூப்பது அடிக்கு மேலே தொழிற்கூடத்தின் ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலைக்குக் கனமான பொருள்களை எடுத்துக் கொண்டு போய்க் கொடுக்கவும், ரயில் பெட்டியைக் கொஞ்சம் கொஞ்சமாக, வேலை முடிய முடிய நகர்த்தி அடுத்த ஷாப்புக்குக் கொண்டு சேர்க்கவும் பயன்படும் என்றார்.

இன்னொரு தொழிற்கூடத்தில் பெரிய கிணறு தோண்டியிருந்தார்கள். "எதற்கு இது!" என்றேன்.

"இங்கு ஆயிரம் டன் பளுவை அழுத்தக் கூடிய ஒரு பெரிய இயந்திரம் வைக்கப் போகிறார்கள்" என்றார் திரு சாம்பமூர்த்தி.

"அது என்ன வேலை செய்யும்! அது எதற்குப் பிரயோஜனம்!"

"அது பெரிய சுத்தியல் மாதிரி. மிகக் கனம் பொருந்திய இரும்பை வளைக்கவும், வெட்டியெடுக்கவும் தட்டி நீட்டவும் பயன்படும்."

"இப்படி எத்தனை இயந்திரங்கள் இந்தப் பத்துத் தொழிற்கூடங்களிலும் அமைப்பார்கள்!" என்று கேட்டேன்.

"சுமார் 735 இயந்திரங்கள்!" என்றார்.

"அடேயப்பா!"

'இவ்வளவு பெரிய இயந்திரங்கள் எல்லாம் வைக்கிறார்களே, இதற்குப் போடப்பட்டுள்ள அஸ்திவாரம் சரியாக இருக்குமா, நல்ல சிமிண்ட் உபயோகப்படுத்தியிருப்பார்களா!' என்று வேறு கவலை ஏற்பட்டு விட்டது.

"ரயில்வே இன்ஜினீர்களின் மேற்பார்வையின் மீதுதான் வேலைகள் நடந்திருக்கின்றன. மேலும் நல்ல சிமிண்ட், நல்ல இரும்பு, வர்ணம் முதலியன இந்திய ரயில்வே–சர்க்காரே வாங்கி கண்டிராக்டர்களுக்குக் கொடுத்து வேலை செய்யச்சொல்லியிருக்கிறார்கள். அதனால் கவலைப்பட

உற்சாகத்தோடு ஆண்டு நிறைவில் கலந்துகொண்ட குழந்தைகளும் ராஜாஜியும். குழந்தைகளைப் போலவே ராஜாஜியும் பொம்மை ரயிலை விட்டுப் பார்க்கிறார்.



வேண்டியதில்லை" என்றார் ஸ்ரீ சாம்பமூர்த்தி. இந்தப் பத்து ஷாப்புகளுக்கும் 8,100 டன் இரும்பும், 19,500 டன் சிமிண்டும்; ஆகியிருக்கின்றன. வெல்டிங் முறையில் கட்டப்பட்ட பெரிய தொழிற்சாலை நம் நாட்டிலேயே இது தான் பெரிது என்று அறிந்தபோது ரொம்பவும் பெருமையாக இருந்தது எனக்கு.

ஓர் இடத்தில் ஒரு புதுமாதிரி இயந்திரம் வேலை செய்தது. அதாவது ஓரளவு மூடியாகி, சக்கரத்தில் ஏற்றப்பட்ட பெட்டியை அகல வாட்டில் கொண்டு செல்லச் சில இயந்திரங்கள் இருக்கின்றன. அவற்றுக்கு 'ட்ராவர்ஸ்' என்று பெயர். அதை அமைத்துக் கொண்டிருந்தார்கள் சில மேனாட்டு இன்ஜினீர்கள்.

" இவர்கள் மேற்கு ஜெர்மானியர். இந்த இயந்திரம் மேற்கு ஜெர்மனியிலிருந்து வாங்கியிருக்கிறோம். அந்த மேற்கு ஜெர்மன் கம்பெனிக்காரர்கள்தங்கள்யந்திரத்துடன் இன்ஜினீர்களை அனுப்பியுள்ளனர். அதைச் சரியாகப் பொருத்தி நன்றாக வேலை செய்யத் தொடங்கியபின் தங்கள் நாட்டுக்குப் போவார்கள்."





## பிலிப்ஸ் வெள்ளி விழா !

பிலிப்ஸ் கம்பெனியாரின் வெள்ளி விழாவையொட்டிய கண்காட்சியை ஏப்ரல் 6-ந்தேதி கவர்னர் ஸ்ரீ பிரகாசா திறந்து வைத்தார். அன்று பிலிப்ஸ் கம்பெனியாரின் டெலிவிஷனில் முதலில் ஸ்ரீமதி எம். எஸ். எஸ். தோன்றிப் பிரார்த்தனை கீதம் பாடினார். பிறகு கவர்னர் ஸ்ரீ பிரகாசா தோன்றிச் சிறு சொற்பொழிவாற்றினார். வெள்ளி விழாவையொட்டி பிலிப்ஸ் கம்பெனியார் 12 நூதன தெரு விளக்குகளைச் சென்னைக்கு நன்கொடையாக வழங்கினர். இந்த வெள்ளி விழாக் காட்சிகளை இங்கே காணலாம். விழா சிறப்பாக அமையக் காரணமான சென்னை பிலிப்ஸ் மானேஜர் திரு லக்ஷ்மிரதனையும் மற்ற நிர்வாகிகளையும் பாராட்டுகிறோம்.



இந்தத் தொழிற்சாலைக்கு ஆரம்பத்தில் ஐம்பது பெட்டிகள் ஸ்விட்ஸர்லாந்து தேசத்திலிருந்து வரும். அதை இணைத்து, இத்தொழிற்சாலையில் கோச்சு கட்டக் கற்றுக் கொள்ளுவார்கள். 1959-லிருந்து ஆண்டுக்கு 350 ரயில் பெட்டிகள் கட்டுவார்களாம். அதாவது ஆறு மணி நேரத்தில் ஒரு கோச்சு பூர்த்தியாகுமாம்!

இங்கு வேலை செய்யப் போகும் தொழிலாளருக்கெனவும், உத்தியோகஸ்தர்களுக்காகவும் பெரிய நகரம் எழும்பிக் கொண்டிருக்கிறது. இடைவேளையில் தொழிலாளர் சிற்றுண்டி சாப்பிடவும், சற்று சிரம பரிகாரம் செய்யவும் பெரிய உணவுச் சாலை கட்டி முடிந்திருக்கிறது.

1952ல் வேலை ஆரம்பிக்கப்பட்டது. சுமார் மூன்றரைக் கோடி ரூபாய் தொழிற் கூடங்கள் கட்டவும், ரயில்கள் போடவும், சிமிண்ட் ரோடுகள் போடவும், தொழிலாளர் வசதிக்கான காண்டீன் கட்டவும், காலனி எழுப்பவும் பிடித்திருக்கின்றன. சுமார் நான்கு கோடி ரூபாய் இயந்திரங்கள், மின்சார வசதி மற்றுமுள்ள ஏற்பாடுகளுக்காகப் பிடித்திருக்கிறது. கூடிய விரைவில் நாலாயிரம் தொழிலாளர்கள் இங்கு வேலை செய்யப் போகிறார்கள். அது பத்தாயிரமாகக் கூடப் பெருகலாம்.

இதையெல்லாம் கேட்டு விட்டுத் திரும்பிய போது மணி பன்னிரண்டு. காரில் வந்து கொண்

டிருந்தோம். சிந்தனை யெல்லாம் பிரம்பூர் தொழிற்சாலையைப் பற்றியே சுழன்று சுழன்று வந்தது. அத்துடன், 'நல்லகாலம் பிறக்குது! நல்ல காலம் பிறக்குது! தொழில் பெருகுது! தொழிலாளி வாழ்வான்!' என்று என் மனத்தில் பாரதியாரின் பாடல் நினைவு வந்தது. இதில் அதிசயம் என்ன இருக்கிறது!

**மா**ர்ச்சு 21-ம் தேதி இந்த இண்டக்ரல் கோச் பாக்டரியைச் சேர்ந்த தொழிற்பயிற்சிப் பள்ளியின் ஆண்டு விழாவுக்கு ராஜாஜி தலைமை தாங்கினர். பயிற்சிப் பள்ளியைப் பார்த்து விட்டு, அவர்கள் செய்யும் வேலைகளையும் பார்த்து விட்டு, அவர்கள் ஏற்படுத்தியிருந்த கண்காட்சியையும் பார்த்து விட்டு ரொம்பவும் சந்தோஷ மடைந்தார்.

"இன்று உங்கள் பள்ளிக்கூடத்துக்கு வந்து பல விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். இவ்வளவு அருமையான காரியம் செய்த உங்களுக்கு இப்பொழுது ஒரு பதக்கம் என்னிடமிருந்தால் அதைக் கொடுத்துப் பாராட்ட வேண்டும்! மிக மிக நல்ல காரியம் செய்து வருகிறீர்கள்!" என்றார். பயிற்சிப் பள்ளிக்கூடத்தின் தலைவர் ஸ்ரீ காமத் அவர்கள் இந்தப் பாராட்டைக் கேட்டு மிக்க மகிழ்ச்சி அடைந்திருக்க வேண்டும். ராஜாஜியிடமிருந்து இத்தகைய ஒரு பாராட்டைப் பெறுவது என்றால் அது எத்தனை பெரிய பாக்கியம்!

ராஜாஜியினுல் இவ்வளவு புகழப்பட்ட ஸ்தாபனத்துக்கு உயிராய் விளங்குபவர் பிரதம நிர்வாக அதிகாரியாகப் பணியாற்றி வரும் ஸ்ரீமான் சடகோபன். தமிழகத்தில் இந்தப் பெரும் தேசியத் திட்டம் அவருடைய சலியா உழைப்பினாலும் அடங்கா ஆர்வத்தினாலுமே இவ்வளவு முன்னேறி யிருக்கிறது! அவரது முயற்சி நிச்சயம் திருவினையாகும்.

## டி. கே. சி. யின் கடிதங்கள்

வண்ணார்பேட்டை, திருநெல்வேலி
10-5-42

நமஸ்காரம்.

**ப**க்தியும் தமிழும் இசையும் அபூர்வமான இளர்ச்சியைக் கொடுத்து விட்டன. உலகத்தில் வேறு எங்கேயாவது யாராவது இந்த விதமான உணர்ச்சியை அனுபவிப்பதுண்டா என்று வினவத் தோன்றுகிறது. நம்முடைய நண்ப சிகாமணிகள் "நீ என்ன எல்லோருடைய இதயத்தையும் கண்டு விட்டாயா?" என்று கேட்கலாம். இதயத்தைக் காணவில்லைதான். ஆனல் நம்முடைய சாவேரி போலவும், அடாணு போலவும் உயர்ந்த ரகமான தேன் எங்கும் இடையாது.

தன்னை மறந்து
தலைவாசல் தாள்போட்டு
உன்னை நினைந்து
நீறங்குவ தெக்காலம்

போலவும்

பாழ்வாழ் வெனும்
இப்படு மாயையி லே
வீழ்வாய் என
என்னை விதித்தனை யே
தாழ்வான வை
செய்தன தாம்உள வோ
வாழ்வாய் இனி
நீ மயில் வாகனனே!

போலவும் தமிழுண்டா? குன்று தொருடிய முருகன் உண்டா? வேலுண்டா? 'டாங்கிகள்' நம்மிடம் இல்லைதான்; 'எயர் கிராப்ட் காரியர்கள்' நம்மிடம் இல்லைதான். 'டைவ் பாம்' போடத் தகுந்த விமானங்களும் இல்லைதான்.

கிளைபட் டெழு
சூர்உரமும் கிரியும்
தொளைபட் டுரு
வத்தொடு வேல்

இருக்கிறது. இந்த வேல் போன போன இடமெல்லாம் நாலா பக்கமுமே நின்று காக்கிறது. இத்தகைய ஆயுதத்தை ஜப்பானியர்தான் செய்து கொண்டார்களா? "மேல்" நாட்டார்தான் செய்து கொண்டார்களா? இல்லை. நான் சொல்லுவது உபசாரமும் அல்ல, சென்டால்த் தனமும் அல்ல. வெறும் உண்மை.

"கந்தர் அனுபூதி" நல்ல பொக்கிஷம். அதில் கரன்ஸி நோட்டுகள் இல்லை. ஆனல் எந்த மார்க்கெட்டிலும் செல்லும்படியான பொன்னும் ரத்தினங்களுமே கிடக்கின்றன. மூன்ருவது பாட்டு

வானே? புனல்பார் கனல்மா ருதமோ?
ஞானே தயமோ? நவில்நான் மறையோ?
யானே? மனமோ? எனையாண் டஇடந்
தானே? பொருளா வதுசண் முகனே

அருமையான பாட்டு. விஷயம் பெரிய விஷயம். பரதத்துவ லக்ஷணத்தை அழகாய் எடுத்துச் சொல்லி யிருக்கிறது. தொண்ணூற்ருறு தத்துவங்களையும் சொல்லிவிட்டு (ஒதுக்கியும் விட்டுத்தான்)

"எனையாண்ட இடந்தானே
பொருள்"

என்று முடித்ததின் நயம் தனி. உண்மையை, அதாவது பரதத்துவத்தை அறிந்து அனுபவித்திருந்தால்த் தான் இப்படி யெல்லாம் லகுவாகவும் விளக்கமாகவும் வியாக்கியானம் செய்யக் கூடும்.

இங்ஙனம்
டி. கே. சிதம்பரநாதன்

# லிப்டன்

உங்களுக்கு நல்ல டீ வேண்டுமானால்

# எல்லோ

மஞ்சள் நிற டின்களிலுள்ள லிப்டன் டீயையே வாங்குக

# லேபிள்




1 பவுண்டு, ½ பவுண்டு

# டீ

ஸீலிட்ட டின்களில்

எப்பொழுதும் வாங்குக

LCX-54TM

# 'சோமு'வின் சிறுகதைகள்

எஸ். மகாராஜன் பி. எஸ்ஸி., பி. எல்.

சிறு கதை என்றால் ஏதாவது ஒரு நிகழ்ச்சியை அடிப் படையாகக் கொண்டிருக்கும். அடி, நுனி, இடை யென்று மூன்று அங்கங்கள் சிறுகதை களுக்குண்டு. எடுத்த எடுப்பிலேயே ஒரு நெருக்கடி, அல்லது சிக்கல் ஏற்படும். சிக்கல் முறுக்கேறிப் பின் அவிழ வேண் டும். கதைக் கோப்பு கட்டு விடாமல் இருக்க வேண்டும். கதை வில்லாக வளைந்து கடைசி வார்த்தையிலே சுருக் கென்று பாய வேண்டும்; அல்லது கோடையிடி விழுந்த மாதிரியாவது கதை ஆரம்பிக்க வேண்டும்; இரண்டு நிமிஷங் களில் கதை முடிந்தும் விடவேண்டும். அந்த இரண்டு நிமிஷங்களுக் குள்ளாக மயிர் சிலிர்க்கும்படியான சம்பவம் ஒன் றைக் கூறி முடித்து விடவேண்டும். அல்லது மனசிலே ஒரு அதிர்ச்சியை யாவது உண்டாக்கிவிட வேண்டும். சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து ஹைகோர்ட்டுக்குப் போய்ச் சேர்வதற்குள் கதை ஒரு முடி வுக்கு வந்து விட வேண்டும். ஏனென்றால், மனிதன் அவ் வளவு துரித காலத்திலே வாழ்க் கையை நடத்துகிறான். அவனு டைய வாழ்க்கையிலே அவ் வளவு பரபரப்பும், தலைகால் தெரியாத வேகமும் ஏற்பட்டு விட்டன. இவ்வாறு வேகத்தின் மோகத்தில் சடுபட்ட மனித னுக்கல்லவா, கதையைச் சொல் லித் தொலைக்கவேண்டி யிருக் கிறது. ஆகவே, ஒரு விநாடி யைக் குறுகத் தறித்து அதற் குள்ளே ஒரு கதையைத்திணிக்க வேண்டும். ஒரு விநாடியிலே நம்மைச் சிரிக்கவைக்க வேண் டும்; அடுத்த விநாடியிலே சோகக் கடலிலே நம்மை அமுக்கி எடுக்கவேண்டும். பனிச் சென்ற சோகம், சரேல் என்ற சிரிப்பு, திமிர் என்ற காதல்; மின்சார நாகரிகத்திலே நிரந்தர தத்துவங்களுக்கு இடமில்லை யென்றாகி விட்டது.

ஆனால், 'சோமு'வின் கதைகள் மேற் சொன்ன இலக்கணத்துக் கெல்லாம் முற்றிலும் மாறுபட்டவை.

'சோமு' ஒரு உத்தமக் கவிஞர். வழி தடுமாறி, சிறு கதை உலகத்துக்குள்ளே புகுந்து விட்டாரோ என்ற பயத்தோடு அவருடைய 'உதயகுமாரி', 'மஞ்சள் ரோஜா', 'கேளாத கானம்' என்ற கதைத் தொகுதிகளைப் படிக்க ஆரம்பித்தேன். படித்த பிறகு, அவருடைய ஸ்பரிசத்தால் சிறுகதை இலக்கியம் புதிய அந்தஸ்தை யும், கவிதைக்கே உரிய மென்மையையும் பெற்று விட்டது என்று தெரிய வந்தது.

ஒவ்வொரு கதையும் வாசகர்களுடைய மனசை இழுத்துப் பிடித்து நிரந்தர தத்து வங்களோடு லயித்து நிற்கும்படி செய்து விடுகிறது. திரை மறைவிலே யிருக்கும் பிரபஞ்ச மர்மங்களை, சுக துக்கங்களின் பொருந்தாமையை அல்லது பொருத் தத்தை, மனித வாழ்க்கையின் அடிப் படைப் பண்புகளை, நேருக்கு நேர் அநிகார தோரணையோடு தொட்டுக் காட்டுகின் றன 'சோமு'வின் கதைகள். மண்ணையும், விண்ணையும் கூட்டிப் பயிர் செய்யும் கதைகள் அவை. தத்துவ ஞானியும், கலை ஞனும் கூடிக் களிக்கும் போது ஜனியமான கதைகள், 'சோமு' வின் கதைகள்.



'கால பாசம்' என்ற கதை, தத்துவத்தின் கொடு முடிக்கே இழுத்துச் சென்று விடுகிறது. கவிகளுக்கே உரிய துணிச்ச லோடும், கற்பனையோடும், ஞானிக்கே உரிய நிதானத் தோடும், யமனைப் பற்றித் தீர்ப் புக் கூறுகிறது இந்தக் கதை. யமனுக்கு, யமியென்று ஒரு தங்கை. பாசத்தால் அவனிடம் கட்டுப்பட்டிருக்கிறான் யமன். யமியோ பாண்டிய குமாரியின் பொன் மானை விரும்பித் துடிக் கிறாள். கால தூதர்களை யனுப்பி மானை விண்ணுலகத்துக் கேற்றி விடுகிறான் யமன். மானை விட் டுப் பிரிந்த பாண்டிய குமாரி சோகத்தால் வாடுகிறாள். தோழி யைப் பிரிந்த மான், யமியை அலக்ஷியம் செய்து, பாண்டிய குமாரியை நினைத்து நினைத்துக் கண் ணீர் உகுக்கிறது. யமனுக்கு தர்ம சங்கடமாகி விட்டது. தங்கைக்காக மானைக் கொன்று விட்டோமே என்று வருந்துகிறான் யமன். மானின் மரணத் தால் பாண்டிய குமாரிக்குத் துக்கம் ஏற் பட்டு விட்டதே என்று கண்ணீர் வடிக் கிறான். "காலதேவனுடைய மனத்தில் இரக்கம் உதித்தது. யமி, மான், பாண்

டிய குமாரி — இந்த மூன்று இதயங்களின் துக்கத்தை நீக்குவதற்கு ஒரு வழிதான் இருக்கிறது. உயிரை உலகிலே அனுப்ப முடியாது. ஆனால் உலகிலிருந்து பிரிக்க முடியுமல்லவா தன்னால்?" பாண்டிய குமாரியை மானிடம் கொண்டு வந்துவிட்டால், மூன்று இதயங்களின் துயரமும் தீருமல்லவா? உண்மையான இரக்கமும், கருணையும் யமனுக்கு ஏற்படவே, பாண்டிய குமாரியின் உயிரையும் பிரித்து வானுலகத்துள் கொண்டு வருகிறான். இதை யெல்லாம் உலகத்திலுள்ளவர்கள் கண்டார்களா? யமன் மேல் பழியைப் போட்டார்கள். பாண்டிய நாடு முழுவதுமே கண்ணீர் வடித்தது. யமனுக்கு எல்லையற்ற வருத்தம். அப்பொழுது வருகிறான் சித்திரபுத்திரன். கையிலே சுருட்டி வைத்திருந்த ஓலையைப் பிரித்து வாசித்தான். அந்தப் பட்டியலிலே அன்று கொண்டு வரவேண்டிய உயிர்கள்என்ற தலைப்பிலே பாண்டிய குமாரியின் பெயரும், பொன்மானின் பெயரும் பொறித்திருந்தன. இதைப் பார்த்ததும் யமனுக்கு ஞானம் பிறக்கிறது. "எனக்கு இதயம் என்று ஒன்று இருப்பதாகவும், பாசத்தினால் ஏதேதோ செய்து விட்டதாகவும் நினைத்தேன், அது தவறு. என்னுடைய கையிலே பாசக் கயிறு எப்படி ஒரு கருவியாக இயங்குகிறதோ, அப்படியேதான் காலம் என்ற ஒரு பெரும் நியதியின் கையிலே நான் பாசக் கயிறாக இருக்கிறேன். என்னுடைய உணர்ச்சிகள் என்பவை யெல்லாம் அந்த நியதியின் இயக்கங்கள்; என்னுடைய செயல்கள் எல்லாம் அந்த நியதியின் பிரதிபலிப்புத்தான்" என்று அறிகிறான்.



இந்த மாதிரியே, இம் மூன்று தொகுதிகளிலும் உள்ள ஒவ்வொரு கதையும், ஒவ்வொரு வகையில் சிறந்து விளங்குகிறது. எளிய தமிழ்ச் சொற்கள். அனாவசியமான வார்த்தை ஒன்று கூடக் கிடையாது. ஜீவனுள்ள நடை. எழிலும், நயமும், இசைப் பண்பும், கற்பனைச் செறிவும், சேர்ந்து இந்தக் கதைகளுக்குச் சிறுகதை உலகிலேயே ஒரு சிரந்தரமான ஸ்தானத்தை வழங்குகின்றன. கதைகள் அத்தனைக்கும் ஆதாரமாகத் தமிழ்ப் பண்பாடும், பரிசுத்தமான உணர்ச்சிகளும், கலை நோக்கும் இணைந்து உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன.

இந்த மூன்று கதைத் தொகுதிகளைப் படித்த பிறகு, ராஜாஜி முன்னுரையில் சுருக்கமாகச் சொல்லியிருப்பது எவ்வளவு பொருத்தம் என்று உணர முடிகிறது:— "பழைய சித்தர் பாடல்களிலுள்ள வேதாந்தச் சிரிப்பும், இன்னும் மற்றப் பழம்பெரும் தமிழ் நூல்களிலுள்ள அறிவும் - இவை யெல்லாம் சேர்ந்து ஒரு தனிப் பண்பு தருகின்றன, 'சோமு' வின் கதைகளுக்கு."

உதய குமாரி விலை ரூ. 2/-

மஞ்சள் ரோஜா விலை ரூ. 2/-

கேளாத கானம் விலை ரூ. 2/-

ஆசிரியர்: 'சோமு'

கிடைக்குமிடம்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை.

## தமிழ்க் கடவுள்

'குஹன்'

★

அழகுக்கணி எங்கள் முருகன்—தெய்வ
அருளுக் கொருநிதி முருகன்
பழகப் பெருந்துணை முருகன்—தமிழ்ப்
பாவலர் நாயகன் எங்கள் முருகன்

ஆணவப் பாம்பினை அடக்கும்—மெய்
அறிவென்னும் மயில் எங்கள் முருகன்
சன மனத்தினர் செயலால்—வினை
இடரைப் பொடிசெய் வேல் முருகன்

குன்றுதோ றாடும் முருகன்—காதல்
கோலத் திருமகன் முருகன்
வென்றிடும் வேலுடை ஒருவன்—தமிழ்
வீரத் திருமகன் முருகன்

மாமறை சொல்லும் இருமுகம்—தெய்வ
மங்கைபார்ச் செல்லும் இருமுகம்
சேமம் நிறைக்கும் இருமுகம்—தமிழ்ச்
செல்வம் வளர்க்கும் அறுமுகம்

அறுபடை வீடுகள் கொண்டே—நம்மை
ஆளும் தமிழ்த் தெய்வம் முருகன்
திருவளம் சீர்தவம் நேர்மை-நிறை
செந்தமிழ் நாடெங்கள் முருகன்

# அமர தாரா

## அத்தியாயம் 5

### சுலோவின் அன்பு

சுலோசனா என்னிடம் அந்தரங்கமான அன்பு வைத்திருந்தாள். நானும் அவளிடம் அளவிலாத அன்பு வைத்திருந்தேன். என்னுடைய அன்பை விட அவளுடைய அன்பு மிக உயர்ந்தது என்று இப்போது எண்ணிப் பார்க்கும்போது எனக்குத் தோன்றுகிறது.

அவள் பணக்கார வீட்டுப் பெண். படித்தவள். ஒரு குறையும் இல்லாதவள். நானோ இதெல்லாம் எதுவுமே இல்லாதவள். நான் அவர்கள் வீட்டிலிருந்தபடியால், அவர்களுக்குக் கடமைப்பட்டிருந்தேன். அதனால் அவளிடம் அன்பாக இருந்தேன். என்னுடைய அன்பில். அதிகமில்லா விட்டாலும் ஒரு சிறிதளவு சுயநலம் இருந்தது. ஆனால் அவளுடைய அன்பு மாசில்லாதது. பிரதிபலனை எதிர்பார்க்காமல் அவள் செய்த உதவியும், அவள் வைத்திருந்த பிரியமும் மறக்க வொண்ணாதவை. மேலும் எனக்கு உதவி செய்வதாக அவள் நினைக்கவே இல்லை. மிகவும் சகஜமாகச் செய்தாள். என் நன்றியைக் கூட எதிர்பார்க்கவில்லை. அவ்வளவு ஆடம்பர வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த ஒரு பெண்ணின் மனம் எப்படி அவ்வளவு விசாலமாக இருந்ததென்பதை எண்ணும்போது எனக்கு வியப்பாயிருக்கிறது. தன் தந்தை எனக்கு விரோதமாக நடந்து கொள்கிறார் என்பதற்கு எவ்வளவு வருத்தப் பட்டிருக்கிறாள்? அதற்குப் பிரதியாக நான் அவளுக்கு என்ன செய்ய முடியும்?

சுலோவின் கண்களில் நீர் துளிப்பதை முதல் முறையாகப் பார்த்தேன். அவள் கண்களில் கண்ணீரே வராது என்று நான் எண்ணியிருந்தேன். எனக்கு மிகவும் அதிசயமாக இருந்தது. அவள் அழும்படியாக என்ன நடந்திருக்கும்?

"என்ன நடந்தது, சுலோ? சீக்கிரம் சொல்லேன்" என்று படபடப்போடு கேட்டேன்.

"உன்னிடம் சொல்லவே எனக்குத் தயக்கமாக இருக்கிறது, இந்து. நீ அன்று சற்று அழுத்திச் சொன்னாய் அல்லவா? அதன் பிறகு கூட நான் அவ்வளவாக அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. முந்தாநாள் மாலை அவரும் அப்பாவும் பேசிக் கொண்டிருந்த போது அந்தப் பக்கம் போனேன். தற்செயலாகக் காசிலிங்கம் என்ற பெயர் காதில் விழுந்தது. நம்ம வீட்டு 'ட்ராயிங் ரூமில்'

ஆனந்தி



தான்பேசிக்கொண்டிருந்தார்கள். நான் உள்ளே சென்றதும் பேச்சை நிறுத்தி விட்டார்கள். நான் கொஞ்சங் கூடக் கவனிக்காத மாதிரி உள்ளே வந்து விட்டேன். பிறகு கதவுத் திரைக்குப் பின்னால் நின்று என்ன பேசுகிறார்கள் என்று கவனித்தேன். என் தந்தை 'உங்களுக்கும் காசி லிங்கத்துக்கும் தான் ஒத்து வராது என்று சொன்னீர்களே? இது மாத்திரம் எப்படி சாத்தியம்?' என்று சற்று அழுத்திக் கேட்டார்.

அதற்கு ஈசுவரமூர்த்தி, 'எனக்குக் காசிலிங்கத்திடம் சொந்த முறையில் ஒரு விரோதமும் கிடையாது. அவன் செய்த தவறான காரியங்களை நான் வெறுத்தேன். அவ்வளவு தான். என் விட்டில் புகுந்து கலாட்டா செய்தது குற்றமல்லவா? அது மாத்திரமா? ஏதேதோ கொள்ளைக் காரர்களுடனெல்லாம் தொடர்பு வைத்திருந்தான். அதனால் தான் போலீஸில் அவன் பேரில் கண்காணிப்பு இருந்தது. அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?' என்றார்.



இந்தச் சந்தர்ப்பத்தில் அப்பாவைப் பார்க்க யாரோ வந்து விட்டார்கள். ஆனால் அவர்கள் உன்னைப் பற்றித் தான் பேசுகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிந்து போய் விட்டது. மறுபடியும் இன்று ஈசுவரமூர்த்தி டெலிபோன் செய்தார். நான் தான் டெலிபோனை எடுத்தேன். நாலரை மணிக்கு வரலாமா என்று அப்பாவைக் கேட்கச் சொன்னார். அப்பாவிடம் கேட்டு நானே தான் 'வரலாம்' என்று சொன்னேன். அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள எனக்கு ஆவல் உண்டாயிற்று.

ஆகவே நான் ஒளிந்து கொண்டு அவர்கள் பேசுவதைக் கேட்டேன்.

அவரும் அப்பாவும் முதலில் ஏதோ கணக்கு விவரங்கள் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் பொறுமை இழக்கும் சமயத்தில் ஈசுவரமூர்த்தி, 'நான் சொன்ன விஷயத்தை யோசித்தீர்களா?' என்று கேட்டார்.

அதற்கு அப்பா, 'யோசித்தேன். ஆனால் இன்னும் ஒரு முடிவுக்கு என்னால் வர முடியவில்லை. தயக்கமாகவே இருக்கிறது' என்றார்.

'இதில் தயங்குவதற்கும் யோசிப்பதற்கும் அப்படி என்ன இருக்கிறது?' என்றார் ஈசுவர மூர்த்தி.

அதற்கு அப்பா, 'இவள் சம்மதிக்க வேண்டாமா, ஐயா? ஏற்கெனவே யே வேறு ஒருவனிடம் அந்தப் பெண்ணுக்குஇஷ்டமிருப்பதாகத்தெரிகிறதே'என்றார்.

'ஆமாம்! பெரிய இஷ்டம். இதெல்லாம் இந்தக் காலத்துப் பெண்கள் நாவல் படித்து விட்டுப் பிதற்றுகிற காரியம் தானே. பிடித்திருக்கிறானே, பெரிய புளியங் கொம்பாய்ப் பார்த்து. அவன் இவளைத்தான் வந்து தேடிக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறானே? ஏதாவது பெரிய இடமாகத்தானே, ஸார் பார்ப்பான்? இந்த அனாதைப் பெண்ணைக் கட்டிக்கொள்ள அவனுக்குப் பைத்தியமா என்ன? மேலும் அவன் மேலே இருக்கும் அந்தப் பயங்கரப் பழியைத் தெரிந்து கொண்டால் அவன் இவளைப் பற்றிக் கனவில் கூட நினைக்க மாட்டான். என்னைப் போலவா அவன்?' என்றார்.

'ஆமாம்! அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?'

'உலகத்தில் யாரும் செய்யாததை உங்களைச் செய்யும்படி வற்புறுத்தவில்லை. சாதாரணமாக எல்லாரும் செய்வதைத்தான் செய்யும்படி தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இதனால் தங்களுக்கு எந்த விதக் கஷ்டமும் ஏற்பட்டு விடாது. எனக்கு அதிகமாக வயதாகி விடவில்லை. குழந்தை ஒன்றும் கிடையாது. வேறு தொல்லைகள் எதுவுமே கிடையாது. நிறையச் சொத்து இருக்கிறது. அவளை நன்றாகப் பார்த்துக் கொள்வதற்கு என்னை விடத் தகுந்த

வரை நீங்கள் தேர்ந்தெடுக்கவே முடியாது. மேலும் அவன் தந்தைக்கு என்னால் ஏற்பட்ட சில கஷ்டங்களுக்குப் பரிகாரமாகவும் இருக்கும். இதற்கு நீங்கள் எதற்காகத் தயங்க வேண்டும்? உங்களுக்கும் இதில் எவ்வளவோ சௌகரியம் இருக்கிறது. நீங்கள் அவளுக்குக் கல்யாணம்செய்யப் பணம் செலவழிக்க வேண்டாம். அவளுக்கும் ஒன்றும் தரவேண்டியதில்லை. இன்னும் வியாபார சம்பந்தமாக நமக்குள் எத்தனையோ இருக்கின்றன. அதற்கெல்லாம் நான் உங்களுக்குச் சௌகரியம் செய்து தருகிறேன். இதெல்லாம் உங்களுக்கு நான் விவரித்துக் கூற வேண்டிய அவசியமில்லை. அவனை மாத்திரம் எப்படியாவது சம்மதிக்கச் செய்து விடுங்கள்.'

'ஆகட்டும். அவளுக்கும் இதை விடச் சிறந்த ஏற்பாடு இருக்க முடியாதென்றே தோன்றுகிறது. கூடிய சீக்கிரம் அவனிடம் பிரஸ்தாபிக்கிறேன். ஆனால் காசிலிங்கம் இதைத் தெரிந்து கொண்டால் இன்னும் தொந்தரவு கொடுப்பானல்லவா?'

'அதைப் பற்றிக் கவலையே வேண்டாம். அவன் இந்த உலகை விட்டுப் போய் மூன்று வருஷங்களுக்கு மேலாகி விட்டன.'

'என்ன? என்ன? இது நிஜம்தானா?'

''பகத்சிங்' என்ற கொள்ளைக்காரனைப் பிடித்தார்களே, இரண்டு வருஷங்களுக்கு முன்னால். உமக்குத் தெரியுமா?'



'ஆமாம்! தெரியும். அவனுக்கு மரண தண்டனை விதித்தார்கள் என்பது கூடத் தெரியும். இங்கு தானே கேஸ் நடந்தது.'

'அவன்தான் காசிலிங்கம்.'

'அட கடவுளே! காசிலிங்கம் கொள்ளைக்காரனா? அவனுடையபெண்ணையா நான் வீட்டில் வைத்துக்கொண்டிருக்கிறேன்? இது வெளியில் தெரிந்து விட்டால் என் மானம் போய் விடுமே.'

'அதனால்தான் நான் அவளை மணந்து கொள்வதாகக் கூறுகிறேன். என்னை யாரும் எதுவும் சொல்லமாட்டார்கள். சொன்னாலும் நான் பயப்படமாட்டேன். நீங்களே இப்படிக் கொள்ளைக்காரன் பெண்ணை வீட்டில் வைத்துக் கொள்ளப் பயப்படுகிறீர்களே? எங்கேயாவது அந்த மேதாவி அவளைக் கல்யாணம் செய்து கொள்வானா? யோசித்துப் பாருங்கள்.'

'உண்மைதான். சீமைக்குப் போன பையன் இவளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறானா? கொஞ்சம் அவகாசம் மாத்திரம் கொடுங்கள்' என்றார் அப்பா.

'அதற்கென்ன! எவ்வளவு நாளானாலும் விஷயத்தை முடித்து விட்டால் சரி' என்று சொல்லி விட்டு ஈசுவர மூர்த்தி கிளம்பினார். அப்பாவும் அறையை விட்டுப் போன பிறகு நான் அங்கிருந்து ஒருவருக்கும் தெரியாமல் என் அறைக்கு வந்தேன். உன்னிடம் இதைச் சொல்வதா, வேண்டாமா என்று ஒரே போராட்டமாக இருந்தது. கடைசியில் சொல்வதுதான் சரி யென்ற முடிவுக்கு வந்தேன். நீ இதை நினைத்து ரொம்பக் கவலைப் படாதே. நான் இருக்கிறேன். உனக்கு ஒரு கெடுதலும் வராமல் பார்த்துக் கொள்ளும்பொறுப்பு என்னுடையது'' என்று சுலோசனா கூறி முடித்தாள்.

இத்தனை விஷயங்களையும் எப்படித்தான் நான் கேட்டுக் கொண்டிருந்தேனோ? தலையை ஒரே யடியாகச் சுற்றியது. கட்டிலின் மீது சாய்ந்து கொண்டேன். உள்ளத்தில் இந்தமாதிரி ஒரு வேதனை ஏற்படக் கூடும் என்பது எனக்கு அன்றுதான் தெரிந்தது. என் அருமை அன்னை இறந்தபோதோ, மந்திர மூர்த்தியின் மரணத்தின் போதோ, நான் அத்தனை வேதனைப் படவில்லை. எனக்குப் பரிச்சயமேயில்லாத என் தந்தையான காசிலிங்கம் கொள்ளைக்காரர் என்றும், அதற்காக மரண தண்டனை விதிக்கப்பட்டார் என்றும் கேட்டபோது நான் அடைந்த வேதனை சொல்லத்

தரமன்று. அன்பே உருவான என் அன்னை சந்திரமணியின் கணவர் ஒரு கொள்ளைக்காரராக இருக்க முடியுமா? என் அன்னை இறந்து போனதே எவ்வளவோ நல்லதாயிற்று. காசிலிங்கத்துக்கு மரண தண்டனை விதித்த செய்தியை அவள் கேட்டிருந்தால் என்ன பாடு பட்டிருப்பாள்? இது தெரிவதற்கு முன்பே அவளைத் தன்னுடைய பாத கமலங்களில் அழைத்துக் கொண்ட இறைவனைப் போற்றி வணங்குகிறேன்.

நமது அன்புக்கும், மதிப்புக்கும் பாத்திரமானவர்களைப் பற்றி யாரேனும் குறைத்துப் பேசினால் ஏற்படும் மன வருத்தத்தைப் போல் வேறு எதுவும் உள்ளத்தைப் பாதிப்பதில்லை.

நான் துயரத்துடன் சுலோசனாவிடம், "சுலோ! என் தந்தை கொள்ளைக்காரர் என்பதை நீ நம்புகிறாயா?" என்று கேட்டேன்.

அதற்கு அவள், "இந்துமதி! அது எப்படி இருந்தால் என்ன? உன்னை நான் என் சகோதரியாகவே நினைக்கிறேன். அது உண்மையாகவே இருந்தால் கூட எனக்கு உன்னிடமுள்ள அன்பும், மதிப்பும் என்றும் மாறாது" என்று கூறினாள்.

இந்த இடத்தில் நான் உண்மையை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். சுலோசனாவிடம் நான் வைத்திருந்த அன்பில் அந்தக் கணத்தில் சிறிது குறை ஏற்பட்டு விட்டது. அவள் மறைக்காமல் உண்மையைச் சொல்லியது பற்றி ஒரு பக்கம் திருப்தி ஏற்பட்டாலும், அவள் அதை நம்புவது பற்றி வருத்தம்தான் ஏற்பட்டது. எனக்குப் பழக்கமேயில்லாத ஒருவரைப் பற்றி மற்றவர்கள் என்ன சொன்னால் என்ன என்று நான் நினைத்திருக்கக் கூடாதா? அப்படி நினைக்க முடியவில்லை. "என் தந்தை அப்படி இருக்க முடியாது" என்றுதான் எண்ணினேன். தந்தை என்பதை விட "என்" தந்தை என்பதில்தான் உள்ளம் நிலைத்தது. உலகத்தில் எல்லாமே "என்னுடையது" என்பதில்தானே அடங்கி நிற்கிறது? இறைவனைக் கூட "என் கடவுள்" "உன் கடவுள்" என்று பிரித்து விடுகிறார்களே! அதைவிட இது என்ன பெரிய அதிசயம்?

எனக்கு இந்தச் சம்பவத்துக்குப் பிறகு உலகமே பிடிக்காமல் போய் விட்டது. ரங்க துரையைப் பற்றி இவர்கள் கூறியது உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று ஒரு சமயம் தோன்றியது. இல்லா விட்டால் இப்படி ஒரு தகவலும் தெரிவிக்காமல்



இருப்பாரா? என் மீது ஒரு பெரிய பழி இருக்கிறதென்று அவருக்குத் தெரிந்திருக்கத்தான் வேண்டும். அதற்கும் மேல் என் தந்தை வேறு கொள்ளைக்காரர் என்று தெரிந்திருக்கலாம். அதனால் அவருக்கு வாழ்க்கையில் பல அவமானங்களைச் சகித்துக் கொள்ள நேரிடும். என்னை மறந்து விடுவது



தான் சரி யென்று அவருக்குத் தோன்றியிருக்கும். உண்மைதானே! இப்படிப்பட்ட பழியைத் தாங்கிக் கொண்டிருப்பவளை மணந்து கொண்டால் ஒரு ஐ. ஸி. எஸ். படித்த மனிதருக்கு உலகில் கௌரவம் கிடைக்குமா? முன்னேறத்தான் முடியுமா? என்றெல்லாம் யோசித்து மனத்தைப் புண்ணாக்கிக் கொண்டேன். ஆனால் இப்பொழுதுதானே ரங்கதுரையின் அன்பு மாசற்றது, நிரந்தரமானது என்று தெரிந்து கொண்டிருக்கிறேன். அப்போதெல்லாம் நான் அவருக்கு என் மனத்தால் இழைத்த அநீதிகளுக்கு எத்தனை ஜென்மம் எடுத்துப் பிராயச் சித்தம் செய்தாலும் போதாது. அவர் தம் அன்பு உள்ளத்தினால் என் தவறுகள் எல்லாவற்றையும் மறந்து மன்னித்துவிட வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

## அத்தியாயம் 6

# என்ன செய்வது?

சுலோசனா என்னிடம் இந்த விஷயத்தைக் கூறிய நிமிஷத்திலிருந்து ஒரு பெரிய கேள்விக்குறி என் முன்னால் நர்த்தனமாடத் தொடங்கியது. "என்ன செய்வது?" என்ற கேள்வி இரவு பகல் என்னை வட்டமிட்டது. பகலெல்லாம் கவலைப்பட்டது போதாதா? இரவில் சற்றுத் தூங்கலாம் என்று படுத்துக் கொள்வேன். தூக்கம் மாத்திரம் வராது. ஏதேதோ பயங்கரக் கற்பனைகளில் மனம் ஈடுபட்டு விடும். அப்படி நினைக்காமலும் இருக்கமுடியாது. 'பத்மநாபன் என்னை வற்புறுத்தி ஈசுவர மூர்த்தியிடம் ஒப்படைத்துவிட்டால் என்ன செய்வது?' என்று தோன்றி உள்ளத்தைச் சித்திரவதை செய்யும். ஆனால் அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் என் அருமைத்தந்தை மந்திரமூர்த்தி கூறியதை நினைவு படுத்திக் கொண்டு தைரியமடைவேன்.

ஆகா! அவர் கூறிய வார்த்தைகள் தான் எவ்வளவு தீர்க்க தரிசன முள்ளவை? "பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளாமல் வாழ முடியாது. இறைவன் தான் உன்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொன்னாரே. எவ்வளவு உண்மை? ரங்கதுரை இன்னும் ஏழெட்டு மாதங்களில் வந்து விடுவார். வந்தால் என்னை உடனே தேடிக் கண்டு பிடித்து விடுவார். அதுவரை இந்த வீட்டில் தைரியமாகவும், சந்தோஷமாகவும் இருந்து விடலாம் என்று எண்ணினேனே. என்ன பேதைமை? ஆனால் இப்போது மாத்திரம் எங்கே செல்ல முடியும்?

பத்மநாபன் இதற்கு ஒப்புக் கொள்ளும்படி நெருக்கினால் என்ன செய்வது? சுலோசனா அப்படியொன்றும் நேராமல் பார்த்துக் கொள்வதாகச் சொல்லி யிருக்கிறாள். உண்மைதான். ஆனால் அவளால் என்ன செய்துவிட முடியும்? அவளுடைய வார்த்தைகளை வக்கீல் பொருட் படுத்துவார் என்பது என்ன நிச்சயம்? அவரும், ஈசுவர மூர்த்தியும் என்ன ஏற்பாடுகள் செய் திருக்கிறார்களோ?

அந்தப் பாவி என் பெற்றோர்களின் வாழ்வில் குறுக்கிட்டு அவர்களுடைய இன்பத்தைக் குலைத்தது போதாதென்று என் வாழ்க்கையையும் கெடுக்க வந்து முளைத்தானே. நான் யாருக்கு என்ன தீங்கிழைத்தேன்? யாரிட்ட சாபம் என்னைத் தொடர்ந்து வருகிறது? என் அருமை அன்னையே! என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். உன் அன்பு எனக்குக் கவசமாக இருக்கட்டும்.

ஆனால் இவை அனைத்தையும் விட என் உள்ளத்தைத் தகித்த விஷயம் ஒன்று இருந்தது. என் தந்தை காசிலிங்கத்தைப் பற்றி இவர்கள் கூறும் விஷயம் உண்மையாக இருக்குமா? அல்லது அதுவும் என்னைக் கொடுமைப் படுத்துவதற்காகச் செய்யும் சூழ்ச்சியா? இப்படிக் கூறி என்னைச் சம்மதிக்கச் செய்து விடலாம் என்று நினைக்கிறார்கள் போலிருக்கிறது. அது மாத்திரம் நடக்காது. இந்தச் சூழ்ச்சியில் நான் சிக்கிக்கொள்ள மாட்டேன். ஏதேனும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டால் ஒருவருக்கும் தெரியாமல் புறப்பட்டு விடுகிறேன். அதன் பிறகு ஈசுவரன் இருக்கிறார். 'உலகமே அவன் கோயில்தான்' என்று அப்பா கூறு

PIONEERS IN TRANSPORT














அன்றாடத்தேவைகளையும் மற்றும் வருங்காலத் தேவை களையும் பரிசீலித்து திருப்தி அளிக்கும் வகையில் புதுப் புது முறைகளைக் கையாள் வதால் நாங்கள் இன்று போக்கு வரத்து சாதனங்களை அமைப் பதில் முன்னணியில் நிற்கிறோம். எங்கள் மிகச் சிறந்த அனுபவ மும், வேலைத்திறனும், திருப்தி கரமான சேவை அளிப்பதற் காகவே பயன்படுகிறது.







Simpson & Co Ltd

MADRAS-2.

கிளைகள் :

பெங்களூர்-உதகமண்டலம்-திருச்சி-செகந்திராபாத் (டெக்கான்)

# எப்ரல் 14 முதல்

**சென்னை வெலிங்டன் அசோக்**

**பாரத்** மற்றும்

தென்னாடெங்கும்





நேஷனல் புரடக்ஷன்ஸ்

# உலகம் பலவிதம்

ஸீனரியோ & திரைக்கதை
**T.R. ரகுநாத்**



டைரக்ஷன்
**S.A. முருகேஷ்**

வசனம் **வி.என். சம்பந்தம்** • சங்கீதம் **N.S. பாலகிருஷ்ணன்** • ஸ்டுடியோ **நியூடோன்**




RIGHTS CONTROLLED BY: ராதாகிருஷ்ணா பிலிம்ஸ், லிமிடெட். (ஆலப்புழை)
C/o சுவாமீஸ் லாட்ஜ், 1 ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு மதராஸ் - 2.

E.P

வாரே. இறைவனிடம் அடைக்கலம் புகுந்து விடுகிறேன். பிறகு நடக்கிற படி நடந்து விட்டுப் போகிறது.

ஆனால், என் தந்தை காசிலிங்கத்தைப் பற்றி இவர்கள் இப்படி ஒரு பழியை ஏன் கூறவேண்டும்? கோர்ட்டில் வழக்கு நடந்து தண்டிக்கப்பட்டதாக அல்லவா சொன்னார்களாம்? ஒரு வேளை உண்மையாக இருக்குமோ? சே! இருக்காது. என்னுடைய தந்தை ஒருகாலும் அப்படி இருந்திருக்கவே மாட்டார். அன்பும், தயையும் உருவான என் அன்னையை மணந்த அவர் கொள்ளைக்காரராக ஆகியிருக்க முடியாது. சந்தர்ப்பச் சூழ்நிலைகள் அப்படி நினைக்க இடங் கொடுத்திருக்கலாம். ஏன், என்மீது எப்படிப் பட்ட குற்றத்தைச் சுமத்துவதற்குப் பார்த்தார் அய்யாக் குட்டி! அதற்குச் சிறிதேனும் காரணம் உண்டா?

அய்யாக்குட்டி! அவருடைய விஷயம் என்ன ஆயிற்றென்றே தெரியவில்லை. நான் குங்குமத் துறையிலிருந்து வந்த பிறகு அவரிடமிருந்து ஒரு தகவலும் இல்லை. மகானுபாவன்! என்ன பாடு படுத்தினார்? இப்பொழுது தகவலே இல்லையே. அய்யாக் குட்டியை நினைத்தால் ஒரு பக்கம் சிரிப்பும், ஒரு பக்கம் ஆத்திரமும் வந்தன. அவர் ஒரு விந்தை மனிதர். உலகமெல்லாம் சுற்றிப் பார்த்தவர் போல ரங்கதுரையிடம் பேசினாரே. விந்திய மலைக்கு அப்பால் என்ன இருக்கிறதென்பதே தெரியுமோ, தெரியாதோ? நல்ல வேடிக்கை. இவர்களுடைய விசித்திரமான குணாதிசயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்கே ஒருவருடைய ஆயுள் முழுவதையும் செலவழித்து விடலாம். அத்தனை விநோதப் பிரகிருதிகள்!

* * *

சுலோசனா இப்போது முன்னைவிட என்னிடம் இன்னும் பரிவு காட்டினாள். ரமேஷும் ரொம்பக் கனிவாகப் பேசினார். எனக்குத் தைரியமூட்டுவதற்காகப் பேசுவது போல் சில சமயம் அவருடைய வார்த்தைகள் தோன்றும். ஆனால் தனக்கு எதுவும் தெரிந்ததாக அவரும் காட்டிக் கொள்ளவில்லை. நானும் கேட்கவில்லை. ஆனால் அவசியம் ஏற்பட்டால் அவருடைய உதவி எனக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கை பலமாக ஏற்பட்டது.

நான் எழுந்து நடமாட ஆரம்பித்து விட்டேன். ஆயினும் முழுதும் ரணம் ஆறவில்லை. நான் எழுந்து கீழே போகலாம் என்ற உத்தேசத்துடன் மாடிப் படியருகில் வந்தேன். ஒரு வேளை வீட்டை விட்டு வெளியே போகும்படி நேரிட்டு விட்டால் கால் வலியைப் பொருட் படுத்த முடியுமா என்று எண்ணிக் கொண்டே வந்தேன்.



ரமேஷ் தன் அறைக் கதவைத் திறந்து கொண்டு டென்னிஸ் மட்டை சகிதமாக விளையாடப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். "என்ன, இந்து! அதற்குள் அலைய ஆரம்பித்து விட்டாயா? நீ பேசாமல் உன் அறைக்குப் போ. உனக்கு என்ன வேண்டுமோ சொல்லு. முத்துவிடம் கொடுத்து அனுப்புகிறேன்" என்றார்.

"அப்படி என்ன வந்து விட்டது எனக்கு? நன்றாக ஆறிய பிறகும் சோம்பேறியாக உட்கார்ந்திருக்க முடியுமா? குழந்தை பாலுவைப் போய்க் கொஞ்சினாலாவது மனத்தில் இருக்கும் சுமை சற்றுக் குறையும்!" என்று அவரிடம் சொல்லி விட்டேன்.

ஒரு கணம் யோசித்தார் ரமேஷ். "இந்துமதி! நீ கவலைப் படவே வேண்டாம். நீ என்னைச் சகோதரனாக நினைத்துக் கொள். உனக்குப் பிடிக்காத காரியம் எதுவும் நடக்கும்படி நானும், சுலோசனாவும் பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம். அதை மாத்திரம் நினைவு வைத்துக் கொள். நீ நிம்மதியாக இருக்கலாம்" என்று புன்னகையுடன் கூறிவிட்டு வேகமாகக் கீழே

இறங்கிப் போய் விட்டார். நானும் மெதுவாக இறங்கிச் சென்றேன்.

குழந்தை பாலு தொட்டிலில் தானாகவே பேசிக் கொண்டும் கால் கைகளை உதைத்துக் கொண்டும் இருந்தான். கோமளவல்லி அம்மாள் ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார்.



நான் பாலுவைத் தூக்கிக் கொண்டேன். களுக் கென்று தன் வாயைத் திறந்து சிரித்தான் குழந்தை. கொஞ்ச நாளாகத் தூக்காததால் எனக்கு ரொம்ப ஆவலாக இருந்தது.

"குழந்தையை வாசலுக்குக் கொண்டு போய் வேடிக்கை காட்டுகிறேன்" என்று கோமளவல்லி அம்மாளைப் பார்த்துச் சொன்னேன்.

"டென்னிஸ் ஆடுமிடத்தில் போய் நிற்காதே. பந்து இங்கு குழந்தைமேல் பட்டுவிடப் போகிறது" என்றார். அவர் குரல் அமைதியாக இருந்தது. அவர் ஏன் எரிந்து விழவில்லை? அதிசயமாக இருக்கிறதே என்று எண்ணிக் கொண்டே வாசலுக்குச் சென்றேன். குழந்தையின் சிரிப்பில் மெய்மறந்து நானும் ஒரு குழந்தையாகி விட்டேன். என்னுடைய கவலைகளை யெல்லாம் உண்மையாகவே மறந்திருந்தேன். ஆனால் எத்தனை நேரம் அவ்வாறு இருக்க முடியும்? தூக்கத்தில் கவலைகளை மறக்கலாந்தான். ஆனாலும் அதற்கும் முடிவு உண்டல்லவா? மறுபடியும் தூக்கத்திலிருந்து கண் விழிக்கத் தானே வேண்டி யிருக்கிறது?

சற்று நேரத்துக்கெல்லாம் பத்மநாபன் கூப்பிடுவதாக முத்து வந்து கூறினான். எனக்குப் பயமாகப் போய் விட்டது. குழந்தையை முத்துவிடம் கொடுத்து விட்டு, பத்மநாபனின் அறையை நோக்கி இனந் தெரியாத தயக்கத்துடன் சென்றேன்.

சற்று நேரம் வெளியில் நின்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். 'அதைப் பற்றித்தான் கேட்பார். எனக்குத் தெரிந்ததாகவே காட்டிக் கொள்ளக்கூடாது. முதல் தடவை கேட்பது போல் இருக்க வேண்டும். ஆனால் பதில் தயாராக இருந்தது, உள்ளத்தில். ஒருநாளும் கல்யாணத்துக்கு உடன்பட மாட்டேன் என்று சொல்ல வேண்டியது. அவ்வளவு தானே. இதற்கு என்ன பயம்?' என்றெல்லாம் மனத்துக் குள்ளேயே சொல்லிப் பார்த்துக் கொண்டேன். பிறகு தான் அவருடைய அறையில் துணிந்து பிரவேசித்தேன்.

சுற்றிலும் ஓரே புஸ்தக அலமாரிகள் இருந்தன. அவருடைய மேஜையின் மேல் ஏகப்பட்ட 'பைல்களும்' புத்தகங்களும் இருந்தன. 'கலைமகளும், திருமகளும் சேர்ந்து வசிக்கும் இந்த வீட்டில்கூட இத்தனை பொய் புரட்டுகளும், இடம் பெறுகின்றனவே?' என்று எண்ணினேன்.

எதையோ கூர்ந்து படித்துக்கொண்டிருந்த பத்மநாபன், அதை மேஜை மேல் வைத்து விட்டு என்னை நிமிர்ந்து பார்த்தார். அவருடைய முகத்தில் ஒருவிதமான உணர்ச்சியும் புலனாகவில்லை. தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "உட்காரேன், இந்து! ஏன் நிற்கிறாய்?" என்றார்.

நானும் பக்கத்தில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தேன். மனத்தை எவ்வளவு தைரியப் படுத்தி வைத்துக் கொண்டிருந்த போதிலும் உடல் சிறிது நடுங்கத்தான் செய்தது.

மறுபடியும் தொண்டையைக் கனைத்துக் கொண்டு என்னைப் பார்த்து, "இந்துமதி! என் தலையில் ஒரு பெரிய பொறுப்பு வந்து சேர்ந்திருக்கிறது. உன்னைப் பற்றிய பொறுப்பைத் தான் சொல்லுகிறேன். உன் எதிர்காலத்தையும், சுகத்தையும் உன் பெற்றோர்களுக்கும், உன்னை வளர்த்த தந்தைக்கும் பதிலாக நான் கவனிக்க வேண்டியிருக்கிறது. நான் அதற்காக சந்தோஷம் அடைகிறேன். ஆனால் உன் தந்தை இருந்து உன்னுடைய எதிர்காலத்தை நிர்ணயித்திருக்க வேண்டும். ஈசன் செயல் வேறு விதமாக இருக்கிறது. அதைக் குறித்து நாம் வருந்திப் பயனில்லை" என்று சொல்லி நிறுத்தி ஒரு பெருமூச்சு விட்டார்.

இதைக் கேட்டதும் என் கண்களிலிருந்தும் இரண்டு சொட்டுக் கண்ணீர் உருண்டு ஓடியது. (தொடரும்)

ஒரு நாள் காலை நேரம். கதிரவன் தன் செங்கிரணங்களால் நாட்டைப் பொன் மயமாக்கினான். நீர் நிலைகள் தங்கத் தகடுகளென மினிர்ந்தன. மரம், செடிகளின் துளிர் இலைகள் ஜோதி மயமாய் மின்னின.




அரண்மனை நந்தவனத்தில் ஒரு ஆஜானுபாகுவான உருவம் மத்தகஜமென நடந்து சென்றது. மெதுவாக அவ்வுருவம் தடாகக் கரையில் அமர்ந்தது. அது வேறு யாருமில்லை—இளவரசன் சமுத்திரகுப்தன் தான். எதிரே தடாகம் சலன மற்றிருந்தது. ஆனால் இளவரசனின் உள்ளம் கொந்தளித்தது.

அவன் பிறவிக் கவிஞன். அத்துடன் சிற்பக் கலையின் நுட்பத்தை ஐயந்திரிபறக் கற்றிருந்தான்.

சிற்பமா, காவியமா — இவை இரண்டில் எது பெரியது? சிற்பம்தான்...இல்லை ...காவியம்தான் ...... இதில் இரண்டில் ஒன்று முடிவு செய்தாக வேண்டும். இல்லாவிடில் மன நிம்மதி கிடைக்காது. இந்த எண்ணத்துடன் தான் அன்று சமுத்திரகுப்தன் காலையிலேயே தனிமையை நாடித் தடாகத்தை யடைந்தான்.

உள்ளம் ஒரு நிலையிலில்லை. அருகே 'சோ' வென நீரருவியின் சப்தம் கவி பாடுவதுபோல் ஒலித்தது, குப்தனின் காதுகளிலே. மறுபடி மனத்திலே அதே தர்க்கம். சிற்றுளியா? எழுத்தாணியா? ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை. யாரைக் கேட்பது? மனம் தத்தளித்தது. சமுத்திரகுப்தன் குனிந்தபடி தடாகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

தூரத்தே வரும் குதிரையின் காலடிச் சத்தம் மெதுவாகக் கேட்டது. குதிரையின் குளம்படி ஒலியில் நினைவு திரும்பிய குப்தன் சப்தம் வந்த திக்கில் பார்வையைத் திருப்பினான். ஆஜானுபாகுவான ஒரு குதிரை வீரன் குனிந்து அடி பணிந்து எழுந்தான்.

" மகராஜ், மன்னிக்கவும். அரசர் உங்களை உடனே வந்து, தம்மைக் கொலு மண்டபத்தில் சந்திக்கும்படி கூறினார் " என்று சொல்லி மறுபடி அடிபணிந்து விட்டு நகர்ந்தான்.

சமுத்திரகுப்தன் மனம் இன்னும் குழம்பிய நிலையில்தான் இருந்தது. மனசை ஒருவாறு திடம் செய்து கொண்டான். தன் மாளிகைக்குச் சென்று அலங்கரித்துக் கொண்டு, கொலு மண்டபத்துக்குத் தந்தையைக் காண விரைந்தான்.

சந்திரகுப்தன் கொலு மண்டபத்தில் நவரத்தின சிங்காதனத்திலே வீற்றிருந்தான். கம்பீரமான வீரத் தோள்களும், பரந்த மார்பும், அகன்ற நெற்றியும் அவன் ஒரு மாமன்னன் என்பதை நன்கு எடுத்துக் காட்டின. வயதோ ஆகிவிட்டது. ஆனால் வீரம் குன்ற வில்லை. முகத்திலே சுருக்கங்கள் விழுந்து விட்டன. ஆனால் அதில் தேஜஸ் குன்ற வில்லை. வாள் பிடித்த வஜ்ராயுதம் போன்ற கையால் செங்கோல் பிடித்துச் சிம்மமென வீற்றிருந்தான் மகாசக்கரவர்த்தி சந்திரகுப்தன். மந்திரி அநிருத்தர், சேனாதிபதி அமரசிம்மன், ராஜகுரு முதலியோர் அவரவர் ஸ்தானத்தில் அமர்ந்திருந்தனர்.

அப்போதுதான் அவசரமாக வந்த சமுத்திரகுப்தன் தந்தையைப் பணிந்து நின்றான். அரசன் அவனை ஆசீர்வதித்து அருகில் அமரச் செய்தான். அரசன் கூறத் தொடங்கினான்: " அமைச்சரே, நாம் கடைசியாய் யுத்தகளம் கண்டு பத்தாண்டுகளுக்கு மேலாகின்றன. கிரேக்கப் படையெழுச்சிக்குப் பிறகு, நம்மை எதிர்த்து ஒரு சேனையும் போர் புரியவில்லை. நம் படை வீரர்கள் வாட்களைத் தீட்டி வைத்திருக்கிறார்களே தவிர, அவர்களுக்கு வேலை கொடுக்க வில்லை. யானைப் படை வேலையின்றி மதம் பிடித்திருக்கிறது. ஆகையால் எனக்கு ஒரு ஆசை. என் செல்வக் குமாரன் சமுத்திரகுப்தனின் பெயரில் ஓர் அஸ்வமேத யாகம் புரிய வேண்டும். என் மகன் இந்நாட்டிலேயே சிறந்த வீரனெனப் பெயர் எடுக்க வேண்டும். அவன் வீரம், புலியின் வயிற்றில் பிறந்தது பூனையல்ல என்று உலகத்துக்குப் பறைசாற்ற வேண்டும். இதில் உங்கள் விருப்பம் என்ன என்பதைக் கேட்கத்தான் இச் சபையைக் கூட்டினேன் " என்று கூறி முடித்தான்.

ராஜகுரு, அமைச்சர், சேனாபதி மூவரும் ஒரே குரலில் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர். அரசன் சந்திரகுப்தன் மிகவும் சந்தோஷமடைந்தான். அரசன் தன் அருமைக் குமரனை நோக்கி, " மைந்தா! உன்னையே நம் படையை நடத்திச் செல்லத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். கடல் கடந்த

தேசங்களிலும் குப்தனின் வெற்றிக்கொடி பறக்கவேணும். இது என் ஆசை" என்றார்.

"தந்தையே! எனக்கு இவ்வளவு உயர் பதவி யளித்ததற்குத் தங்களை நமஸ்கரிக்கிறேன். நான் தங்கள் புத்திரன் என்பதைப் போர்முனையிலே, வாள் முனையால் நிரூபிப்பேன்!" என வீரமொழிகளை அள்ளி வீசினான் சமுத்திரகுப்தன்.

புத்திரனின் வீர வாக்கியத்திலே மயங்கிய மன்னன் மதுவுண்ட வண்டுபோல் மகிழ்ந்தான். மனம் பூரித்தான். மனக்கண்ணிலே தன் தவப் புதல்வனின் வீர சாகஸச் செயல்களைக் கண்டு களித்தான். பின்பு, "மந்திரி, இன்று பத்தாம் நாள் அசுவமேத யாகம் ஆரம்பமாகுமென நாடு எங்கும் பறைசாற்றச் செய்யுங்கள்" என்று கட்டளையிட்டு விட்டு அந்தப்புரம் நோக்கிச் சென்றான்.

* * *

அன்று அரண்மனை முரசு நாடு அதிரும்படி சப்தித்தது. அரண்மனை முழுதும் சந்தன வாசனையும், அகிற் புகையின் வாசனையும் கமழ்ந்தது. அரண்மனையில் மகாராஜா துவங்கப் போகும் அசுவமேதயாகத்துக்கு விசேஷமான அலங்காரங்களுடன் பெரிய யாகசாலை அமைக்கப்பட்டிருந்தது. யாகசாலையின் நடுவே மாபெரும் அக்னி வளர்க்கப்பட்டிருந்தது. அரசன் சந்திரகுப்தன் அக்னி எதிரே வீற்றிருந்தான்.

அரண்மனை மேன்மாடத்திலிருந்து மணியோசை கிளம்பிற்று. முரசு வேகமாய் ஒலித்தது. அப்போது யாக சாலையிலே பிரவேசித்தான் வீர பராக்கிரமன் சமுத்திரகுப்தன். மங்களஸ்நானம்செய்து, பீதாம்பரம் உடுத்தியிருந்த அவனை அங்கிருந்த எல்லோரும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அப்போது இரு வீரர்கள் ஓர் ஆண் குதிரையை நடத்திக் கொண்டு யாகசாலையினுள் நுழைந்தனர். அப்புரவியை அக்னியருகில் கொண்டு வந்து நிறுத்தித் தாங்கள் அப்பால் நகர்ந்து நின்றனர்.

சமுத்திரகுப்தன் அவ்வெண் புரவியைப் பிடித்துக் கொண்டு அக்னியை மும்முறை வலம் வந்தான். பின்பு அவன் தன் பெற்றோர்களை அணுகி அவர்களை நமஸ்கரித்து, அவர்களின் ஆசியைப் பெற்றான். ராஜகுரு, சமுத்திரகுப்தன் நெற்றியிலும் யாகப் புரவியின் நெற்றியிலும் மங்கள திலகமிட்டு ஆசீர்வதித்தார்.

அரசன் சந்திரகுப்தன் தன் பூஜை அறைக்கு விரைந்தான். அங்கு தன் குல தெய்வத்தின் எதிரே மண்டியிட்டுப் பூஜை செய்தான். பிறகு பூஜையில் வைக்கப்பட்டிருந்த கூர்வாளைக் கையிலேந்திக் கொண்டு யாகசாலை திரும்பினான்.

அவ்வாளைத் தன் புத்திரன் சமுத்திரகுப்தன் கையில் அளித்து, "புத்ர! உனக்குச் சகல மங்களமும் உண்டாகட்டும். ஜெயலக்ஷ்மி உன் பக்கமிருந்து, உனக்கு உற்ற துணை புரியட்டும். ஆனால் ஒன்று. நீ எக்காரணத்தாலும் பாதி யாகத்தில் திரும்பி வந்து விடாதே! அப்படிச் செய்தால் நீ கடமை தப்பியவனாவாய். நீதிப்படி தண்டனைக் குள்ளாவாய். வீரனாய் வெற்றி மாலையுடன் திரும்பு" என்று கூறி அவனுக்கு ஆசி கூறினான்.

மங்கள வாத்தியங்கள் முழங்கின. வலம்புரிச் சங்குகள் ஒலித்தன. பொன்னுடை போர்த்திய யாகப் புரவி முன் செல்ல, சமுத்திரகுப்தன் இடையிலே வீரவாள் மின்ன நெற்றியில் மங்கள திலகம் ஜ்வலிக்கச் சிம்மமென நடந்தான். மாபெரும் குப்த சேனை அணிவகுத்து அழகாக அவனைப் பின் தொடர்ந்தது. சந்திரகுப்தனும், திலோத்தமையும் மற்றவர்களும் கோட்டை வாயிலில் நின்று இக்காட்சியைக் கண்டு களித்தனர்.

* * *

குதிரையைத் தன திஷ்டம்போல் செல்லவிட்டு, அதன்பின் படையை நடத்திச் சென்றான் வீரன் சமுத்திரகுப்தன். எதிர்த்துப் போரிடச் சக்தியற்ற குறுநில மன்னர்கள் அடி பணிந்தனர். பொன்னும் மணியும் அவன் காலடியில் சமர்ப்பித்தனர். தங்கள் சிறு சிறு சேனையையும் குப்தசேனையுடன் பக்க பலமாக அனுப்பி வைத்தனர்.

சந்திரகுப்தன் ஆட்சியிலே யிருந்த குறுநில மன்னர்களில் பலம் பொருந்தியவன் வேங்கி மன்னன் ஹம்ஸவர்மன்தான். அவனுக்குத் தானொரு சுதந்திர அரசனாக ஆளவேண்டுமென ஓர் ஆசை. அதற்குச் சமயம் எதிர்பார்த்திருந்தான். ஆகையால் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், சமுத்திரகுப்தனை எதிர்க்கத் தீர்மானித்தான்.

ஒரு நாள் காலை வேங்கி நாட்டு எல்லையில் இரு சேனைகளும் ஒன்றையொன்று மோதி எதிர்த்தன. இரு பக்கமும் பல வீரர்கள் உயிர் இழந்தனர்.

சூரிய அஸ்தமன சமயத்தில் போர் முரசம் மறு முறை ஒலித்தது. இருபுறத்து வீரர்களும் போரை நிறுத்திப் பாசறை திரும்பினர்.

வேங்கிநாட்டுச் சேனைத் தலைவன் வீரவர்மன் அமைதியிழந்து கூடாரத்தில் அமர்ந்திருந்தான். மாறு வேடத்தில் போர் புரிந்த வேங்கி யரசன் ஹம்ஸ வர்மன், முதல் நாள் போரிலேயே உயிர் துறந்து விட்டான். இச் செய்தியை வீரவர்மனைத் தவிர வேறு யாரும் அறியார். சமுத்திரகுப்தனின் வேவுகாரர்களுக்குக்கூட இவ் விஷயம் தெரியாது. நாட்டின் நலத்துக்

காகவும், சேனைகளின் உறுதிக்காகவும் இச் செய்தியை வெளியிடாமல் மறைத்து விட்டான் சேனாபதி வீரவர்மன்.

அதே சமயம் குப்தநாட்டுப் பாசறையில் சமுத்திரகுப்தன் அமைச்சர், சேனாபதி, ராஜகுரு முதலியவர்புடைசூழ அமர்ந்திருந்தான். முதல் நாள் போரில் குப்த சேனாதிபதி காயம்பட்டு விட்டதால், மறு நாள் போரைத் தானே நடத்துவதாகத் தீர்மானித்துக் கொண்டான் சமுத்திரகுப்தன்.

மறுநாள் காலை. போர் முரசம் அதிர்ந்தது. எட்டு திக்கிலிருந்தும் எதிரொலி கிளம்பிற்று. இரு சேனைகளும் கோபத்துடன் ஒன்றை ஒன்று மோதின.

வேங்கி நாட்டுப் போர்த் தலைவன் வீரவர்மன் சமுத்திரகுப்தனை நேரில் தாக்கினான். இருவரும் வாளை உருவிக்கொண்டு பயங்கரமாகப் போர் புரிந்தனர். ஆனால் மாவீரன் குப்தன் ஒரு வீச்சில் வீரவர்மன் வாளைத் தெறித்து விடும்படி செய்து விட்டான். ஆனால் அவன் போர் முறை தெரிந்தவன்; கோழையல்ல. உடனே தன்னிடமிருந்த மற்றொரு வாளை வீரவர்மனுக்கு அளித்துப் போரிடச் சொன்னான். மறு முறை உக்ரத்துடன் இருவரும் போரிட்டனர். திடீரென ஓர் மின்வெட்டு. வீரவர்மன் கீழே சாய்ந்தான். அவன் கையிலே பலத்த காயம். குருதி ஆறெனப் பெருகி யோடிற்று. செய்தி யறிந்த வேங்கிச் சேனை புறமுதுகிட்டு ஓடி விட்டது. வீரவர்மன், சிறையாக்கப்பட்டுக் கூடாரத்துக்கு அனுப்பப்பட்டான். குப்த சேனை வெற்றி முழக்கமிட்டது.

அன்று இரவு. எங்கும் நிசப்தம். பாசறை விளக்குகள் எல்லாம் அணைக்கப்பட்டு விட்டன. மற்ற சேனை வீரர்கள் வெற்றிகண்ட வெறி மயக்கத்தில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தனர்.

குப்தனின் கூடாரத்தில் விளக்கொளி தெரிந்தது. சமுத்திரகுப்தன் ஆழ்ந்த யோசனையிலிருந்தான். அவன் சிந்தனை பழைய நினைவில் புரண்டு கொண்டிருந்தது. எது பெரிது? காவியமா அல்லது சிற்பமா? இன்னும் ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை. போர்க் களத்திலும் இதே சிந்தனை தான். இதற்கு எப்போது முடிவு காண முடியும்? சிந்தனை தொடர்ந்தது.

வெளியே நிசப்தத்தினூடே. காலடி அரவம் கேட்டது. அந்தச் சத்தம் அவன் சிந்தனையைக் கலைத்தது. வெகு வேகமாக ஓடிவந்த சேவகன் மன்னனை வணங்கி நின்றான்.

"அரசே, இன்று போர்க்களத்தில் காயம் பட்டு, சிறை பிடிக்கப்பட்ட வேங்கி நாட்டுச் சேனாதிபதி வீரவர்மன் உடல் வலி தாங்காமல் மிகவும் அரற்றுகிறான். வைத்தியர்கள் சென்ற போது தனக்கு ஒரு உதவி வேண்டுமென்றான். அவ்வுதவி தங்களை அங்கு அழைத்து வருவதுதானாம்" என்றான் சேவகன்.

அரசன் கலவரமான மனத்துடன் வீரவர்மனின் கூடாரத்தை நோக்கி வேகமாகச் சென்றான். கட்டிலருகில் சென்று குனிந்து நோக்கினான்; அப்படியே கல்லென ஸ்தம்பித்து நின்று விட்டான்.

கட்டிலிருந்த உருவம் ஈனமான குரலில் பேசத் தொடங்கியது: "ஆம்! குப்த மன்னனே! ஆச்சரியமாகத்தானிருக்கும். சேனாதிபதி வீரவர்மனைக் காண வந்த இடத்தில் ஒரு மங்கையைக் காணுவது ஆச்சரியமாகத்தானிருக்கும். இதை நீங்கள் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள்.

"என் பெயர் மாலினி. ஹம்ஸவர்மனின் ஏகபுதல்வி. தந்தை என்னிடம் கொள்ளை அன்பு வைத்திருந்ததால் அவர் எனக்கு வாட் போர், விற் போர் முதலிய எல்லா வித்தைகளையும் கற்றுக் கொடுத்திருந்தார். பிறகு இப்போருக்கு, தந்தையின் அனுமதியுடன் வீரவர்மன் எனப் பெயர் வைத்துக் கொண்டு வேங்கிச் சேனையின் தளகர்த்தனானேன். முதல் நாள் போரிலே என் அருமைத் தந்தையை இழந்தேன். என் பெண்ணுள்ளம் பதறிற்று. நாட்டைக் காக்க வேண்டும், தந்தைக்கு நற்பெயர் தேடித் தர வேண்டும் என்று உள்ளம் துடித்தது. உயிரைத் திரணமாக மதித்துப் போர் புரிந்தேன். காயமடைந்து கீழே வீழ்ந்தேன். ஆனால் துக்கத்திடையே அதில் எனக்கென்று தனி இன்பம் கண்டேன்."



"மாலினி! நீ போரிலே தோற்றுவிட்டதற்காக, தந்தையை யிழந்து விட்டதற்காக, நாட்டைத் துறந்து விட்டதற்காக வருந்தாதே. நான் இருக்கும் வரை நீ எதற்கும் அஞ்சாதே" என்று மூர்க்கத் திணறக் கூறினான் மன்னன்.

"குப்தரே, தங்களின் அன்பு எனக்குப் பேரானந்தத்தை அளிக்கிறது. உண்மையைக் கூறத்தான் தங்களை அழைத்தேன்" என்றாள் மாலினி.

குப்தனுக்கு மனம் ஒரு நிலையிலில்லை. "நான் உன்னைக் காலையில் வந்து காண்கிறேன்" என்று மாலினியிடம் கூறிவிட்டுச் சமுத்திர குப்தன் வேகமாகத் தன் இருப்பிடம் வந்தான்.

குப்தன் மதிமயங்கி நின்றான். அவன் மனம் கடலைப் போல் கொந்தளித்தது. மாலினி மரணப் படுக்கையிலிருக்கிறாள். அவளைக் காப்பாற்ற வேண்டுமானால் தன் நாட்டுக்குத் திரும்பி நல்ல வைத்திய உதவி யளிக்க வேண்டும். அப்படி நாடு திரும்பினால் தந்தையின் கோபத்துக்கும் தண்டனைக்கும் உள்ளாக வேண்டும். என்ன செய்வது? அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. மனம் இருதலைக் கொள்ளி எறும்பெனத் தவித்தது.

**ம**று நாள் காலை. இரவு முழுதும் யோசனையில் ஆழ்ந்திருந்த குப்தன் ஓர் முடிவுக்கு வந்து விட்டான். 'வீரமங்கையாகப் போரிட்டாள். தந்தையை இழந்தாள். நாட்டை யிழந்தாள். இன்று நம்மை அடைக்கலம் அடைந்து விட்டாள். ஆகையால் அவளைக் காப்பாற்றித்தானாக வேண்டும்.'

தன் முடிவை ராஜ குருவுக்கும், மந்திரிக்கும் கூறி விட்டான். அவர்கள் எவ்வளவோ எடுத்துக் கூறினர். தடுத்துப் பார்த்தனர். முடியவில்லை.

அன்றே மாலினியுடன் நாடு திரும்பி விட்டான் சமுத்திரகுப்தன். இவ் விஷயம் ஊர் முழுதும் பரவி ஒரே குழப்பமாயிருந்தது. இச் செய்தி கேட்ட சந்திர குப்தன் வெறி பிடித்த யானை போல் சீறினான். அவன் சமுத்திர குப்தனை ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

சமுத்திரகுப்தன் தன் அன்னையிடம் எல்லா விஷயங்களையும் கூறி, மாலினியையும் அவளிடம் ஒப்படைத்தான். என்ன இருந்தாலும் பெற்ற தாய்க்குப் பாசம் விடுமா? விரைவில் மாலினியும், தகுந்த சிகிச்சையினாலும், அரசியின் அன்பினாலும் பூரண சௌக்கிய மடைந்தாள்.

**அ**ன்று விசாரணை நாள். நீதி மன்றம் முழுதும் ஜனங்கள் நின்று கொண்டிருந்தனர். ஒருவரும் வாய் திறந்து பேசவில்லை. சக்ரவர்த்தி சந்திரகுப்தன் ஒளியிழந்து வீற்றிருந்தான். அவன் கண்களில் நீர் தேங்கி நின்றது. உதடுகள் துடித்தன. எதிரே கைதிக் கூண்டிலே கைகளைக் கட்டியபடி, வணங்கிய தலையுடன் நின்ற இளவரசன் சமுத்திரகுப்தன் சாந்தமாகவும் கம்பீரமாகவும் கூறலானான். "தந்தையே, நான் தங்களிடம் நடந்தவற்றை அப்படியே கூறிவிட்டேன். என் இஷ்டம் போல் நான் இதைச் செய்தேன். நான் செய்தது தவறு என்று நீங்கள் கூறினால், அக்குற்றத்தைச் செய்ததற்கான தண்டனையையும் நான் அனுபவிக்கத் தயார். ஆனால் நான் மாலினியை இழக்க இஷ்டப்படவில்லை" என்று கலக்கமின்றிக் கூறினான்.

மன்னன் யோசித்தான். சபையில் நிசப்தம் நிலவியது. மன்னவன் தொண்டையை அடைக்கக்கூறினான். "நீ என் மகன். இருந்தாலும் செய்த குற்றத்துக்காக உன்னை இன்று விசாரணை செய்கிறேன். நீ உன் கடமையிலிருந்து தவறி விட்டாய். அரசனிட்ட கட்டளையை உதாசீனம் செய்து, திக் விஜயத்தைப் பூர்த்தி செய்யாமல் திரும்பி விட்டாய். இதனால் எனக்கும், நாட்டுக்கும் அபகீர்த்தியை உண்டாக்கி விட்டாய். இக்குற்றத்துக்கு, நீதிப்படி மரண தண்டனை யளிக்க வேண்டும். நீ எனக்கு ஒரே மகன். அத்துடன் ஓர் வீர கன்னிகை உன் மேல் காதல் கொண்டிருக்கிறாள். குப்த நாட்டைப் பிறகு ஆளுவதற்காகவும், அக் கன்னியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்காகவும், உன்னை நான், தேசப்ரஷ்டம் செய்கிறேன். நீ, என் ஆட்சிகாலம் வரை குப்த நாட்டின் எல்லைக்குள் வரக்கூடாது. நாளைக் காலை கதிரவன் உதயத்துக்குள் நீ நகர வாயிலைத் தாண்டிவிட வேண்டும்." சந்திர குப்தன் கண்களிலே நீர் நிறைந்தது.

சமுத்திரகுப்தனின் கண்களி லிருந்தும் இரண்டு நீர் முத்துக்கள் உதிர்ந்தன. அவன் தண்டனையைக் கலக்கமின்றி ஏற்றுக் கொண்டான். தாய் தந்தையரை வணங்கி, அரச உடைகளையும் களைந்து, சபையை விட்டு வெளியேறினான்.

மறு நாள் விடியற் காலை. சமுத்திரகுப்தன் தன் காதலி பின் தொடர நகர வாயிலைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தான். இக் காட்சியைக் காணச் சகியாத மன்னவன் மூர்ச்சை யுற்றான்.

சமுத்திரகுப்தனின் மனம் இப்போது நிம்மதியடைந்திருந்தது. 'காவியமும் பெரிதல்ல. சிற்பமும் பெரிதல்ல. காதல்தான் பெரிது; தெய்வீகமானது; அமரத்துவம் வாய்ந்தது' என்று அவன் மனம் எடுத்துரைத்தது. குப்தன் மன நிம்மதியுடன், திரும்பி மாலினியை ஆசையுடன் நோக்கினான். அவளும் அவனைப் புன்னகையுடன் நோக்கினாள்.



உங்கள் பேனாவின் ஆயுளை
பல்லாண்டு நீடிக்கச்
செய்கிறது!

# பார்க்கர்
# க்வின்க்

## ஸால்வ்-X

அடங்கிய மசி
இது ஒன்றே




மட்டரகமான மசிகள் ஒரு நல்ல பேனாவை பாழ்படுத்திவிடக்கூடும். எப்பொழுதும் பார்க்கர் க்வின்க் உபயோகிப்பதே புத்திசாலித்தனம். க்வின்க் ஒன்றில்தான் ஸால்வ்-X அடங்கியுள்ளது. இப்பொருள் நாசகரமான மசி வண்டல்களைக் கரைத்து வெளியேற்றி, திராவக அரிப்பைத் தவிர்த்து, உங்கள் பேனாவை சுத்தமாகவும் மசி ஒழுக்கு தடைபடாமலும் வைத்திருக்கிறது. 6 வசீகரமான நிறங்களில் கிடைக்கும்.

**விலை ரூ. 1/-**

பார்க்கர் பேன் கம்பெனி (இந்தியா) லிட்.,
த. பெ. 61, மதராஸ் 1.

ஏக விநியோகஸ்தர்கள்: பாரி & கம்பெனி லிமிடெட்,
டேர் ஹவுஸ், மதராஸ் 1.

PKQ. 934. 60 10-T

# புதிய

# ASPRO

REG. TRADE MARK

## 'ஆஸ்ப்ரோ'

## வலி மற்றும் ஜுரத்தை அதி துரிதமாக நிறுத்துகிறது!




புதிய 'ஆஸ்ப்ரோ' ஒரு அற்புதமான புதிய முறையில் தயாரிக்கப்படுவதன் காரணமாக, அதை உட்கொண்டவுடன் மூன்று க்ஷணத்திற்குள்ளாகவே அதன் வேலையைத் தொடங்கி விடுகிறது. இப்பொழுது உங்களுடைய சகலவிதமான நோவுகள், தலைவலி, ஜலதோஷம் மற்றும் ஜுரத்தை வேறெந்த மருந்தைக் காட்டிலும் மிக துரிதமாக நிவர்த்திசெய்யக்கூடிய புதிய 'ஆஸ்ப்ரோ' கிடைக்கின்றது. 'ஆஸ்ப்ரோ' இருதயம் அல்லது வயிற்றுக்கு எவ்வித கெடுதியும் விளைவிக்காது.

### புதிய 'ஆஸ்ப்ரோ' ஒன்று தான் இந்த எல்லா அனுகூலங்களும் கூடியது.

* **உதிரி வில்லைகளே கிடையாது!** வில்லைகள் உதிரியாக இருந்தால் தூசியும் ஈரமும் அதை எளிதில் பாதித்து, அதன் விளைவாக வயிற்றுக்கு கோளாறு ஏற்படக் கூடும். புதிய 'ஆஸ்ப்ரோ' பரிபூரண பாதுகாப்புடையதாக இருப்பதற்கு காரணம் ஒவ்வொரு வில்லையும் தனித்தனியாக, காற்றுப்புகாத வகையில் விசேஷ முறையில் மூடி உறையிடப்பட்டுள்ளது.
* **பாதுகாப்பு!** 'ஆஸ்ப்ரோ' இருதயத்திற்கோ, வயிற்றுக்கோ கெடுதி விளைவிப்பதில்லை. துர்ப்பழக்கம் உண்டாக்கும் மருந்து எதுவும் இதில் சேர்க்கப்படவில்லை. புதிய 'ஆஸ்ப்ரோ'வை குழந்தைகள் கூட பயமின்றி உட்கொள்ளலாம்.
* **மதிப்பு:** இரண்டே அணா செலவில் உங்களுக்கு துரிதமாக வேலை செய்யும் மூன்று புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகள் கிடைக்கின்றன. எவ்வளவு மலிவு!

276-TAM

**தாமதிக்காதீர் — இன்றே புதிய 'ஆஸ்ப்ரோ' கேட்டு வாங்குங்கள்**

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 15. சக்கையின் சத்து

சக்கையிலும் சத்து உண்டா என்று சந்தேகமுண்டாகலாம். ஆம், சக்கையாயிருந்தாலும் சத்து-குணம் என்னமோ அதிகம் உண்டு. இந்த சக்கைப் பொருள்கள் இல்லாமல் நாம் வெறும் மாவு, சர்க்கரை, கனியங்கள், வைடமின்கள் முதல்என்னதான் சாப்பிட்டாலும் நாம் பூரண ஆரோக்கியமாக இருக்க முடியாது. நாம் சாப்பிடும் உணவுடன் சக்கைப் பொருள்களும் கலந்திருந்தால் தான் உணவு குடல்களில் தடங்கலின்றி, நழுவிச் செல்லவும், முக்கியமாய்ப் பெருங் குடல்களில் அதிக நேரம் தங்காமல், மலச்சிக்கல் ஏற்படாமல், மலக் குடல் சுத்தமாகவும் மலங்கழியச் சுலபமாகவும் இருக்கும். இதனை நாம் எவ்வளவு மறக்கின்றோமோ அவ்வளவுக்கும் நமக்கு மலச்சிக்கல் ஏற்பட ஏதுவாகும்.

இன்றைய தினம் நம்மிடையே அநேகருக்கு மலச்சிக்கல் இருப்பதற்கு இந்தச் சக்கைச் சத்து இல்லாமையே காரணம் என்று சொன்னால் பிழையாகாது. நமது குடல்கள் தன்னிடம் வந்து சேரும் ஆகாரப் பொருளிலுள்ள சத்துக்களைக் கிரகித்துக்கொண்டு, அதே சமயம் ஆகாரப் பொருளைத் தன்னிடமே தேக்கி வைத்துக் கொள்ளாமல் வெளியில் அனுப்பிக் கொண்டேயிருக்கிறது. வாயின் வழி ஆகாரக் குழாயிலிருந்து மலக் குடல் முடியும் வரை உள்ள இருபத்தேழு அடி நீளமுள்ள ஜீரணக் கருவிகளில் நிகழும் காரியங்கள் மிக அற்புதமானது. இவைகள் பல முறை விளக்கப்பட்டுள்ளது. குடல்களின் சுவர்கள் அலைகளை எழுப்பிக்கொண்டே இருப்பதினால்தான் ஆகாரம் நழுவ ஏதுவாகிறது. நாக்குப்பூச்சியைக் கவனித்தால் தெரியும். மோதிரம் கோத்தாற் போன்ற தன் உடலை அலைகளைப் போன்ற ஒன்றின்மேல் ஒன்று நகர்வதின் மூலம் அது இடம் மாறி இடம் போகிறது. ஆனால் குடல் எங்கும் நகர முடியாது. அதுதான் நம்மிடம் சிறைப்பட்டிருக்கிறதே! ஆனால் தன்னிடம் வரும் பொருளை இம்மாதிரி அலையைப் போன்று இயங்கி ஆகாரத்தைத் தள்ளுகிறது. இவ்வாறு தள்ளுவதற்கு இந்த சக்கைச் சத்து இருந்தால்தான் சுலபமாகத் தன் காரியத்தைச் செய்ய முடியும். இல்லையானால் கஷ்டப்பட்டுத் தன் வேலையைச் செய்யும். நாளடைவில் களைப்படையும். பின் குடல் சம்பந்தமான பல வியாதிகள் தோன்றும்.

சக்கையும் உணவுடன் கலந்திருந்தால்தான் உணவிலுள்ள சத்தைச் சுலபமாகக் குடல்கள் கிரகிக்க முடியும். இந்தச் சக்கை கலப்பு இல்லையானால் ஆகாரக் குழம்பு இலேசாய் தளர்த்தியாய் இருக்காது. குடல் சுவர்களுக்குச் சத்தைக் கிரகிக்கக் கஷ்டமாய் இருக்கும்.

இவ்வளவுக்கும் இது சக்கைதானே என்று நாம் அசட்டை செய்வதற்கில்லை. இந்தச் சக்கையிலும் பலவித தாதுப் பொருள்கள், வைட்டமின்கள் முதலியனவெல்லாம் உண்டு. காய்கறி, பழ வகைகள், தானியங்கள் இவைகளின் மேல் தோலைத்தான் சொல்லுகிறேன். கீரைகளும் சக்கைப் பொருள்களைச் சேர்ந்ததே. இதனை நாம் சரிவரக் கவனியாது எல்லா மேல் பாகச் சக்கைப் பொருள்களையும் நீக்கி விட்டு உண்கிறோம்.

காய்கறிகளைக் கூடுமான வரை பிஞ்சாய்த் தேடி உண்போமேயானால் மேல் தோலைச் சீவ வேண்டுமென்ற அவசியமிருக்காது. மேல் தோலின் மேல் நேராய் சூரிய ரச்மிபட்டு வளர்வதால் அதில் வைட்டமின் 'பி'சத்து, 'ஏ'சத்து, 'டீ' சத்து, கொழுப்புச் சத்து மற்றும் பல தாதுப் பொருள்கள் ஏராளமாய் இருக்கின்றன. உள் பாகத்தில் குறைவே. அந்தக் குறைந்த சத்தையும் அதிகமாய் வேக வைப்பதிலும், வேக வைத்து ஜலத்தைக் கொட்டி விடுவதிலும் இழந்து விடுகின்றோம். எனவே காய்கறிகளில் பச்சையாகச் சாப்பிடக் கூடியவைகளைப் பச்சையாகவே சாப்பிட முயல வேண்டும். ஏன், கட்டாயம் சாப்பிட வேண்டும். மற்றும் தோல் எடுத்தே உபயோகிக்கும் காய்கறிகளை லேசாய்த் தோல் எடுத்து ஐந்து அல்லது ஏழு நிமிஷங்களுக்கு மேல் வேக விடக் கூடாது. அதுவும் வேக வைப்பதற்கு எவ்வளவு ஜலம் அவசியமோ அவ்வளவுதான் விடவேண்டும். சில காய்கறிகளுக்கு ஜலமே அவசியமிராது. அதிலிருந்து ஊறும் ஜலமே போதுமானது. ஆவி வெளியில் போகாமல் நல்ல கனமான மூடியுள்ள பாத்திரமாய் இருக்க வேண்டும். அடிக்கடி திறந்து பார்த்தாலும் ஆவியுடன் சத்துக்களும் பறந்து விடும்.



பழ வகைகளிலும் மேல் தோலை அவசியமானது மட்டும் நீக்கலாம். நம்மில் அநேகர் ஆரஞ்சுத் தோலை எறிந்து விடுகின்றோம். உள்ளிருக்கும் பழத்தை விடத் தோலில்தான் அதிக வைட்டமின்கள் உண்டு. நல்ல ஜாதிப் பழமாய் இருந்தால் மேல் தோலையும் சாப்பிடலாம். முதலில் சற்றுக் கஷ்டமாய் இருக்கும். உடலுக்கு ஆரோக்கியமானது என்று பூரண மனத்துடன் பழகுவோமேயானால் பழகி விடும். காய்கறித் தோல்கள் முதல் பழவகைத் தோல்களெல்லாவற்றையுமே நாம் 'ஜாம்' செய்யலாம். நல்ல வெல்லம் பாகு செய்து, இப் பழவகைத் தோல்

களை யெல்லாம் சிறுசாய் நறுக்கியோ, உரலில் வைத்து ஆட்டிக் குழைத்தோ, பின் ஆவியில் பத்து நிமிஷம் வேகவைத்துப் பாகில் போட்டு நீர் வண்டக் காய்ச்சினால் 'ஜாம்' ஆகிவிடுகிறது. தவிர, முழுசாய்க் கடலை, உளுந்து, மொச்சை, காராமணி, பச்சைப் பயிறு இவைகளைச் சுண்டல் செய்து சாப்பிடப் பழக வேண்டும்.

இதைத்தவிர இவைகளை இருபத்து நாலு மணி நேரம் ஊற வைத்துப் பின் ஈரத் துணியில் கொட்டி மூடி வைத்தால் மறுநாள் முளை கிளம்பும். அத்துடன் நாட்டுச் சர்க்கரை அல்லது பனைவெல்லப் பொடி, தேங்காய்த் துருவல் போட்டுச் சாப்பிட்டால் பல மடங்கு நல்லது. ஒரே நாளில் அதிகம் சாப்பிட்டு விட்டுப் பின் அஜீரணமாகி விட்டது என்று சொல்லக் கூடாது. படிப்படியாகத்தான் பழக வேண்டும். ஜீரணமும் சீக்கிரம் ஆவதுடன் வைட்டமின் சி. அதிகமாய்க் கிடைக்கும். இந்தத் தானியங்களை முளைக் கட்டி உபயோகித்தால் சிறந்த வைட்டமின் சி.யைப் பெறலாம். சக்கைச் சத்து அமோகமாய் இதில் இருக்கிறது. வைட்டமின் 'பி'யும் நிறைய இருக்கிறது. எல்லோராலும் எளிதில் செய்யக் கூடிய மார்க்கம் இது.

(தொடரும்)

# மஹா பரத சூடாமணி

## நாலாம் பாகம்

செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யர்

### ஸங்கீதாதி ராக மேள லக்ஷணம்

இவ்வரிய இசை இலக்கண நூலின் பதிப்பாசிரியர்கள் சங்கீத கலாநிதி முடிகொண்டான் வேங்கடராமய்யரவர்களும், ஸ்ரீ ரா. விசுவநாதய்யர் அவர்களுமாவார்கள். இந்நூலின் முகவுரையில் ஸ்ரீ விசுவநாதய்யர் அவர்கள், இந்நூல் உருவான வரலாற்றையும், இதில் அடங்கியுள்ள விஷயங்களையும், நன்கு விளக்கியுள்ளார். அதனைத் தொடர்ந்து சங்கீத கலாநிதி முடிகொண்டான் வேங்கடராமய்யர் விரிவாக எழுதியிருக்கும் இசைக் கலையைப் பற்றிய நுணுக்கமான ஆராய்ச்சி முன்னுரை இந்நூலுக்கே சிகரமாக அமைந்திருக்கிறது. இந்நூலை இயற்றியவர் யாரென்று தெரியவில்லை யென்றும், இதனைச் சேகரித்து வைத்தது மகா மகோபாத்யாய டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் அவர்கள்தான் என்றும் முகவுரையில் காண்கிறது. சங்க நூல்களையும் அநேக தமிழ் நூல்களையும் பதிப்பித்து, தமிழுக்கு அரிய தொண்டாற்றியது போல் தமிழிசை உலகுக்கும் ஐயரவர்கள் இந்நூல் வழியாக மகத்தான சேவை செய்துள்ளார்கள்.

முதல் இரண்டு பிரகரணங்களும் பெரும்பாலும் சாரங்க தேவரால் இயற்றப்பட்ட "சங்கீத ரத்னாகரம்" என்னும் வடமொழி நூலின் தமிழ் மொழிபெயர்ப்பாகவே இருக்கின்றன. ஆனால் அத்துடன் அகத்தியர் மதம் என்று கூறி நாற்பதாவது செய்யுளிலிருந்து சில செய்யுட்களில் பண்டை இசைத் தமிழில் உள்ள அபூர்வமான விஷயங்கள், "ரத்னாகரம்", "ராக விபோதம்" முதலிய நூல்களில் காணாத பல நுட்பங்கள் இதில் அடங்கியுள்ளன.

மூன்றாவது பிரகரணமான மேளராக லக்ஷணம் என்ற பகுதி, "ஸங்கிரஹ சூடாமணி" என்னும் வடமொழி நூலைத் தழுவிய தமிழ் மொழிபெயர்ப்பாகக் காண்கிறது. சங்கீத சார சங்கிரஹம் என்கிற தெலுங்கு நூலிலிருந்தும் சில விவரங்கள் சேர்த்துக் கொண்டிருப்பதாகவும் சொல்லலாம். ஆகவே வடமொழி, தெலுங்கு, தமிழ் ஆகிய பல இசை நூல்களையும் ஆராய்ந்தே இந்நூலை இதன் ஆசிரியர் உருவாக்கியுள்ளார் என்பது தெளிவு. ஸ்ரீ வேங்கடமகி அவர்களால் சிருஷ்டிக்கப்பட்ட எழுபத்திரண்டு மேள ராகங்களை ஒப்புக்கொண்டும், ஆனால் அவை அஸம்பூர்ண பத்ததியாக இருப்பதால், ஜனக ஜன்ய ராகங்களின் வேற்றுமையை அகற்றவில்லை என்பதை உணர்ந்து, ஸ்ரீ வேங்கடமகி அவர்கள் வகுத்த எழுபத்திரண்டு மேள கர்த்தா ராகங்களையும், கனகாம்பரி, பேனத்யுதி முதலானவைகளை, ஜன்ய ராகங்களாக வைத்து ஜனக ராகங்கள் ஆரோஹண அவரோஹணம் சம்பூர்ணங்களாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்தி, அவற்றுக்கு, கனகாங்கி, ரத்னாங்கி என்ற வேறு பெயர் கொடுத்து வர்ஜ,வக்ர ராகங்களை ஜன்யம் என்றும் கணக்கிட்டு ராக லக்ஷணங்களையும், லக்ஷண கீதங்களையும் கூறப்பட்டிருக்கிறது.

தற்காலம் அநுபவத்தில் வழங்கி வந்திருப்பதான மேற்கண்ட முறையையே தழுவி இம்மூன்றாவது ப்ரகரணம் அமைந்திருப்பதால், ஒருவாறு ராக லக்ஷணங்களில் இருந்து வரும் குழப்பத்தைத் தீர்த்துக் கொள்ள உதவியாகவே இருக்கும் என்பது என் நம்பிக்கை.

மற்ற நூல்களில் காணப்படாத சில புது ராகங்கள் இந் நூலில் காணப்படுகின்றன. சற்றேறக்குறைய 360 ராகங்களுக்கு லக்ஷணங்கள் ஆங்காங்கே விசேஷக் குறிப்புக்களுடன் விளக்கியிருக்கிறது. மேளத்தையும் அதன் ஜன்ய ராகங்களையும் அந்தந்தச் செய்யுள்களில் வரிசையாகச் சொல்லி ஒவ்வொன்றின் ஆரோஹண அவரோஹணங்களையும் முறையே கூறியிருக்கிறது.

சில ராகங்கள் அநுபவத்தில் உள்ளபடி இல்லாமல் வேறு மேளங்களில் காணப்படுவதை, விளக்கத்துடன் மாற்றிச் சீர் செய்திருப்பது போற்றத் தக்கது. கானடா ராகத்தைப் பற்றிய ஆராய்ச்சி மிக்க விசேஷமாகவும் இருக்கிறது. இதுபோல் அநேக அரிய விஷயங்கள் இப் புத்தகத்தில் காணக் கிடக்கின்றன.

மொத்தத்தில் இப்புத்தகம் இசையைப் பயிலும் மாணவ மாணவிகளுக்கும், இசை வல்லுனர்களுக்கும், ரஸிக மகாஜனங்களுக்கும் ஒரு "சூடாமணி"யாகவே திகழக் கூடிய விதத்தில் அமைந்திருக்கிறது. இதனை இசை உலகம் பயன்படுத்திக் கொள்ளுமாக.

மஹாபரத சூடாமணி 4-ம் பாகம், பிரசுரம்: டாக்டர் சாமிநாதய்யர் நூல்நிலையம்: கலாக்ஷேத்திரம், அடையாறு, சென்னை-20.

# நீங்கள் இன்று
# புரோடெக்ஸ்
# உபயோகித்தீர்களா?



நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.




ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.





குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.





மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

# புரோடெக்ஸ்
## ஆல் பர்பஸ்
## டாய்லட் பவுடர்

கால்கேட்டின் புதிய
சிறந்த தயாரிப்பு

# தந்தையும் மகனும்

குஜராத்திக் கதை : மொழிபெயர்ப்பு : ஜெயமணி

தேவி குன்றின் வழியாக வளைந்து சென்ற பாதை ஜிஞ்ஜுவதர் கிராமத்தைச் சுற்றிக் கொண்டிருக்கும் பாம்புபோல்தோன்றியது. கண்ணுக்கு எட்டிய வரையில் ஆங்காங்கு தென்பட்ட குடிசைகளைக் கார் இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. அக் குடிசைகளில் மூணுக் மூணுக் என்று எரிந்து கொண்டிருந்த தீபங்கள் அந்த அந்தகாரத்தை எதிர்க்கும் சக்தியற்றிருந்தன. சிறிது தூரத்திலிருந்த ஒரு வீட்டுக்குள் ஒரு மூலையில் ஜான் பாய் படுத்துக் கொண்டிருந்தான். அந்த வீட்டுக்கு உள்ளேயும் வெளியிலும் அமைதி நிலவியதெனினும், அவன் மனத்தில் பெரும் புயல் அடித்துக் கொண்டிருந்தது. அவனது சிந்தனைகள் பழைய சம்பவங்களைச் சுற்றிச் சுற்றி வந்தன.

அச்சமயம் திடீரென்று வாசற் கதவை யாரோ அவசரமாகத் தட்டும் சத்தம் கேட்டது.

"கதவைத் திற. உடனே திற. நான் பெரும் ஆபத்தில் இருக்கிறேன். தாமதிக்காமல் திற!"

இப்படி அதிகாரத்துடன் கதவைத் தட்டுவது யார்! ஜான் பாய்க்கு ஆச்சரியமாக இருந்தது. அந்தக் குரல் அவன் எங்கேயோ கேட்ட குரலாகவும் இருந்தது. அவன் அவசரமாக எழுந்து, 'ஹரிக்கேன்' விளக்கைப் பெரிதாக்கினான். விளக்குடன் வந்து, பயந்து கொண்டே சந்தடியின்றி மெதுவாகக் கதவைத் திறந்தான்.

வெளியே யாரோ ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவனது





முகத்தில் வளர்ந்திருந்த தாடியும் மீசையும் பார்ப்பதற்குப் பயமாக இருந்தன. அவன் ஜான் பாயை உற்றுப் பார்த்தான். பிறகு அவன் உள்ளே சட்டென்று நுழைந்து கதவைத் தாளிட்டான்.

யாரோ முகம் தெரியாத அன்னியன் திடீரென்று உள்ளே நுழைந்து கதவைத் தாளிட்டதைக் கண்டு ஜான் பாய் திடுக்கிட்டாள்.

"ஏன் இப்படி விழிக்கிறாய்! நான் எவ்வளவுதான் உருமாறியிருந்தாலும், உனக்குக் கூடவா என்னை அடையாளம் கண்டு பிடிக்க முடியவில்லை!" என்று கேட்டான் அந்தத் தாடிக்காரன்.

ஜான் பாய்க்குத் தன் தேகத்தில் மின்சாரம் தாக்கியது போலிருந்தது. அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழியத் தொடங்கியது.

"என் அருமை வாஹனின் அப்பா அல்லவா!" என்று கூறி அவனை அப்படியே கட்டிக் கொண்டாள்.

"பேஷ்! நீ கெட்டிக்காரிதான். உன் புருஷனை இவ்வளவு சீக்கிரத்தில் அடையாளம் கண்டு பிடித்து விட்டாயே!" என்றான் தாடிக்காரன், குறும்பாக.

"நீங்கள் எப்போது சிறையிலிருந்து விடுதலை அடைந்தீர்கள்! விடுதலை விஷயமாக எங்களுக்கு யாதொரு தகவலும் கிடைக்கவில்லையே. நீங்கள் வரப்போகிறீர்கள் என்று யாரும் என்னிடத்தில் ஒரு வார்த்தை கூடச் சொல்ல வில்லையே! எங்கள் மீது கருணை காட்டி உங்களை விடுதலை செய்த சர்க்கார் நன்றாக இருக்கட்டும். எனக்கு ஏன் இப்படி அழுகை வருகிறது! நான் சிரித்து ஆனந்தப் பட வேண்டிய சமயமல்லவா இது!" என்று ஜான் பாய் மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனாள்.

## சுனிலால் மேதியா

ராகவன்

"நான் விடுதலை அடையவில்லை. காவலாளியைக் கொன்று விட்டு, சிறையிலிருந்து தப்பி ஓடி வந்து விட்டேன்" என்றான் தாடிக்காரன்.

இதைக் கேட்டதும் "ஐயோ !" என்று அலறிக் கீழே விழுந்தாள் ஜான் பாய். அதைக் கண்ட தாடிக்காரன் பதைபதைத்து அவளை மெதுவாகத் தூக்கி அணைத்துக் கொண்டான்.

ஜான் பாய் இப்போது துக்கத்தினால் விம்மினாள். "நான் என்ன செய்வேன் ! நான் பெரும் பாவி. உங்களை உடனே அடையாளம் கூட என்னால் கண்டு பிடிக்க முடியவில்லையே ! உங்கள் முகத்தைக் கூட நான் மறந்து விட்டேனே. என்னைப் போல் துர்ப்பாக்கியசாலி இந்த உலகத்தில் இருக்க முடியுமா !" என்று அவள் புலம்பினாள்.

"என் கண்ணே ! அது உன் குற்றமல்ல. பன்னிரண்டு வருஷ சிறை வாசம் என்னை உருக்குலைத்து அடியோடு மாற்றி விட்டது. என்னை எனக்கே அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் செய்து விட்டது !"

"நீங்கள் ஏன் தப்பி வந்தீர்கள் ! இதனால் ஆபத்து ஏதுவும் நேராதா !" என்றாள் ஜான் பாய் தேம்பிய வண்ணம்.

"இவ்வளவு காலம் பொறுத்திருந்த நான் திடீரென்று பொறுமை இழந்தேன். உன் ஞாபகம் வந்து விட்டது. நம் குடும்பத்தின் ஞாபகம் வந்து விட்டது. உங்களைப் பார்க்காமல் இனி ஒரு வினாடியும் உயிர் வாழ முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. சிறைக்குள் செக்கு இழுத்ததும் கல் உடைத்ததும் என் உடலையும் உள்ளத்தையும் அரித்துத் தின்று விட்டன. நான் பொறுமையையும் தைரியத்தையும் இழந்தேன். சிறையிலிருந்து தப்பி ஓடி வந்து விட்டேன்."

ஜான் பாய் நிற்க முடியாமல் அவன் தோளில் சாய்ந்து கொண்டாள்.

"இன்னும் எவ்வளவு காலம் நீங்கள் வெளியே இருக்க முடியும் ! சிறை உணவைச் சாப்பிட்டுக் கொண்டு, இடுப்பை ஒடிக்கும் வேலையையும் செய்து கொண்டிருந்தீர்களா ! ஐயோ, நீங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறீர்கள் ! உங்கள் தலையெல்லாம் நரைத்துப் போய் விட்டதே !"

"என் தண்டனைக்கு முடிவு இருந்தால் இப்படித் தப்பி வந்திருக்க மாட்டேன். எனக்கு முடிவில்லாத ஆயுள் தண்டனை அல்லவா ! நான் சிறையில் ஒழுங்காக நடந்து கொண்டதற்காகத் தண்டனைக் காலத்தைக் குறைத்தனர். அப்படியிருந்தும் நான் விடுதலை பெறுவதற்கு இன்னும் ஆறு வருஷங்கள் இருக்கின்றன !"

"பன்னிரண்டு ஆண்டுகள் பொறுத்த நீங்கள் பல்லைக் கடித்துக் கொண்டு இன்னும் ஆறு வருஷ காலம் பொறுத்துக் கொண்டிருக்கக் கூடாதா !"

"அதற்குள் என் ஆயுள் காலம் முடிந்து விடுமோ என்ற பயம் எனக்கு ஏற்பட்டு விட்டது. திடீரென்று எனக்கு உன் ஞாபகம் வந்து விட்டது. நான் தப்பி ஓடி வந்து விட்டேன் !" என்றான்.

இதைக் கேட்டதும் ஜான் பாய் தன் கடமையை உணர்ந்தாள். தன் கணவனுக்கு ஒரு டம்ளரில் தண்ணீர் கொடுத்தாள். அவன் அதை அன்புடன் வாங்கிக் குடித்தான். உடனே அவனுக்காகப் படுக்கையை விரித்துப் போட்டாள். அந்த இன்பம் இன்னும் சில மணி நேரம் கூட நீடித்திருக்கப் போவதில்லை என்பது அவளுக்குத் தெரியும்.

ஜான் பாயின் முகத் தோற்றத்திலிருந்தும், உடல் நிலையிலிருந்தும் அவள் தன்னைக் காட்டிலும் அதிகமாகக் கஷ்டப்பட்டிருக்க வேண்டும் என்பதை அவன் உணர்ந்தான்.

"நீ என்னைக் காட்டிலும் அதிகமாகத் துன்பத்துக்கு உள்ளாகியிருக்கிறாய் !" என்றான்.

"நீங்கள் இப்படிச் சொல்லாதீர்கள். எனக்கு என்ன கஷ்டம் வந்தது ! நீங்கள் தான் உங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்தீர்கள். பிறர் செய்த குற்றத்தை நீங்கள் செய்ததாக ஒப்புக் கொண்டீர்களே !"

"ஆமாம்! பிறர் செய்த குற்றம் என்கிறாயே! வாஹன் யார் ! அன்னியனா ! நீ பெற்ற குழந்தைதானே. அவன் செய்த குற்றத்துக்காகத் தண்டனை அனுபவிக்கும்படி நேர்ந்ததில் எனக்கு வருத்தமே இல்லை."

"புளியந்தோப்பு ஜீகாவை நம் வாஹன் கொன்றான். அவனைத் தப்புவிப்பதற்காக, ஜீகாவை நீங்கள் கொன்றதாய் ஒப்புக் கொண்டு விட்டீர்களே !" என்றாள் ஜான்பாய்.

அவளது மனக் கண்முன் பழைய சம்பவங்கள் மின்னல் வேகத்தில் ஒவ்வொன்றாகத் தோன்றி மறைந்தன.

வாஹனும் சோனுவும் திருமணம் செய்து கொண்டபோது ஜான் பாயும் அவளது கணவனும் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை. வாஹன் — சோனுவின் வாழ்க்கையில் ஜீகா குறுக்கிட்டான். ஜீகா பல பெண்களின் வாழ்க்கையைப் பாழ்படுத்திய பாதகன். சோனுவின் வாழ்க்கையைக் கெடுப்பதற்கு முயற்சித்த அவனை வாஹன் எமனுலகுக்கு அனுப்பி விட்டான்.

அந்தப் பயங்கரமான இரவில் நிகழ்ந்த சம்பவங்கள் ஜான் பாய் மனக் கண் முன் காட்சியளித்தன. பன்னிரண்டு ஆண்டுகள் சென்றும் கூட அச்சம்பவங்கள் நேற்று நடந்தவை போல் அவளுக்குத் தோன்றின.

அன்று போலீசார் வந்தபோது, ஜீகாவைக் கொன்றவன் நான்தான் என்று ஜான் பாயின் கணவன் கம்பீரமாக முன் வந்ததை நினைத்த போது அவள் உடம்பெல்லாம் புல்லரித்தது. வாஹன் இளைஞன். வாழ்க்கையில் சந்தோஷத்தை அனுபவிக்க வேண்டியவன். ஜீகா செய்த பாதகத்துக்கு அவனை வாஹன் கொன்றது சரி. எந்த ஆண் மகனும் அப்படித்தான் செய்திருப்பான். எனவே, அவன் வாழ்க்கையை ஏன் கெடுக்க வேண்டும் என்று எண்ணி, அவன் செய்த குற்றத்தை அவன் தந்தை தான் செய்ததாக ஒப்புக் கொண்டான். இது எல்லாம் ஜான் பாயின் மனத்திரையில் ஒவ்வொன்றாகத் தோன்றி மறைந்தன.

"அயோக்கியனான ஜீகாவின் பாதகச் செயலுக்காக இப்போது நிரபராதிகள் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது" என்று தேம்பினாள் ஜான் பாய்.

"வாஹன் ஒரு இளைஞன். அவனது எதிர் காலத்தை இருள் சூழ்ந்ததாகச் செய்ய நான் விரும்பவில்லை. வாஹனுக்காகத் தண்டனை அனுபவிக்கும்படி நேர்ந்ததற்காக நான் சிறி

தும் வருத்தவில்லை. வாஹனைத் தப்புவிப்பதற்காக இனியும் அது போலவே செய்வேன்."

இவ்விதம் ஜான் பாயின் கணவன் கூறவே, அவ் வீட்டில் சிறிது நேரம் மௌனம் நிலவியது. ஒருவரை யொருவர் மீண்டும் பிரியும்படி நேருமே என்ற வேதனை இருவரது மனத்தையும் ஆட்கொண்டது. அதே சமயம் அவ்விருவரும் சிறிது நேரம் உலகையே மறந்திருந்தனர். அவர்களுக்குச் சுய உணர்வு வந்ததும், ஜான் பாய் சட்டென்று எழுந்தாள்.

"மறந்தே போய் விட்டேன். உங்களுக்குப் பசியாக இருக்கும். ஏதாவது ஆகாரம் எடுத்து வருகிறேன்" என்று கூறி அவள் சமையலறைக்குச் செல்ல யத்தனித்தாள். ஆனால், அவன் அவளது சேலைத் தலைப்பைப் பிடித்து இழுத்து அவளைத் தடுத்து விட்டான்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம். காலை வரையில் வாஹன், சோனும் அவர்களுடைய குழந்தை எல்லோரையும் பார்த்துக் கொண்டிருந்தால் போதும். வாஹனுக்குக் குழந்தை பிறந்திருக்க வேண்டுமே!" என்றான் அவன்.

"ஆமாம், தேவியின் அருளால் ஒரு குழந்தை இருக்கிறது. சோனும் குழந்தையும் அடுத்த அறையில் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள் ஜான் பாய்.

"வாஹன் எங்கே போயிருக்கிறான்!"

"அவன் இன்றிரவு வேலைக்குச் சென்றிருக்கிறான். காலையில்தான் வருவான்."

"அவனுக்கு இரவில் செய்ய வேண்டிய வேலை என்ன இருக்கிறது!"

"அவன் போலீஸ் கான்ஸ்டேபிளாக இருக்கிறான். கிராம ரஸ்தாக்களில் காவல் புரிவதற்காகச் சென்றிருக்கிறான். வெள்ளம் வந்து நம் ஆடுகளையெல்லாம் அடித்துக் கொண்டு போய் விட்டது. வாஹன் ஒரு வருஷம் வேலையில்லாமல் கஷ்டப்பட்டான். பிறகு நல்ல வேளையாகத் தாலுக்கா ஆபீசில் ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் ராஜிநாமா செய்ததால் அந்த வேலை வாஹனுக்குக் கிடைத்தது."

இவ்விதம் ஜான் பாய் கூறியதைக் கேட்டதும் அவள் கணவன் சந்தோஷப்படுவதற்குப் பதிலாகத் திடுக்கிட்டான்.

"சிறையிலிருந்து தப்பி ஓடிய கைதிக்குக் கான்ஸ்டேபிள் வாஹன் புகலிடம் அளிப்பானா!" என்று கேட்டான்.

ஜான்பாயின் கணவன் தன்னைப் பற்றிக் கவலைப்பட வில்லை. தன் மகனுக்காகவே கவலைப்பட்டான். தப்பி ஓடிய கைதிக்கு இடம் கொடுத்ததற்காக வாஹனின் உத்தியோகத்துக்கு ஆபத்து ஏதாவது ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது!

"கூடாது. நான் இங்கிருக்கக் கூடாது. போலீசார் இந்த வீட்டைச் சூழ்ந்து கொள்ளுமுன் நான் இங்கிருந்து புறப்பட்டுச் சென்று விட வேண்டும்."

இவ்வாறு ஜான்பாயின் கணவன் கூறி விட்டு வாசற்படிக்குச் சென்றவன், திக்பிரமை கொண்டவன் போல் திகைத்துப் போய் அங்கேயே நின்றுவிட்டான்.

ஏனெனில், அதே சமயம் வாஹன் "அம்மா" என்று வாசற்கதவைத் தட்டத்தொடங்கினான்.

மேற்படி சப்தத்தைக் கேட்டதும் ஜான் பாயின் கணவன் திடுக்கிட்டு ஒரு மூலையில் மறைந்து கொண்டான். ஜான்பாய் பரபரப்புடன் கதவைத் திறந்தாள். வாஹன் உள்ளே வேகமாக ஓடி வந்தான். "அப்பா தாலுக்கா சிறையிலிருந்து தப்பியோடி விட்டார், அம்மா" என்று உரக்கக் கத்தினான்.

"உன் அப்பா அவருடைய வீட்டுக்குத் திரும்பி வந்திருக்கிறார்" என்றாள் ஜான்பாய்.

"என்ன! எப்போது வந்தார்! எப்படி வந்தார்!" என்று வாஹன் பரபரப்புடனும் ஆச்சரியத்துடனும் கேட்டான்.

"அவர் சிறையிலிருந்து தப்பியது உனக்கு எப்படித் தெரியும்!"

"என்ன அம்மா இப்படிக் கேட்கிறாய்! எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் பத்திரிகைகளுக்கும் தந்திகளும் தபால்களும் பறந்து கொண்டிருக்கின்றன ... அப்பாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா! ஏன் இப்படிச் செய்தார், அம்மா!"

வாஹனின் பேச்சிலே ஏக காலத்தில் கோபமும் சோகமும் தொனித்தன.

"உன் முகத்தையும் உன் குழந்தையையும் பார்க்க வேண்டும் என்ற ஆசையினால்தான், கண்ணே, அவர் சிறையிலிருந்து தப்பி வந்தார்" என்றாள் ஜான்பாய் ஆறுதலாக.

"சிறைக் காவலனைக் கொன்று விட்டு அப்பா தப்பித்துக் கொண்டாராம். சிறையிலிருந்து மூன்று மைல்களுக்கு அப்பால் அவரைக் கண்டு பிடித்ததாயும், ஆனால், இருளில் அவர் தப்பித்துக் கொண்டு ஓடி விட்டதாயும் தகவல் கிடைத்திருக்கிறது. போலீசார் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இது போன்ற சந்தர்ப்பங்களில் போலீசாரை யாரும் ஏமாற்ற முடியாது."

வாஹன் போலீசாரின் திறமையை மேற்கொண்டு புகழுவதற்கு முன், அவனுடைய

## நேசமிகும் புத்தாண்டே!

என். எஸ். சிதம்பரம்

ஆசைதரும் மன்மதனின்
அரும்பேரைத் தாங்கிவரும்
நேசமிகும் புத்தாண்டே!
நெஞ்சினிலே இடம்பெறுவாய்!

நன்மழை வளம்பெருக்கி
நாடுதனின் மிடியகற்றி
வல்லகலை பலவளர்த்து
வாழ்வருள வந்திடுவாய்!

சீலமெலாம் நிறைந்திடவும்
சிறுமையெலாம் மறைந்திடவும்
கோலமெலாம் சிறந்திடவும்
குணஆண்டே, வந்திடுவாய்!

தந்தை தான் மறைந்திருந்த இடத்தை விட்டு அவன் எதிரில் வந்து நின்றான்.

அவனைக் கண்டதும் வாஹன் பாய்ந்து சென்று 'அப்பா' 'அப்பா' என்று அன்புடன் அவனைக் கட்டிக் கொண்டு விம்மினான்.

"நம்முடைய கிராமத்தை நோக்கிப் போலீசார் வந்து கொண்டிருக்கிறார்கள்" என்றான்.

இதைக் கேட்டதும் வாஹனின் தந்தை தன் மகனின் முகத்தை உற்றுப் பார்த்தான். அவன் முகத்திலே ஏககாலத்தில் அன்பும், இனந் தெரியாத வேதனையும், அவநம்பிக்கையும் நிலவின.

"போலீசார் வருவதற்கு முன் இங்கிருந்து புறப்பட்டு விடவேண்டும்" என்றான்.

தந்தையின் யோசனையை வாஹன் யாதொரு ஆட்சேபணையுமின்றி ஒப்புக் கொண்டான். ஆனால் ஜான் பாய் அதற்குச் சம்மதிக்கவில்லை. தன் கணவன் ஒருவேளை கூடச் சாப்பிடாமல் செல்லுவதை அவளால் சகிக்க முடியவில்லை.

"யாருக்கும் தெரியாமல் ஒளிந்து கொள்ளுவதற்கு இந்த வீட்டில் எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. என் தாத்தா கொடுத்த பெரிய ஜாடியில் தாங்கள் ஒளிந்து கொள்ளலாம். அதில் உள்ள அரிசியை எடுத்து விடுகிறேன்" என்றாள் அந்தப் பேதை.

"இப்படி யெல்லாம் கான்ஸ்டேபிள்களை ஏய்த்துவிட முடியாது" என்று கேலியாகக் கூறினான் வாஹனின் தந்தை.

இதெல்லாம் வாஹனின் காதில் விழவில்லை. அவனது மனம் ஒரே பாதையில் சென்று கொண்டிருந்தது. அவன் தந்தை வீட்டில் எங்கு ஒளிந்து கொண்டிருந்தாலும் போலீசார் அவனைக் கண்டு பிடித்து விடுவார்கள். எனவே தந்தை இருளில் வெளியேறி விட்டால், வாஹனின் உத்தியோகத்துக்கு ஆபத்து ஏற்படாமல் இருக்கும். அவன் இருளில் சென்று ஆற்றைக் கடந்து, அடுத்துள்ள காட்டில் நுழைந்து விட்டால் பிறகு அவனை யாரும் எளிதில் கண்டு பிடிக்க முடியாது.

எனினும் வாஹனின் தந்தை வீட்டை விட்டு வெளியே செல்லக் கூடாதென்று ஜான் பாய் பிடிவாதம் செய்தாள். இதைக் கண்ட அவனது கணவனுக்குக் கோபம் வந்தது.

"இந்தக் குடும்பத்தை ஆபத்தில் சிக்க வைக்க வேண்டும் என்பது உன் எண்ணமா! இனி நான் தப்பிச் சென்றாலும் மறுபடியும் சிறைப்பட்டாலும் ஒன்று தான். ஆனால், வாஹனும் சோஹனும் அவர்களுடைய குழந்தையும் க்ஷேமமாக இருக்க வேண்டுமானால், நான் உடனே இந்த வீட்டிலிருந்து வெளியேறித்தான் தீரவேண்டும்."

இவ்விதம் ஜான் பாயின் கணவன் உறுதியான முடிவுக்கு வந்து விட்டான்.

அதே சமயம் சிறிது தூரத்தில் போலீஸ் மோட்டார் வான் வரும் சப்தம் கேட்டது. வாஹன் திகிலடைந்து எழுந்தான்.

"அப்பா, அவர்கள் வந்து விட்டார்கள். புளியந் தோப்புக்கு அருகில் வந்து விட்டார்கள்" என்றான்.

"நீ பயப்படாதே. நான் போய் வருகிறேன்."

"அவர்களிடமிருந்து நீங்கள் எப்படித் தப்பிச் செல்லுவீர்கள்!" என்றாள் ஜான் பாய்.

"இனி வான வெளி என்னுடைய வீடு தான்" என்றான் அவளுடைய கணவன்.

அவன் வீட்டிலிருந்து வெளியேறுவதற்கு முன் கடைசியாக மனைவியையும், மகனையும் பார்த்தான். அடுத்த அறையில் தூங்கிக் கொண்டிருந்த சோஹனையும் குழந்தையையும் ஒரு தடவை பார்த்து விட்டு வெளியேறினான். போகும் போது வாஹனை முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்தான். வாஹனும் ஜான் பாயும் விம்மி விம்மி அழுதனர்.

"அப்பா, வடக்குப் புறமாக அவர்கள் வருகிறார்கள். ஆகையால் வடக்கே செல்லாதீர்கள். தெற்குப் புறமாகத் தப்பியோடி விடுங்கள்" என்று கூறினான் வாஹன் விம்மலுக் கிடையே.

அவன் தந்தை கடைசித் தடவையாக அவனையும் ஜான் பாயையும் பார்த்து விடைபெற்றுக் கொண்டான்.

"தெற்குப் பக்கமாகச் செல்லுங்கள்; தெற்குப் பக்கமாகச் செல்லுங்கள்" என்று மறுபடியும் ஞாபகப் படுத்தினான் வாஹன்.

ஜான்பாய் துக்கம் தாங்க முடியாமல் கீழே சுருண்டு விழுந்து விட்டாள்.

"அம்மா, அம்மா! எழுந்திரு. நீ இப்படி அழுதால் என் ஹிருதயம் வெடித்து விடும்" என்று வாஹன் அவளுக்கு ஆறுதல் கூறினான்.

அதே சமயம் அவன் தந்தை செல்லும் திசையை நோக்கினான். அந்தப் பக்கத்தில் தந்தையைக் காணாமல் திடுக்கிட்டுப் போனான். அவன் தந்தை வடக்குப் பக்கமாகச் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தான். தான் கான்ஸ்டேபிள் என்பதை மறந்தான்.

"அப்பா! அப்பா! அந்தப் பக்கம் போகாதீர்கள். தெற்குப் பக்கமாகச் செல்லுங்கள்" என்று அலறினான்.

ஆனால், வாஹனின் அலறல் அவனது தந்தையின் காதுகளில் சிறிதும் விழுந்ததாகத் தெரியவில்லை.

போலீஸ் மோட்டார் விளக்கின் பிரகாசம் இருளைக் கிழித்துக் கொண்டு வந்தது. அந்தத் திசையை நோக்கியே வாஹனின் தந்தை வேகமாகச் சென்றான். மோட்டார் வான் அருகில் வந்ததும் அவன் தன் இரு கைகளையும் தூக்கிப் போலீசாரிடம் சரண் அடைந்தான்.

ஜான் பாய் தன் கணவன் சென்ற திசையையே பார்த்துக் கொண்டிருந்தாள். "நான் அவரை மீண்டும் சந்திப்பேன். ஆனால், இந்த ஜன்மத்தில் அல்ல, அடுத்த ஜன்மத்தில்! பிறகு நாங்கள் பிரியவே மாட்டோம்" என்று பைத்தியம் பிடித்தவள் போல் புலம்பினாள்.

"ஆஹா! இவர் அல்லவா தந்தை! கொலை செய்த என்னைத் தூக்கு மேடையிலிருந்து காப்பாற்றினார். ஆயுள் வரையில் சிறைத் தண்டனையை ஏற்றார். இப்போது எனக்குக் கஷ்டம் எதுவும் ஏற்படக் கூடாது என்பதற்காகத் தாமே போலீசாரிடம் போய்ச் சரண் அடைந்து விட்டார்!"

இவ்விதம் வாஹனின் உள்ளம் உருகியது. போலீஸ் மோட்டார் திரும்பிச் சென்ற பின், அந்தப் பிரதேசத்தில் மீண்டும் இருள் சூழ்ந்து கொண்டது. எனினும் வாஹனும் அவன் தாயாரும் வெகு நேரம் வரையில் அந்தப் பக்கமே பார்த்துக் கொண்டு நின்றனர்!

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்



உங்கள் 'விஸ்டம்' டூத் ப்ரஷை தவறாமல் இரவிலும் காலையிலும் உபயோகியுங்கள்! இது முக்கியம் - சுத்தம் செய்வதற்கு மட்டுமல்ல. ஆனால் நாம் இன்று புசிக்கும் மிருதுவான உணவு பற்களுக்கும் ஈறுகளுக்கும் போதிய வேலை தருவதில்லை என்பதற்காக . . .

பூர்வீக மனிதனின் பற்கள் உறுதியாய் இருந்தன. காரணம் அவன் எளிய, கடின உணவு பண்டங்களை மென்று தின்பான். இதனால் அவன் பற்கள் உறுதிபெறும். ஈறுகளில் இரத்த உற்பத்தி ஏற்படும்.



கடினமான இன்பண்டங்கள், பட்டாணி, பச்சை காய்கறிகள், ஆப்பிள் முதலியன பற்களுக்கு நல்ல வேலை தரும். தற்கால ஆகாரங்களில் பல் ஆரோக்கியத்துக்கு மேற்கூறிய உணவுகள் மிக மிகக் குறைவு.



விஸ்டம் ப்ரஷால் வேகமாக துலக்க இந்த குறை நிவர்த்திபெறும். அது ஈறுகளுக்கு வலுவும்ஊக்கமும்அளித்து பற்களிலிருந்து கறை மற்றும் உணவுத் துண்டுகளை நீக்குகிறது.



விஸ்டம் ப்ரஷின் விரும்பப்பான நைலான் குச்சங்கள் ஈறுகளை தடவிக் கொடுத்து பற்களின் இடுக்குகளையும், சுற்றிலும் சுத்தம் செய்கிறது. விஸ்டம் உபயோகிப்பதற்கு சுலபம் ஏனெனில் அதன் தலை சிறியது; கைப்பிடி சாஸ்த்ரோக்தமான அமைப்புபெற்றது. இவை காரணமாக விஸ்டம் பொருத்தமான வடிவம் கொண்ட டூத் ப்ரஷ் என்று பிரசித்தி பெற்றது!

காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரைக் காணுங்கள்




நீடித்து உழைக்கும் டூத் ப்ரஷ்

74A

# சக்கரவர்த்தித் திருமகன்

## 63. வாயு புத்திரன்

சீதை சிறையில் கிடந்த இடமும் அரக்கன் இருந்த தேசமும் சம்பாதி சொல்ல வானரர்கள் தெரிந்து கொண்டார்கள். ஆயினும் சுக்ரீவனிடம் போய்ச் சொல்லுவதற்கு இது போதாதல்லவா? தாங்களே பார்த்தறியாமல் பிறர் சொன்னதை எடுத்துக் கொண்டு, தேடும் காரியத்தை நிறுத்தி விடுவது சரியல்ல. நேரில் கண்டு சம்பாதி சொன்னதெல்லாம் உண்மையென்று காண வேண்டும்; அதன்பின் தானே ராம காரியத்தைச் செய்து தீர்க்க முடியும்? கடலைத் தாண்டினால் அல்லவோ நேரில் பார்க்க முடியும்? இதற்கென்ன செய்வது என்று தெரியாமல் அங்கதன் திகைத்தான்.

கடலோரம் சென்று வானரங்கள் "இந்தக் கடலை நாம் எவ்வாறு தாண்டி லங்கைக்குள் பிரவேசித்து சீதையைக் கண்டு திரும்புவது?" என்று மறுபடியும் கவலையிலும் பயத்திலும் மூழ்கினார்கள்.

அங்கதன் சொன்னான்— "எந்தக் காரியம் எப்படிச் சாதிக்க வேண்டியதானாலும் தைரியத்தை இழக்கலாகாது. தைரியமே முயற்சிக்கு அடிக்கட்டு. அதைரியம் எந்தவித முயற்சிக்கும் சத்துருவாகும்."

பிறகு தன் படையிலுள்ள வீரர்களையெல்லாம் அவரவர்களுடைய தாவும் சக்தியைப் பற்றி உண்மையைச் சொல்லும்படி வேண்டினான்.

"வானர வீரர்களே! உங்களுடைய சாமர்த்தியத்தைப் பற்றி சுக்ரீவன் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீங்கள் ஒவ்வொருவரும் தேஜஸும் வீரியமும் நிறைந்தவர்கள் என்பதில் சந்தேகமில்லை. இந்தக் காரியத்தை நாம் முடித்தே தீரவேண்டும். சீதையைக் காணாமல் நாம் ஒரு நாளும் கிஷ்கிந்தைக்குத் திரும்ப முடியாது. அரசனால் அவமானத்தோடு கொல்லப் படுவதைவிட இவ்விடமே நாமாக உயிர் நீப்பது நலம். ஆனபடியால், சொல்லுங்கள் ஒவ்வொருவராக, எவ்வளவு தூரம் தாண்டும் உறுதியும் நம்பிக்கையும் உங்களுக்கு இருக்கிறது?" என்றான்.

* * *

கஜன் "நான் பத்து யோஜனை தாண்டுவேன்" என்று அடக்கத்துடன் சொன்னான். கவாக்ஷன் "நான் இருபது யோஜனை தாண்டுவேன்" என்றான்.

"நான் முப்பது யோஜனை தாண்டுவேன்" என்றான் மற்றொரு வானரத் தலைவன்.

இவ்வாறே பலர் முன் வந்தார்கள். ஒருவர் மேல் ஒருவர் உயர்ந்து கொண்டே போனார்கள். கடைசியாக எல்லாரையும் விட மூதிய வீரனை ஜாம்புவான் பேசலானான்.

"நான் விருத்தாப்பிய தசை அடைந்திருக்கிறேன். ஒருகாலத்தில் கொஞ்சம் பலம் எனக்கு இருந்தது. இப்போது அசக்தனாக இருக்கிறேன். ஆயினும் இது அரசன் கட்டளையிட்ட வேலை. ராம காரியமாகவும் இருக்கிறது. கிழ வயதிலும் ஏதாவது செய்யலாம் என்று ஆசைப்படுகிறேன். தொண்ணூறு யோஜனை தாண்டுவேன். அதற்கு மேல் முடியாது. லங்கை போய்ச்சேர இது போதாதுபோலிருக்கிறதே! என் வாலிபப் பருவத்தை நினைத்து இப்போது கிழவனாகி விட்டேனே என்று வருத்தமாக இருக்கிறது" என்றான்.

இதைக் கேட்ட யுவராஜன் "நான் நூறு யோஜனையும் தாண்டி லங்கை போய்ச் சேருவேன், சந்தேகமில்லை. ஆனால் அவ்விடத்திலிருந்து திரும்பி வர அவ்வளவு தூரம் மறுபடி தாண்டும் சக்தி எனக்கு இருக்குமோ இருக்காதோ சொல்ல முடியாது" என்றான்.

ஜாம்புவான் சொன்னான் : "அரச குமாரா! அதைப் பற்றி நீ சந்தேகப் பட வேண்டியதில்லை. வாலிக்கு இருந்தது போலவே உனக்கும் அளவற்ற சக்தி உண்டு. ஆயினும் இந்தக் காரியத்தை அரசனாகிய நீ வகித்தல் சரியாகாது. மற்றவர்களைக் கொண்டு அரசன் வேலை வாங்க வேண்டும். தானே நேரில் காரியங்களைச் செய்யப் போவது ராஜநீதியாகாது. அபாயமாகும். பிரஜைகளைக் காத்து ஆள வேண்டியவன் பின்னால் நிற்க வேண்டும். அபாய காரியங்களில் தானே நேரில் பிரவேசிக்கக் கூடாது. நான் சொல்லும் யோசனை என்னவென்றால், அதோ தூரத்தில் மௌனமாக உட்கார்ந்திருக்கிறானே வாயு குமாரன், அவன்தான் இக்காரியத்தைச் செய்து முடிக்குந் திறமையும் சக்தியும் பெற்றவன்."

இவ்வாறு சொல்லி விட்டு ஜாம்புவான் ஹனுமானிடம் சென்று அவனை அழைத்து வந்தான்.

• • •

துயரத்தில் மூழ்கி நின்ற லக்ஷக் கணக்கான வானரர்களுக் கெதிரில் ஜாம்புவான் ஹனுமானைப் பார்த்துச் சொன்னான் :

"வீரனே, எல்லா சாஸ்திரங்களையும் அறிந்த சிரேஷ்டனே, தனியாக ஏன் பேசாமல் உட்கார்ந்திருந்தாய்? அரசனான சுக்ரீவனுக்குச் சமமல்லவோ நீ? தேஜஸிலும் பலத்திலும் நீ நம் அனைவரையும் தோற்கடிப்பாயல்லவோ? ராம லக்ஷ்மணர்களுக்குங் கூட நீ சமானமானவனல்லவோ? பக்ஷி சிரேஷ்டனான கருடன் கடலைத் தாண்டிப் பறப்பதை நான் பார்த்திருக்கிறேன். வினதையின் குமாரன் கருடனுடைய சிறகுகளின் பெரும் பலம் உன் தோள்களுக்கும் உண்டு. பராக்கிரமத்திலும் வேகத்திலும் கருடனுக்கு நீ குறைந்தவனல்ல. உன்னுடைய பலமும் புத்தியும் உனக்குத் தெரியவில்லை. உலகத்தில் உனக்குச் சமம் யாரும் இல்லை. உன் தாயார் அஞ்ஜனை தேவலோகத்து அப்ஸரஸ்; ரிஷியின் சாபத்தால் வானரியாகப் பிறந்தாள். அவள் மலைச் சாரலில் உல்லாசமாகத் திரிந்து கொண்டிருந்த போது ஒரு நாள் வாயுதேவன் அவள் அழகைக் கண்டு காம பரவசமாகிப் போய் அடக்கம் இழந்து அவளைத் தழுவினான். தருமத்துக்குப் பயந்த அவள் 'யார் பதிவிரதையாகிய என்னை, அவமானப் படுத்துவது துஷ்டனே' என்று கோபம் கொண்டு கேட்க, வாயுதேவன் சொன்னான் : 'கோபிக்க வேண்டாம்! உன் தேகம் மாசுபடவில்லை. ஆசையால் தூண்டப்பட்டு நான் இந்தக் காரியம் செய்து விட்டேன். தூர நிற்கிறேன். மனத்தாலேதான் நான் உன்னை ஆலிங்கனம் செய்தது. உன் உடல் என்னால் தீண்டப் படவில்லை. ஆயினும் என் மானஸ ஸ்பரிசத்தால் உனக்கு உண்டாகும் மகன் எனக்குச் சமமான வீரியமும் பலமும் பெற்றவனாயிருப்பான். நிகரற்ற பராக்கிரமமும் புத்தியும் கொண்ட வானரன் ஆவான்.' இவ்வாறு வாயு பகவான் வினயமாகச் சொல்லி அஞ்ஜனையைச் சமாதானப் படுத்தினான்.

"ஹனுமானே! நீ சிறு குழந்தையாக இருக்கும்போதே ஆகாயத்தில் கிளம்பிக் கிழக்கில் உதித்த சூரியனை ஒரு பழம் என்று எண்ணி அதைப் பிடிக்கச் சென்றாய். நீ கிளம்பித் தடையின்றி பயமின்றிச் செல்வதைப் பார்த்து தேவராஜன் கவலை கொண்டு 'இது யார் சூரியனைப் பிடிக்கவே போகிறான்' என்று வஜ்ராயுதத்தை உன்பேரில் வீசினான். இடியால் அடிபட்டு நீ விழுந்தாய். மலையின் மேல் விழுந்தபடியால் உன் வலது கன்னம் உடைந்தது. உன் தந்தை வாயு பகவான் உனக்கு நேரிட்டதைக் கண்டு பெருங் கோபம் கொண்டு தன் சலனத்தை நிறுத்தி விட்டான். அதன் பயனாக ஜீவகோடிகளனைத்தும் பிராண ஸ்தம்பம் அடைந்து வருத்தப் பட்டுத் தத்தளித்தன. தேவர்கள் வாயு பகவானைக் கோபம் தணிய வேண்டிக் கொண்டு இறைஞ்சினார்கள். பிரம்மனும் இந்திரனும் அச்சமயம் உனக்கு வரம் தந்தார்கள். உனக்கு எந்த ஆயுதத்தாலும் அழிவில்லை, நீ இஷ்டப்

ராஜாஜி

பட்டபோது உன் மரணம் வரும், அதுவரையில் இல்லை என்று நீ அவர்களிடம் வரம் பெற்று சிரஞ்சீவியானாய். அஞ்ஜனை வயிற்றில் நீ வாயுபகவானுடைய மானஸ புத்திரனாகப் பிறந்தவன். வாயு பகவானுக்குச் சமமான தேஜஸும் புத்தியும் பராக்கிரமமும் பலமும் பெற்றிருக்கிறாய். இந்த பலத்தை நீ மற்ற துஷ்டர்களைப் போல் துர்விநியோகம் செய்யாமல் அடக்கமாக இருக்கிறாய். ராம காரியத்தை முடித்துத் தரக் கூடியவன் நீயே. சமுத்திரத்தைத் தாண்டுவது உனக்கு ஒரு கஷ்டமல்ல. பெருந்துயரக் கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கும் இந்த வானரப் படையை நீ காப்பாற்ற வேண்டும். கடலைத் தாண்டும் சக்தியைப் பெற்றிருக்கும் நீ சும்மா இருக்கலாகாது. உன் வடிவம் பெருகுக. கருடனுக்கு நிகரானவன் நீ. நானும் ஒரு காலத்தில் பலம் பெற்றிருந்தேன். இந்த பூமண்டலத்தை இருபத்தோரு தடவை சுற்றி வந்திருக்கிறேன். பாற்கடலைக் கடைந்த காலத்தில் தேவர்கள் சொன்னபடி நான் நான்கு திசைகளிலிருந்தும் ஓஷதிகளைக் கொண்டு வந்து கடலில் சேர்த்தேன். ஆனால் இப்போது நான் விருத்தாப்பியம் அடைந்து விட்டேன். நீதான் வானரர்களுக்கு இப்பொழுது கதி. ஆஞ்சநேயா, உன்னைச் சரணம் அடைந்தோம். தெய்வீக சக்தியைப் பிதுரார்ஜிதமாகப் பெற்றிருக்கும் உத்தமனே, இனித் தாமதிக்க வேண்டாம். உன்னுடைய உண்மை பலத்தை அறிந்து கொண்டு கிளம்புவாய். திரிவிக்கிரமனைப்போல் ஒரே தாவுத் தாவி இந்த சமுத்திரத்தைத் தாண்டுவாய். நம்முடைய துயரத்தைத் தீர்ப்பாய்!"

இவ்வாறு விருத்தனான ஜாம்புவான் ஹனுமானைத் துதித்து அவனுக்குள்ள பலத்தை அவனுக்கு எடுத்துக் காட்டித் தூங்கி நின்ற பராக்கிரமத்தை எழுப்பினான்.

உடனே பருவ காலத்துச் சமுத்திரம் போல் ஹனுமானுடைய வடிவம் வளர ஆரம்பித்தது. வானரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே வாயு புத்திரன் வளர்ந்து வளர்ந்து தேகமும் தேஜஸும் விருத்தியாகி திருவிக்கிரமனைப் போல் நின்றான். அவன் உடலினின்று வீசிய சுடரொளியைக் கண்டு அங்கதனும் மற்ற வானரர்களும் வியந்து ஆனந்த பரவசமானார்கள்.

இனி, ராமாயணத்தில் ஹனுமானே கதாநாயகன். விஷ்ணு பக்தர்கள் அவனைச் 'சின்ன திருவடி' என்று பெயரிட்டு அன்போடு சொல்வார்கள். பெரிய திருவடி கருடன். கருடன் எப்போதும் பெருமாளிடமே இருப்பதால் அவனுக்கு அந்தப் பெயர். இளைய திருவடி பிராட்டியின் துக்கத்தைத் தீர்த்து, ராவணனுடைய நகரத்தைக் கொளுத்தி அழித்துத் தன் நாதனிடம் சென்று 'கண்டேன் சீதையை' என்று தெரிவித்த வரலாறு இனிச் சொல்லப்படும்.

## 64. கடலைத் தாண்டினான்

அடக்கத்தால் மறந்து கிடக்கும் தன் சக்தியை ஜாம்புவான் சொல்லத் தெரிந்து கொண்டு ஹனுமான் ராம காரியத்தைச் செய்து முடிக்கச் சங்கற்பம் செய்து விட்டான். உடனே ஆவேசமாகத் தன் திட நிச்சயத்தையும் நம்பிக்கையையும் எடுத்துச் சொன்னான்.

"நீர் சொன்னபடியே ஆகுக. நான் குதித்துக் கிளம்பி ஆகாய மார்க்கமாகச் சென்று லங்கையில் இறங்கி ஜானகியைக் காண்பேன். நீங்கள் சந்தேகப்பட வேண்டாம். நான் திரும்பும் வரையில் இவ்விடமிருங்கள். கடலைத் தாண்டுவதற்குப் பூமியை மிதித்துத் தாவ வேண்டும். அந்த மிதியைத் தாங்குவதற்குத் தகுந்த இடம் இந்த மலை என்று கூறி மகேந்திர மலையின் மீது ஏறினான்.

அங்கே தன் முழு பலமும் செலுத்திக் கொஞ்ச நேரம் காலால் தரையை மிதித்து நடந்து உலாவினான். அதுவே அந்த மலையிலிருந்த சகல பிராணிகளுக்கும் சங்கடமாகி விட்டது. மலையை விட்டு வெளியேறி விட்டன. மலைமேலிருந்து ஹனுமான் கடலைப் பார்த்தான். மனத்தை ஏகாக்கிரப் படுத்தி லங்கைக்குச் செலுத்தினான்.



'ராவணன் எடுத்துப் போன சீதா தேவியைத் தேடிக் காண்பேன். ஆகாய மார்க்கம் சென்று இந்தக் கடலைத் தாண்டுவேன்' என்று மனத்தில் சங்கற்பம் செய்து சூரியனையும், இந்திரனையும், வாயுவையும், பிரம்மாவையும், பூத கணங்களையும் தியானித்து நமஸ்கரித்தான். பிறகு கிழக்கு முகமாக நின்று தன் அவுரஸ பிதாவாகிய வாயு பகவானை மறுபடி தியானித்து அஞ்சலி செய்து விட்டுத் தன் உடலை இன்னும் பெருக்கிக் கொண்டு தெற்கு முகம் நோக்கினான்.

மலையைத் தன் கால்களால் மிதித்துக் கைகளால் அடித்தான். அப்படி அடித்ததால் மலையிலிருந்த மரங்களினின்றெல்லாம் புஷ்பம் உதிர்ந்து மலையெல்லாம் மலர் மயமாகி விட்டது. அவன் மலைமேல் நடந்ததால் அந்த அழுத்தத்தைத் தாங்க மாட்டாமல் யானையின் கன்னத்திலிருந்து மதம் பெருகுவதுபோல் மலையிலிருந்து நீர் ஊற்றெடுத்துப் பெருகிற்று. பல நிற தாதுக்கள் மலையினின்று கிளம்பித் தெறித்து விழுந்தன. குகைகளினின்று மிருகங்கள் கத்திக்கொண்டு வெளியே ஓடின. பாம்புகள் படமெடுத்துக் கொண்டு விஷம் கக்கிக் கொண்டு கற்களைக் கடித்தன. அதனின்று நெருப்புப் பொறிகள் பறந்தன.

மயிர் சிலிர்த்து நின்று ஹனுமான் பெரும் கர்ஜனை செய்தான். வாலைத் தூக்கித் தரையை யடித்து உடலின் பின் பாகத்தைச் சுருக்கி, மூச்சை யடக்கிக் கால்களை நன்றாக ஊன்றிக் காதுகளை மடக்கித் தன் பலத்தை விருத்தி செய்து கொண்டு வெற்றி கர்ஜனை செய்து கிளம்பி, கருடனைப் போல் ஆகாய மார்க்கமாக ராம பாணத்தின் வேகத்தோடு சென்றான்.

அவன் தாவிச் சென்ற வேகத்தால் பல மரங்கள் வேரோடு பறிக்கப்பட்டு அவன் கூடவே சென்றன. பிரயாணம் போகும் போது பந்துக்கள் கொஞ்ச தூரம் கூடச் செல்வது போல் அந்த மரங்கள் புஷ்பங்களை உதிர்த்துக் கொண்டே ஆஞ்சனேயன் கூட ஆகாயத்தில் சென்றன.

முன்காலத்தில் இந்திரனால் துரத்தித் தாக்கப்பட்ட மலைகள் சிறகு வெட்டப் பட்டுக் கடலில் விழுந்தது போல், வானர வீரனைத் தொடர்ந்து சென்ற மரங்கள் கடலில் ஒன்றன் பின் ஒன்றாக வீழ்ந்தன. பல நிறப் புஷ்பங்கள் சிதறி விழுந்த கடலானது ஆகாயம் நட்சத்திரங்களுடன் ஜொலிப்பது போல் பொலிவடைந்து பிரகாசித்தது.

வான வீதியில் வேகமாகச் சென்ற ஹனுமானுடைய கைகள் ஐந்து தலை

நாகம் போல் விளங்கின. ஆகாயத்தை விழுங்கிக் கொண்டே போவது போல் சென்றான். அவனது கண்கள், மலையில் காடு பற்றி எரிவது போல் ஜொலித்தன; சிவந்த மூக்கு, சந்தியா சூரியனைப் போல் பிரகாசித்தது. நீண்ட தூமகேதுவைப் போல் ஆகாயத்தில் விளங்கிற்று, ஹனுமானுடைய பெரும் வடிவம்.

செல்லும் வேகத்தால் காற்று கர்ஜித்தது. ஆஞ்சனேயனுடைய நிழலானது ஒரு கப்பல் போல் ஜலத்தின் மேல் அவன் கூடச் சென்றது. ஆகாயத்தில் ஒரு பெரிய மலை சிறகுகள் கொண்டு பறப்பது போல் காணப்பட்டான். மேகங்களிடையில் மறைந்தும் தோன்றியும் சந்திரனைப் போல் பிரகாசித்தான். கந்தர்வர்கள் புஷ்ப மாரி பொழிந்தார்கள். தேவ ரிஷிகள் ஆசீர்வதித்தார்கள். வால்மீகி பகவான் சித்திரித்திருக்கிற இந்த சமுத்திரம் தாண்டும் காட்சியைத் தற்கால ரீதியில் சொல்ல வேண்டுமானால், ஆகாயத்தில் கிளம்பி மேகக் கூட்டத்தைக் கிழாக்கி மேலே பறந்து மிக வேகமாகக் கர்ஜித்துக் கொண்டு செல்லும் ஆகாய விமானத்தைப் போல் பறந்து சென்றான் என்றும் சொல்லலாம்.

சந்தர்ப்பத்துக் கேற்ற தைரியமும் அறிவும், ஆலோசனைச் சக்தியும் சிந்தனை வேகமும், நிகரற்ற சாமர்த்தியமும், நிறைவேற்றும் வினைத் திட்பமும் கொண்ட ஹனுமானுக்கு வழியில் சில சோதனைகள் ஏற்பட்டன. அவற்றை யெல்லாம் மிகத் திறமையாகச் சமாளித்துச் சென்றான்.

ஆகாயத்தில் சென்று கொண்டிருந்த சமயம் கடலில் மூழ்கி நின்ற ஒரு பெரிய பர்வதம் திடீரென்று மேலே வானளாவிக் கிளம்பிற்று. இதுவென்ன நடுவே வழி யடைக்கிறது என்று அதைத் தன் மார்பால் தாக்கினான். காற்றால் அடிக்கப்பட்ட மேகம் போல் அந்த மைனாக மலை அசைந்தது.

"அப்பனே! நான் மைனாக பர்வதம். சமுத்திரராஜன் சகரர்களுடைய குலத்தில் உதித்த ராமசந்திரனுக்கு உதவ வேண்டுமென்று என்னை ஏவினான். சகர குலத்தாலல்லவோ சமுத்திரம் விருத்தி அடைந்தது? அந்தத் தொடர்பைக் கவுரவித்து நீ என்மேல் கொஞ்ச நேரம் இறங்கி நின்று தங்கிப் போவாய். இளைப்பாறிச் சென்றாயானால் ராம காரியத்தை நன்கு முடிப்பாய். இந்திரன் மலைகளை யெல்லாம் வஜ்ராயுதத்தால் அடித்துத் துன்புறுத்திய காலத்தில் நான் பறந்து சமுத்திரத்தில் மூழ்கி மறைந்து உயிருடன் தப்பிப் பிழைத்து இன்னும் உயிருடன் இருக்கிறேன். எனக்கு சரணம் தந்த சமுத்திரம் உனக்கு உதவும்படி ஏவியதனால் நான் வந்தேன். சமுத்திரத்துக்கும் சகரன் குலத்துக்கும் தொடர்பு உண்டல்லவா? உன் தந்தை வாயுவால் அல்லவோ நான் இந்திரனுடைய வஜ்ராயுதத்தினின்று தப்பிப் பறந்து கடலில் ஒளிந்து கொள்ள முடிந்தது? விருந்தினனாய்க் கொஞ்ச நேரம் இளைப்பாறிச் சென்றாயானால் எனக்கும் சமுத்திர ராஜனுக்கும் சந்தோஷமாக இருக்கும்" என்று மைனாக மலை வருந்திற்று.

ஹனுமான், "அப்பா! நான் நிற்க முடியாது. காலதாமதம் ஆகும். ராம காரியத்தில் நான் செய்திருக்கும் சங்

கற்பம் இதற்கு இடம் தரவில்லை. நீ உபசரித்துச் சொன்ன மொழிகளே போதும், நான் மகிழ்ச்சி யடைந்தேன்" என்று வினயமாகச் சொல்லி மலையைக் கையால் பிரியமாகத் தடவிக் கொடுத்து விடை பெற்று அங்கே நிற்காமல் சென்றான்.

பிறகு செல்லும்போது வழியில் ஒரு பெரிய ராக்ஷஸ வடிவம் "நீ என் வாய்க்குள் பிரவேசிப்பாய். வெகு காலமாக ஆகாரமின்றி உனக்காகவே காத்திருக்கிறேன்" என்று பெரும் குகையைப் போல் வாயைத் திறந்தது.

"ராம காரியமாக நான் போய்க் கொண்டிருக்கிறேன். தடுக்காதே" என்றான் ஹனுமான்.

"முடியாது. என் வாய்க்குள் புகுந்தே தீருவாய்" என்றது அந்த ராக்ஷஸ உருவம்.

உடனே ஹனுமான் இன்னது செய்ய வேண்டுமென்று தீர்மானித்து வரவரத் தன் தேகத்தை வளரச் செய்து கொண்டான். சுரஸை என்கிற நாக மாதாவானவள் பூண்ட அந்த அரக்க வடிவமும் வாயை அதற்குத் தகுந்தபடி பெரிதாகச் செய்து கொண்டே போயிற்று. இப்படி மிகப் பெரியதாக வாய் திறந்ததும் திடீர் என்று ஹனுமான் தன் தேகத்தை அணுவளவாகச் சுருக்கிக் கொண்டு அந்தப் பேய் வாய்க்குள் புகுந்து அவள் உடலினின்று வெளிப்பட்டு விட்டு மறுபடியும் தன் பெரிய உருவம் தரித்துக் கொண்டான்.

"உன் தீர்மானம் நிறைவேறி விட்டது, தாயே! உன் வாய்க்குள் நான் பிரவேசித்து ஆய் விட்டது. இனி உனக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை" என்று ஹனுமான் சிரித்துக் கொண்டு சொன்னான்.

அதைக் கேட்ட அந்த நாகமாதாவும், "உன் காரியம் வெற்றியுடன் முடியும். தேவர்கள் உன்னைச் சோதிக்கவே இந்த வடிவத்தை எடுத்து இதைச் செய்யச் சொல்லி நானும் செய்தேன். நீ போகும் ராம காரியம் நிச்சயமாக வெற்றி பெறும்" என்று ஆசீர்வதித்து அனுப்பினாள்.

இந்தச் சோதனையுடன் ஹனுமானுடைய கஷ்டம் தீரவில்லை. ஆகாய மார்க்கமாக மிக வேகமாகச் சென்று கொண்டிருந்தபோது காரணம் ஏதும் தெரியாமல் தன் வேகம் தடைப்பட்டு எதிர் காற்றில் சிக்கிய கப்பல் போல் செல்ல முடியாமல் கஷ்டப்பட்டான். ஏதோ பெரும் சக்தி தன்னைப்பிடித்துக் கொண்டு இழுப்பதாக உணர்ந்தான்.

நான்கு பக்கமும் மேலும் கீழும் பார்த்தான். அப்போது காரணத்தைக் கண்டான். கடலில் ஒரு பெரும் பூதத்தைக் கண்டான். அது வானர வீரனுடைய நிழலைப் பிடித்து அதன் மூலம் அவனுடைய வேகத்தைத் தடுத்து அவனை இழுத்துக் கொண்டிருந்ததைக் கண்டான்.

"உனக்காகவே காத்திருக்கிறேன். வா! எனக்குப் பொறுக்க முடியாத பசி" என்று சொல்லி அந்த நிழல்—பிடி பூதம் தன் வாயைப் பெருங் குகை போல் திறந்தது.

உடனே ஹனுமான் அந்த அரக்கியின் வாய்க்குள் புகுந்து உள்ளே தன் நகங்களால் அவளுடைய உயிர் நிலைகளைக் கிழித்து விட்டு வெளி வந்து விட்டான். பூதம் உயிரிழந்து கடலில் மூழ்கிற்று. கிரகணம் தீர்ந்த சந்திரன் போல் மறுபடியும் ஹனுமான் ஆகாயத்தில் விளங்கிச் சென்றான்.

இப்படிப் பல சோதனைகளைத் தாண்டித் தன் நுட்பமான அறிவு, தைரியம், பலம், திறமை இவற்றைக் கொண்டு வெற்றியுடன் கடலைத் தாண்டிப் பறந்து வாழையும் தென்னையும் நிறைந்து விளங்கிய லங்கைக் கரைக்கு அருகே வந்து விட்டான். லங்கா தீவின் கடற்கரைச் சோலைகளையும் மலைகளையும் ஆறுகள் கடலில் சேரும் இடங்களையும் வனங்களையும் கண்டான்.

ராவணனுடைய தேசத்தின் வளத்தையும் அமராவதி நகரத்துக்குச் சமமான அழகையும் ஹனுமான் கண்டான்.

"போக வேண்டிய இடம் சேர்ந்து விட்டேன். இனி அரக்கர்களுக்கு நான் யார் எத்தகையவன் என்பது தெரியாதபடி சீதை இருக்கு மிடத்தைத் தேட வேண்டும்" என்று யோசித்துத் தன் விசுவ ரூபத்தைச் சுருக்கிக் கொண்டு சாதாரண வடிவத்தோடு ஹனுமான் லங்கையில் ஒரு மலைமேல் இறங்கினான்.

# ஹாஸ்யக் களஞ்சியம்



"ரயில் ஏன் இப்படி நின்று விட்டது?"






































"சார், நான் ரொம்ப ஏழைங்க!" இரண்டு நாட்களாகப் பத்திரிகையே படிக்கவில்லை. ஒரு அணா இருந்தால் கொடுங்கள்! பத்திரிகை வாங்க வேண்டும்!"

பாப்பா மலர் தொடர்கதை

# தங்க மாம்பழம்

ராஜி



## 29. கல்லறைத் தீவு

ஒட்டகத்திலிருந்து இறங்கிய பிரபாகரனும், உமாவும் சிரம பரிகாரமாகச் சற்று உட்கார்ந்தார்கள். எங்கு பார்த்தாலும் திறந்த வெளியாக இருந்ததினால் ஜிலு ஜிலு வென்று காற்று வீசிக் கொண்டிருந்தது. "அண்ணா! இப்பொழுது சுகமாகத்தான் உட்கார்ந்திருக்கிறோம். இனிமேல் அல்லவா நமக்குக் கஷ்டங்கள் உண்டாகப் போகின்றன? இந்த ஒற்றையடிப் பாதையில் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து போக வேண்டும். கொஞ்சம் கால் தவறி விட்டால் பக்கத்திலிருக்கும் ஆழமான மடுவில் விழ வேண்டியதுதான். அப்புறம் உயிர் தப்ப முடியாது. அப்படியே சர்வ ஜாக்கிரதையாக ஒற்றையடிப் பாதையைத் தாண்டி விட்டாலும் கல்லறைத் தீவிலிருக்கும் நாயினால் நாம் சிலையாகி விடுவோம். பேசாமல் வந்த வழியே திரும்பிப்போய் விட்டால் என்ன?" என்று மிகவும் அலுப்பும் கவலையும் கலந்த குரலில் பிரபாகரனைக் கேட்டாள் உமா.

உடனே பிரபாகரன், "உமா, உன்னைப் போலத்தான் நானும் எண்ணுகிறேன். நீ வெளியில் சொல்லுகிறாய். நான் சொல்லாமலிருக்கிறேன். ஆனால் நாம் இப்பொழுது வந்திருக்கும் இடமோ நாம் திரும்பிச் செல்லுவதற்கும் வழி இல்லாமல் இருக்கிறது. இங்கு நமக்குக் கண்ணுக்கு எட்டிய வரையில் ஜன நடமாட்டமே காணவில்லை. உன்னைவிடத் தைரியமுள்ள நானே மனம் கலங்கி இருக்கும்பொழுது உனக்கு எப்படி இருக்கும்? எதற்கும் நீ கவலைப் படாதே. எத்தனையோ எதிர் பாராத விபத்துகளைத் தாண்டிக் கடவுளின் கிருபையினாலும் துறவியின் உதவியாலும் இங்கு வந்திருக்கிறோம். அப்படி இருக்கும் பொழுது நாம் ஏன் கல்லறைத் தீவுக்குப் போகத் தயங்கவேண்டும்? வயல்காட்டுக் கிழவிக்கும் தங்க மாம் பழத்துக்கும் என்ன சம்பந்தம்? எதற்காக நாம் கல்லறைத் தீவுக்குப் போகாத படி தடுக்க மாய மகேந்திர புரத்தின் அரசனும், சமீபத்தில் நம்மை ஏமாற்றிய வீரப்ப தேவனும் முயற்சி செய்ய வேண்டும்? நம்மைப் பல வருஷங்களாக வயல் காட்டுக் கிழவி இருட்டறையில் வைத்து அடைத்ததற்குக் காரணம் என்ன? நமக்கு இந்த உலகில் யாராவது உற்றார் உறவினர்கள் இருக்கிறார்களா? நாம் யார்? கல்லறைத் தீவில் அடைபட்டுக் கிடப்பதாகச் சொல்லுகிறார்களே, அவர்கள் யார்? இந்த விஷயங்களெல்லாம் நமக்கு இதுவரையிலும் தெரியவில்லை. தெரியச் சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை. ஒருகால் இந்த விஷயங்கள் யாவும்




மாடு மனிதனாக மாறும்
திருப்பிப் பாருங்கள்!

இந்தத் தங்க மாம்பழத்தின் மூலம் தெரிய வந்தாலும் வரலாம். எதற்கும் கல்லறைத் தீவுக்குப் போய்த்தான் பார்க்கலாமே! ஏன் மனம் தளர வேண்டும்? உமா, பயப்படாதே. எழுந்திரு, போகலாம்'' என்று உமாவின் முதுகில் இலேசாகத் தட்டினான்.

உமா சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்தாள். ''அண்ணா! நீ சொல்லுவதைப் பார்த்தால் கல்லறைத் தீவுக்குப் போயே ஆகவேண்டும் போலிருக்கிறது. கல்லறைத் தீவில் வசிக்கும் நாயைப் பற்றி நினைத்தால் திரும்பி ஓடிவிடலாம் என்று தோன்றுகிறது. அண்ணா! நீ என்ன சொல்லுகிறாயோ, அவ்வாறே நான் நடக்கச் சித்தமாக இருக்கிறேன்'' என்று பதில் சொன்னாள் உமா.

''உமா! அப்படியானால் நீ முதலில் ஒற்றையடிப் பாதையில் எனக்கு முன்பாகச் செல். அப்பொழுதுதான் நீ பயமில்லாமல் போகலாம். நானும் உன்னைப் பின் தொடர்ந்து உன்னை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டு வரச் சௌகரியமாய் இருக்கும்'' என்றான் பிரபாகரன்.

பிரபாகரன் சொல்லியபடி உமா ஒற்றையடிப் பாதையில் முதலில் சென்றாள். பிரபாகரன் அவளுக்குப் பின்னால் சென்றான். உமா இரண்டு பக்கங்களிலும் உள்ள தண்ணீரைப் பார்க்கும்பொழுது சில சமயம் பயத்தினால் தயங்கி நிற்பாள். அந்தச் சமயத்தில் அவளைச் சமாதானப்படுத்தி மேலே மெதுவாகச் செல்லும்படி செய்தான் பிரபாகரன்.

அந்த ஒற்றையடிப் பாதையில் சமீபத்தில் ஒருவரும் நடந்து சென்றதாகத் தெரியவில்லை. ஏன் என்றால், அந்தப் பாதையில் நிறையப் புற்களும், செடிகளும் வளர்ந்திருந்தன. முள் செடிகளும் நிறைய இருந்ததினால் ஒற்றையடிப் பாதையில் நடந்து போவதற்கு மிகவும் சிரமப்பட்டார்கள், பிரபாகரனும் உமாவும்.

ஒற்றையடிப் பாதை ஒரு மைலுக்கு மேல் நீளம் இருந்தது. அந்தப் பாதையை மிகவும் சிரமப்பட்டுத் தாண்டிய பிரபாகரனும் உமாவும் ஒரு விசாலமான இடத்துக்கு வந்தார்கள். அங்கும் ஜன நடமாட்டமே இல்லாமல் நிசப்தமாக இருந்தது. காற்றினால் மரங்கள் இங்கும் அங்குமாக அசைந்ததினால் ஏற்பட்ட ஓசையைத் தவிர வேறு சத்தம் ஒன்றுமில்லை. அந்த விசாலமான பாதையின் வழியாகக் கொஞ்ச தூரம் சென்றார்கள்.

''அதோ ஒரு கட்டடம் மாதிரி தெரிகிறது, பார்த்தாயா? அதுதான் கல்லறைத் தீவிலுள்ள கல்லறையாக இருக்கும் போலிருக்கிறது'' என்றான் பிரபாகரன்.

''ஆமாம்! எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது'' என்றாள் உமா.

அது வரையிலும் கொஞ்சம் வேகமாக வந்த அவர்களது நடை சற்றுத் தளர்ந்தது. கல்லறைத் தீவுக்குச் சமீபம் வர வர அவர்கள் இருவருடைய இருதயங்களும் படபடவென்று அடித்துக் கொண்டன.

இவர்கள் மேலே நடந்து செல்லச் செல்லக் கல்லறை மண்டபம் நன்றாகத் தெரிய ஆரம்பித்தது. கல்லறைத் தீவில் இருக்கும் கல்லறை பெரிய கட்டடமாக இருக்கும் என்று பிரபாகரன் நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் கல்லறை பளிங்குக் கற்களினால் கட்டப்பட்ட ஓர் சிறிய கட்டடமாகத்தான் தோன்றிற்று. கொஞ்ச தூரம் சென்ற உடன் மேலே செல்ல வழி இல்லை. ஏனென்றால் ஒரு பெரிய ஏரி குறுக்கிட்டது. அந்த ஏரியின் நடு மத்தியில் இருந்த ஒரு தீவில் தான் கல்லறை கட்டப்பட்டிருந்தது.

''உமா, துறவி சொன்னாரே, அதைப் போலத்தான் இந்த ஏரியின் நடுவிலுள்ள தீவில் கல்லறை இருக்கிறது. இந்த ஏரியைக் கடக்காமல் நாம் கல்லறைத் தீவுக்கு எந்த வழியாகச் சென்

---

## பரஸ்பர உபகாரம்






## அதிகப்படி போஷாக்கு பெற தன் குழந்தைகளுக்கு அவள் ஓவல்டின் கொடுக்கிறாள்

போதுமான போஷாக்கு இருந்தால் நல்ல ஆரோக்கியம் ஏற்படும் என்று அறிந்துள்ள உலகெங்குமுள்ள தாய்மார்கள், தங்கள் குழந்தைகளுக்கு ருசி மிகுந்த ஓவல்டின் கொடுக்கிறார்கள்! குழந்தைகள் தங்கள் உடலிலுள்ள சக்தியை வெகு சீக்கிரத்தில் செலவழித்து விடுகிறார்கள். இழந்துவிட்ட தங்கள் சக்தியைத் திரும்பப் பெற வேண்டியதோடு மட்டுமின்றி, எதிர்கால வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் போதுமான சக்தியையும் உடலில் அவர்கள் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இந்த விஷயத்தில் ஓவல்டின் இன்றியமையாதது; இயற்கை உணவுச் சத்துக்களிலிருந்து அது தயாரிக்கப்படுகிறது. இன்னும் B & D வைட்டமின்களுடன் சேர்த்துத் தயாரிக்கப்படுகிறது. இந்த ருசி மிகுந்த புத்துயிரளிக்கும் பானம், சிறுவர்களின் புத்தியையும், உடலையும் நாள் பூராவும் சுறுசுறுப்பாக வைத்திருக்கிறது. நித்திரை காலத்தில் ஆரோக்கிய சுகமுள்ள நித்திரையை அளிக்கிறது. உடனே உங்கள் குழந்தைகளுக்கு ஓவல்டின் கொடுக்க ஆரம்பியுங்கள்.




# ஓவல்டின்

எதிர்கால ஆரோக்கியத்திற்கு
உறுதியான அஸ்திவாரம்

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ.
(இந்தியா) லி-ட்.

*சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 மணி வரை ரேடியோ ஸிலோனில் (ஹிந்தி-41.72 மீட்டர்கள்) ஓவல்டின் அமெச்சூர் நேரத்தைக் கேளுங்கள்*

TV 448




1. என். சூர்யமூர்த்தி, வயது 8, மலேயா. 2. த. லலிதா, வயது 9, டில்லி. 3. வி. ஆர். விஜயராகவன், வயது 8, செங்கல்பட்டு.

ரும் போக முடியாது. இந்த ஏரியோ மிகவும் பெரிய ஏரியாகக் காணப்படுகிறது. நல்ல ஆழமும் இருக்கும் போலத் தோன்றுகிறது. இந்த ஏரியைத் தாண்டிச் செல்லுவதற்கு ஒரு படகு ஒன்று இருக்கும் என்று துறவி சொன்னாரே அதைக் காணவில்லையே?'' என்றான் பிரபாகரன்.

"அண்ணா! அதோ பார்!'' என்று ஏரிக் கரையின் ஓரத்தில் சற்று தூரத்துக்கப்பால் இருந்த படகுபோல தோன்றியதைக் காண்பித்தாள் உமா.

"ஆமாம்! துறவி சொல்லியது அது தான் போல் இருக்கிறது'' என்று அதை நோக்கி வேகமாகச் செல்ல ஆரம்பித்தான். உமாவும் பிரபாகரனைப் பின் தொடர்ந்தாள்.

அவர்கள் இருவரும் பார்த்தபடி ஏரிக்கரையில் ஒரு படகு கட்டப்பட்டிருந்தது. அதனுடைய கீழ்ப்பாகம் படகைப் போல் தோன்றிய போதிலும் அதன் மேல் பாகம் ஒரு மண்டபத்தைப் போலத் தோன்றியது. அதிலிருந்து ஒரு சாதாரணப் படகின் மீது படகில் செல்லுபவர்கள் மழையிலேயோ அல்லது வெய்யிலிலோ கஷ்டப்படாமல் இருப்பதற்குப் படகின்மீது மண்டபம் எழுப்பி இருப்பதுபோலத் தோன்றியது.

"உமா, வா. இந்தப் படகை ஓட்ட இங்கு ஒருவரும் காணப்படவில்லை. நானே கட்டை அவிழ்த்து விட்டு அந்தப் படகிலேயே இருக்கும் துடுப்புகளின் உதவியால் படகை ஓட்டுகிறேன். சீக்கிரத்தில் கல்லறைத் தீவை அடையலாம்'' என்றான்.

பிரபாகரன் சொன்னதைக் கேட்ட உமா தடால் என்று ஏரிக்கரையில் உட்கார்ந்து விட்டாள். உடனே பிரபாகரன், "ஏன் உமா, ஒன்றும் பேசாமல் உட்கார்ந்து விட்டாய்?'' என்று கேட்டுக் கொண்டே அவள் அருகில் சென்றான்.

"அண்ணா! என் பக்கத்தில் உட்காரு. இந்த ஏரியைக் கடந்து கல்லறைத் தீவை அடைந்தவுடன் நாம் பேசுவதற்கு மறுபடியும் சந்தர்ப்பம் வாய்க்கிறதோ இல்லையோ? சிறிது நேரம் சந்தோஷமாகப் பேசி விட்டுக் கல்லறைத் தீவுக்குப் போகலாம். ஐயோ, அண்ணா! அந்த நாயை நினைத்தால் தான் எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது'' என்றாள் உமா. (தொடரும்)





ஹமாமை நான் இவ்வளவு விரும்புவது-



அது எனக்கு மிகுந்த புத்துணர்ச்சி கொடுப்பதுதான்!







(ஒவ்வொரு கட்டியும் நெடுநாள் வருவதால் அது சிக்கன முடையதென்றும் உங்களுக்குத் தெரிய வரும்!)

அது சிறந்ததென்பதை நீங்கள் நிச்சயமாக அறிவீர்கள்—
ஏனெனில் அது டாடா தயாரிப்பு

இந்திய மூலதனத்தைக் கொண்டு, இந்திய நிர்வாகத்தில்,
இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது.

ஸ்ரீ எ. எப். எஸ். தல்யார்க்கானின் டாடா ஸ்போர்ட்ஸ் ரிவியூவை
செவ்வாய், வியாழன், சனிக்கிழமைகளில் இரவு 9 மணிக்கு
ரேடியோ ஸிலோனில் கேளுங்கள்

TS. 9771


Apothecary
E.Taeschner's
TRADE-
MARK
Extr. Thymi
saccharat.
Taeschner
Pertussin
Name reg'd.
Formula:
100 c.c.
infa



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. வீ.

## 48. கணையாழி கை மாறுகிறது!

புகையின் நடுவில் மூவரும் திக்கு முக்காடித் தவிப்பதை 'ஒளி பாய்ச்சி' விளக்கின் மூலம் மேலிருந்த வாறே வழி காட்டிக் கொண்டிருந்த மனிதன் கவனித்தான். அவர்களால் மேலே ஏறி வர முடியாதோ என்று அவனுக்குத் தோன்றியது. அதனால், "நான் வேண்டுமானால் கீழே இறங்கி வரட்டுமா?" என்று கேட்டான்.

"வேண்டாம், வேண்டாம்!" என்று கண்களைக் கசக்கிக் கொண்டே ரமேஷ் பதில் சொன்னான்.

"விளக்கு வேண்டுமா?"

"தேவையில்லை. நாங்கள் ஏறி வந்து விடுகிறோம்!" என்று சொன்ன ரமேஷ் குஸுமாவைப் பார்த்து, "நீங்கள் முதலில் இந்தத் துணியைப் பிடித்துக் கொண்டு உயர ஏறுங்கள். அப்புறம் நாங்கள் இருவரும் ஒவ்வொருவராக ஏறி வருகிறோம்!" என்றான்.

வேறு சாதாரண நாளா யிருந்தால் குஸுமா அம்மாதிரி துணியைப் பிடித்துக் கொண்டு ஏறத் துணிந்திருப்பாள். அவளுக்கு இருந்த படபடப்பிலும் பரபரப்பிலும் துணியைப் பிடித்துக் கொண்டு ஒரு முழம்கூட அவளால் ஏற முடியவில்லை. உடல் பறந்தது. கீழே விழுந்து விடுவாளோ என்றே தோன்றியது.

அப்பொழுது அங்கே யோசிப்பதற்குப் பொழுது எங்கே யிருந்தது? கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் குஸுமாவின் ஸ்நான அறையில் கிடந்த ஒரு துணியைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தான் ரமேஷ். அதை முடிந்து இரு தோள்களிலும் தூளியைப் போல் மாட்டிக் கொண்டான். பிறகு அதில் அச்சமின்றித் தைரியமாகக் குஸுமாவை ஏறி உட்காரச் சொன்னான். அவள் உட்கார்ந்ததும் தன் இரு கை பலத்தையும் கொண்டு அவளையும் சுமந்து கொண்டு தொங்கிக் கொண்டிருந்த துணியைப் பிடித்துக் கொண்டு உயர ஏறினான். இருவர் சுமையை ஒருவன் சுமந்து கொண்டு ஏறுவது என்பது சுலப சாத்தியமான காரியமா?

பிருத்விராஜன் காலத்து ஆண் மகன் அநாயாசமாகப் பெண்களைத் தூக்கிச் செல்லும் தெம்பு பெற்றிருக்கலாம். ஆனால் இந்தக் காலத்து ஆண்களுக்கு அவ்வளவு பலம் ஏது? அதுவும் குஸுமாவைப் போன்ற கட்டமைந்த தேகம் படைத்த யுவதியைத் தூக்கிக் கொண்டு உயர ஏறுவது என்றால்...? ரமேஷுக்கு மிகவும் சிரமமாகவும் கஷ்டமாகவும்தான் இருந்தது. இருந்தாலும் அவனையும் மீறிய சக்தி யொன்று அச்சமயம் அவனை அப்படிச் செய்யுமாறு தூண்டியது. அதனால் எப்படியோ சிரமப்பட்டு முண்டியடித்துக் கொண்டு ஜன்னலருகே வந்து விட்டான்.

அவன் எந்தத் துணியின் உதவி கொண்டு உயரே ஏறி வந்தானோ, அது உயரே நன்றாக இறுக முடியப் பட்டிருந்தது. அவனைக் கைலாகு கொடுத்து உயரத் தூக்குவதற்காக நான்கைந்து பேர் கையை நீட்டிய வண்ணம் தயாராக நின்றனர். அருகில் வந்ததும் அவன் கையைப் பிடித்து உயரே தூக்கியும் விட்டனர். குஸுமா மிக ஜாக்கிரதையாகப் பக்கத்து வராந்தாவில் இறக்கப்பட்டாள். பிறகு வெகு முயற்சியின் பேரில் ஸர் பிஹாரிலாலும் அதே துணியின் உதவியைக் கொண்டு மேலே ஏறி வந்தார். மலை போல் வந்த ஆபத்து பனிபோல் நீங்கியது என்பார்களே, அது இதைத்தானோ?

அவர்கள் தங்களை ஆசுவாசப் படுத்திக் கொள்வதற்கு முன்பாகவே, "ரமேஷ்! நான் இப்பொழுது முன்போலப் பணக்காரி இல்லை. உங்களுக்குத் தெரியும் அல்லவா?" என்று கேட்டாள் குஸுமா. இதைச் சொல்ல இத்தனை அவசரமா? இந்தக் கேள்வியை நாம் கேட்டு என்ன பயன்? அவள் அவசரம் அவளுக்கு அல்லவா தெரியும்? "நானும் உங்களைப் போல ஒரு ஏழையாக்கும்!" என்று சொன்னவள் அதற்கு மேல் பேச முடியாமல் அப்படியே மூர்ச்சித்து விட்டாள்.

ரமேஷுக்கு அவள் சொன்னது புரியவில்லை. புரிந்து கொள்ள வேண்டும் என்று

## மாதர் சங்க ஆண்டு விழா

பம்பாயைச் சேர்ந்த கல்யாணில், சென்ற மார்ச்சு 20-ஆம் கல்யாண் தென்னிந்திய மாதர் சங்கத்தின் முதல் ஆண்டு விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மேற்படி ஆண்டு விழாவுக்கு மாதுங்கா, பைராம்ஜி ஜீஜீபாய் அநாதாசிரமத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி சாவித்திரிபாய் நடராஜன் தலைமை வகித்தார். தென்னிந்திய மாதர் சங்கம் நடத்தி வரும் சங்கீத, நடன வகுப்புகளைச் சேர்ந்த குழந்தைகள் கோலாட்டம், நாட்டியம், பாட்டு ஆகியவைகளினால் சபையோரை மகிழ்வித்தனர்.

லும் அதற்கு அதுவா நேரம்? எல்லோருமாகச் சேர்ந்து ஸர் பிஹாரிலாலையும் குஸுமாவையும் பக்கத்துக் கட்டடத்துக்கு எடுத்துச் சென்று தூங்க வைத்தார்கள்.

தீயின் வேகத்தில் ஸர் பிஹாரிலாவின் பாதங்கள் சிறிது வெந்து போயிருந்தன. தீ மேலே பரவாமல் இருப்பதற்கான முன்னேற்பாடுகள் அனைத்தும் செய்யப்பட்டன. வெளியிலிருந்து வேண்டிய ஆட்கள் வந்து தண்ணீரைக் கொட்டித் தீயைச் சமனப் படுத்தினார்கள். அதன் பலனாக அறையைச் சுற்றிலும் வைக்கப்பட்டிருந்த தீ வேறு எங்கும் பரவ முடியாமல், அந்த அறையை மட்டும் சாப்பிட்டு விட்டு அடங்கி விட்டது.

போலீஸ் அதிகாரிகள் திருட்டைக் கண்டு பிடிக்கும் அலுவலை ஒத்திப்போட்டு விட்டுத் தீயில் வெந்து மாளவிருந்த இரு உயிர்களைக் காப்பாற்றும் விஷயத்தில் ரமேஷுக்கு மிகவும் உதவியாயிருந்தார்கள். திருடனைப் பிடிப்பதற்காக ஓடி வந்த அதிகாரிகளுக்குத் தந்தையும் மகளும் தூங்கிக் கொண்டிருக்கும் அறையின் நாற்புறத்திலும் தீப் பிடித்துப் பரவியிருக்கிறது என்னும் விஷயம் தெரிந்தது. உயிர் போய்க் கொண்டிருப்பவர்களைக் காப்பாற்றுவதை விடத் திருடனைக் கண்டு பிடிப்பதா பெரிய காரியம்? அதனால் அவர்கள், தாங்கள் வந்த காரியத்தை அப்படியே போட்டு விட்டு இந்தக் காரியத்தைக் கவனிக்கலாயினர். உள்ளே அடைபட்டிருந்தவர்களை வெளியே கொண்டு வருவதற்குச் சுலபமான வழி எதுவுமே தோன்றவில்லை. அந்நேரத்தில் தான் அங்கிருந்த போலீஸ் அதிகாரியின் அநுபவம் வாய்ந்த கண்கள் மேலிருந்த ஜன்னல்மேல் விழுந்தன.

அவர் உடனே உயர ஏறினார். நான்கைந்து வேலையாட்களின் தலைப்பாகைத் துணியை வாங்கி ஒன்றாக முடிந்து ஜன்னலின் ஒரு புறத்தில் இழுத்துக் கட்டினார். அவருக்குப் பின்னாலேயே ரமேஷும் ஏறி வந்திருந்தான். அதிகாரி அந்தச் சாளரத்தின் வழியாகக் கீழே இறங்கப் போகுமுன் ரமேஷ் அவரைத் தடுத்து நிறுத்தி விட்டுத் தான் இறங்க விரும்புவதாகக் கூறினான்.

ஆபத்தில் சிக்கியவர்களைக் காப்பாற்றுவது மனிதனின் கடமை என்பது ஒரு புறம் இருக்கட்டும். தனது எஜமானர் என்ற முறையில் பிஹாரிலாலையும் அவர் குடும்பத்தையும் காப்பாற்ற வேண்டியது அவன் கடமை அல்லவா? அதனால் தான் அவன் அந்தக் காரியத்தைச் செய்ய அதிகாரிக்கு இடம் கொடுக்கவில்லை. அதிகாரியும் விட்டுக் கொடுத்து அவனை அறைக்குள் ஜாக்கிரதையாக இறக்கி விட்டார். அவன் இறங்குவதற்கும் ஏறி வருவதற்கும் ஒளி பாய்ச்சி விளக்கின் உதவியைக் கொண்டு மேலே இருந்தவண்ணமே அவனுக்கு வழியும் காட்டினார்.

இரவோடு இரவாகவே டாக்டரை அழைத்து வந்து தந்தைக்கும் மகளுக்கும் சிகிச்சை செய்விக்கப்பட்டது. ஜகதீஸைக் காப்பாற்ற வேண்டும் என்று பிரயாசை எடுத்துக் கொண்டு போலீஸ் அதிகாரிகளோடு வந்திருந்த ரமேஷ் அந்த விஷயத்தையே அடியோடு மறந்து விட்டான். அவன் மறக்க நினைக்கா விட்டாலும் சூழ்நிலை அவனை மறக்கச் செய்து விட்டது.

இரவு முழுவதும் தீயில் வெந்த அவர்களுக்குப் பணிவிடை செய்வதிலேயே அவன் தன் பொழுதைக் கழித்தான். பிஹாரிலால் தூங்கிக் கொண்டிருந்தார். குஸுமாவைப் பார்த்தால் நல்ல அறிவுடன் இருப்பவளாகத் தோன்றவில்லை. அரை நாழிகைக்கு ஒருதரம் கண்களைத் திறப்பதும் கண்களை மூடுவதுமாக இருந்தாள். அவள் கண்களை விழித்துப் பார்க்கும்பொழுதெல்லாம் ரமேஷ் தன் அருகில் உட்கார்ந்திருக்கிறான் என்பதைக் கவனிப்பாள். பிறகு இலேசாக இளநகை புரிவாள். அதோடு, "இனிமேல் என்ன? நான்தான் ஏழையாகி விட்டேனே!" என்றும் கூறுவாள்.

ரமேஷுக்கு அவள் சொல்வது ஒன்றும் புரியாது; பேந்தப் பேந்த விழிப்பான். அவள் பிதற்றுகிறாளாக்கும் என்று எண்ணி அவளது விழிகளைத் தன் கைகளால் பொத்தித் தூங்க வைக்க முயற்சிப்பான். ரமேஷின் கையைத் தன் கையில் எடுத்து வைத்துக் கொண்டு தடவிக் கொடுத்தவாறே குஸுமா மந்தஹாஸத்துடன் துயிலில் ஆழ்ந்து விடுவாள்.

அன்றிரவு இம்மாதிரி எத்தனையோ தடவை நடந்து விட்டது. அதனால் 'குஸுமா யாரை எண்ணி இப்படிப் பிரமையில் ஆழ்கிறாள்? இத்தகைய செயல்கள் புரிகிறாள்?' என்று ரமேஷ் சிந்திக்கலானான். ஆனால் அவன் சிந்தனைக்கு முடிவு ஏற்படவில்லை. இராப்பொழுதுக்கு மட்டும் முடிவு ஏற்பட்டு விட்டது.

இருள் பிரிந்து 'பல பல' வென்று பொழுது விடிவதற்குள்ளாக அவன் ஜகதீஷின் வீட்டை நோக்கி ஓடினான். அவன் போனபொழுது ஜகதீஷின் வீட்டில் பூட்டுத் தொங்கிக் கொண்டிருந்தது.

பக்கத்து வீட்டு வராந்தாவில் விஜயலக்ஷ்மி சிந்தனையில் லயித்தவாறு நின்று கொண்டிருந்தாள். அவளை விசாரித்ததில் கோகிலா ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுப் போய் விட்டாள் என்பது தெரிந்தது. ரயில் புறப்பட அதிக நேரம் இல்லை என்பதை அறிந்த ரமேஷ் தலைதெறிக்க ஸ்டேஷனை நோக்கி ஓடினான்.

அவன் பிளாட்பாரத்தை அடைவதற்கும் ரயில் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது. தூரத்தில் இருந்த வண்ணமே அவன் பெட்டிக்குள் கோகிலா உட்கார்ந்திருப்பதைப் பார்த்து விட்டான். எப்படியும் அவளைப் பிடித்து விடுவது என்ற தீர்மானத்தில் டிக்கெட் வாங்காமலே வண்டியிலும் வெகு வேகமாக ஏறித் தொத்திக் கொண்டான்.

கோகிலாவைத் திரும்பி வந்து விடுமாறு அவன் எத்தனையோ வற்புறுத்தியும், அவள் முடியாது என்று தீர்மானமாக மறுத்து விட்டாள். அதனால் அவ நம்பிக்கையும் ஏமாற்றமும் அடைந்த ரமேஷ் அடுத்த ஸ்டேஷனில் வண்டியிலிருந்து இறங்கி விட்டான்.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து திரும்பிய ரமேஷ் நேரே பிஹாரிலாலின் பங்களாவை அடைந்து அவருடைய தேக நிலையைப் பற்றி விசாரித்தான். அவர் அப்பொழுது ஏதோ வேலையில் மூழ்கியிருந்தார். குஸுமா விழித்த வண்ணம் படுத்திருந்தாள். அவளது விழிகள் யாரையோ தேடிக் கொண்டிருந்தன. ரமேஷைப் பார்த்ததும் அவள் தன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். பிறகு, "நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்? இங்கே என் அருகில் வந்து உட்காருங்கள்!" என்று அன்புடன் அழைத்தாள்.

ரமேஷுக்குக் குஸுமா ஏன் அப்படிப் பேசுகிறாள் என்று சரியாக விளங்கவில்லை. அதனால் அவன் இமைகள் 'சட சட' வென்று கொட்டிக் கொட்டித் திறந்தன. ஒரு வேளை தன்னைப் பிஹாரிலால் என்று எண்ணிக் குஸுமா இப்படிப் பேசுகிறாளோ என்ற சந்தேகம் அவனுக்கு உண்டாயிற்று. எனவே, "வேண்டுமானால் நான் போய் அப்பாவை வரச் சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

"இல்லை. நான் உங்களைத்தான் கூப்பிடுகிறேன்!" என்றாள் குஸுமா. அவ



ளது அந்தப் பதில் அவனை இன்னும் பெருத்த வியப்பில் ஆழ்த்தியது.

தன்னிடம் இவ்வளவு சொந்தம் பாராட்டும் குஸுமா உண்மையில் தனது சுயநினைவில்தான் இருக்கிறளா, இல்லை பிரமையில் பிதற்றுகிறளா என்பதை ரமேஷினுல் உடனடியாகத் தீர்மானிக்க முடியவில்லை. இருந்தாலும் தயங்கியவாறே அவள் அருகில் சென்றான். அப்பொழுது அவன் முகத்தில் தோன்றிய பரபரப்பைப் பார்க்க வேண்டுமே!

"இங்கே உட்காருங்கள்;" என்று கூறித் தனது கட்டிலுக் கருகில் கிடந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டினள் குஸுமா. அதில் அமர்ந்த அவனது முகத்தில் தாண்டவமாடிக் கொண்டிருந்த பரபரப்பைக் கண்டதும் அவளுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்தது. "நேற்று நெருப்பில் இறங்கும் பொழுது கொஞ்சங் கூடப் பயப்படவில்லை. இன்று என் அருகில் வந்து உட்காரும் பொழுது இவ்வளவு பயப்படுகிறீர்களே!" என்றாள்.

அதைச் சொன்னவள் அவன் பதிலுக்காகக் காத்திருக்கவில்லை. சடக்கென்று அவன் கையைப் பிடித்துத் தன் தலையில் வைத்து அழுத்திக் கொண்டாள். ரமேஷின் இருதயம் படபடத்தது.

சுகவீன முற்றவர்களைக் கவனித்துப் பணிவிடை செய்வதென்றால் யாருமே செய்வார்கள். அப்படிச் செய்வதுதான் மனித சுபாவமும்கூட. ஆனால் இங்கே குஸுமாவின் விஷயம் வேருக அல்லவா இருந்தது! அதனல் ரமேஷ் 'இதேதடா இது, தர்ம சங்கடம்!' என்று எண்ணித் திக்குமுக்காடினன்; திணறினன். அவனுக்குக் குஸுமாவின் கருத்துப் புரியவில்லை என்று சொல்லி விடுவதற்கில்லை. அவளது அந்தத் துணிச்சலை நினைந்த பொழுது அவனுக்கு இன்னும் அச்சமாகப் போய்விட்டது. இருதயம் மேலும் படபடவென்று அடித்துக்கொண்டது. அதன் 'திக், திக்' சப்தம் அவனுக்கு மட்டும் இல்லை; அருகில் படுத்திருந்த குஸுமாவின் காதுகளிலும்தெளிவாக ஒலித்தது. ரமேஷ் அசாத்தியத் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "உங்களுக்கு இப்பொழுது உடம்பு எப்படி இருக்கிறது?" என்று ஒரு அர்த்தமற்ற கேள்வியை அவளிடம் கேட்டு வைத்தான்.

பல சந்தர்ப்பங்களில் இது போன்ற மரியாதைப் பேச்சுக்கள் பரிகாசம் தொனிப்பவையாகத் தோன்றுகின்றன. அவன் கேட்ட கேள்வி குஸுமாவுக்குப் பரிகாசம் கலந்ததாகத் தோன்றியது என்பதை அவளது குறும்புக் கண்களே தெளிவாக்கி விட்டன. "எனக்கு என்ன? நன்றாகத்தானே இருக்கிறேன்! ஆமாம், உங்களுக்கு எப்படி இருக்கிறது?" என்று அதே கேள்வியைத் திருப்பிக் கேட்டாள்.

'நீங்கள், தாங்கள்' என்று மரியாதையாகப் பேசினுல் குஸுமாவுக்குப் பிடிப்பதில்லை. அவள் அடிக்கடி அதை எள்ளி நகையாடியிருக்கிறள். ரமேஷுக்கு இது தெரிந்த விஷயம்தான். இருந்தாலும் எசமானரின் மகளிடம் வேலை பார்ப்பவன் மரியாதைக் குறைவாகப் பேசிவிட முடியுமா? "'உங்களுக்கு எப்படி இருக்கிறது' என்று நீங்கள் என்னைக் கேட்க எனக்கு என்ன கேடம்பு?" என்றான்.

"இல்லை. நேற்று என்னைத் தூக்கிக் கொண்டு உயர ஏறினீர்களே! கனம் தாங்காமல் உடலில் கடுப்பு வலி ஏற்பட்டு விட்டதா என்று கேட்கிறேன்!" என்றாள் குஸுமா.

"இல்லை, இல்லை! அதெல்லாம் ஒன்றும் இல்லை. நீங்கள் என்ன அப்படிப் பெரிய கனமா?" என்றான் ரமேஷ். ஒரு வேகத்தில் அவளைத் தூக்கிக் கொண்டு அவன் உயர ஏறி விட்டானே ஒழிய, அவளது சுமையினுல் அவனது உடலில் வலி காணவில்லை என்று சொல்லி விடுவதற்கில்லை. ஆபத்தில் சிக்குண்டவர்களைக் காப்பாற்றி விட்டோம் என்ற பெருமித உணர்ச்சி அவன் உள்ளத்தை ஆட்கொண்டிருந்தது. அதனுல்தான் வலியை யெல்லாம் பொருட்படுத்தாமல் அப்படிப் பதில் சொன்னான்.

"அப்படியானுல் செல்வந்தர்களின் பெண்களைக் கனமானவர்கள் என்று கூறுகிறர்களே. அது ஏன்?" என்று ஒன்றும் அறியாதவள் போல அவனைப் பார்த்துக் கேட்டாள் குஸுமா.

பணம் படைத்தவர்களுக்கு மண்டைக் கனம் அதிகமாக இருக்கும் என்பதைத்தான் குஸுமா இப்படிக் குறிப்பாகச் சுட்டிக் காட்டுகிறள் என்பதை ரமேஷ் உணர்ந்தான். ஆனல் அதற்குத் தக்க பதில் அளிக்க அவனுக்கு அந்தச் சமயம் தோன்றவில்லை; அவனது சமயோசிதபுத்தி சமயம் பார்த்து வேலை நிறுத்தம் செய்து விட்டது. எனவே, "நான் எங்கே அப்படிச் சொன்னேன்?" என்று அந்தச் சமயத்துக்குத் தப்பித்துக் கொள்ளுவதற்கு வழி தேடினன்.

"வாயைத் திறந்து சொல்லவில்லையென்றல் ஆயிற்ற? உங்கள் மனத்தில் அத்தகைய எண்ணம் இருக்கலாம் அல்லவா? நிஜமாகச் சொல்லுங்கள். உங்கள் மனத்தில்......" என்று விடாப் பிடியாகக் குஸுமா அவன் வாயைக்கிளற முயன்றாள்.

"நர்ஸ் வரும் நேரமாகிறது. வந்தால் இப்பொழுது எதற்காக இவருடன் பேசக் கொடுக்கிறய் என்று என்னைக் கோபித்துக் கொள்வாள். அதனுல் நான் சொல்வதைத் தயவுசெய்து கேளுங்கள்.

P. 9048

# உங்கள் வதனத்தை மென்மையாக, புதுமை எழிலோங்க வைத்திருப்பது மிகச் சுலபமே!

## உங்கள் சருமத்திற்கு பாண்ட்ஸ் சௌந்தரிய பராமரிப்பு அளித்து வந்தால் போதும்

பிரசித்தி பெற்ற பாண்ட்ஸ் க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகச் சிறந்தவை; சீதோஷ்ணச் சூழ்நிலையின் கெட்ட விளைவுகளைத் தடுத்து சருமத்தைப் பாதுகாக்கும். உலக முழுவதிலுமுள்ள அழகு நங்கையரைப் பின்பற்றி நீங்களும் உங்கள் வதனத்திற்கு இந்த க்ரீம்களின் சௌமியமான பராமரிப்பு அளித்து, அதை மிருதுவாகவும் புதுமலர் சோபையுடனும் வைத்திருக்கக்கூடும்.



வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப் பொலிவைப் பாழ்படுத்தினால் நீங்கள் உபயோகிக்க வேண்டியது பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம். அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமஊட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.



உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய்ப் பசையுடையதானால் அல்லது உஷ்ணமும் நசநசப்பும் மிகுந்த சூழ்நிலையில் பிசுக்கடையும் பட்சத்தில், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மெல்லிய க்ரீம் சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் செத்த ஜீவாணுக்களையும் அகற்றி உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்

பாண்ட்ஸ் க்ரீம்களை பிரதி தினமும் உபயோகித்து சருமத்தில் ஏற்படும் வித்தியாசத்தை கவனியுங்கள். சொற்ப நாட்களில் உங்கள் வதனம் அதிக தெளிவுடனும் மென்மையுடனும் விளங்குவதைக் காண்பீர்கள்—உணரவும் செய்வீர்கள்!

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்



கொஞ்சம் பேசாமல் படுத்துக் கொள்ளுங்கள் !'' என்று ரமேஷ் குற்றத்தை நர்ஸின் மேல் போட்டு மீண்டும் தப்பித்துக் கொள்ள முயன்றான்.

"உங்களுடன் பேசுவதென்றால் எனக்கு ரொம்பப் பிடிக்கிறது. பேசிக் கொண்டே இருக்க வேண்டும் என்று கூடத் தோன்றுகிறது. தன் உயிரைத் திருணமாக மதித்து என் உயிரைக் காப்பாற்றியவர் என்னை விட்டுப் போகிறேன் என்றால் என் மனத்தை என்னவோ செய்கிறது !''

"நான் எங்கேயும் போகவில்லை. இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் பேசி உடம்பை வீணில் அலட்டிக் கொள்ளாதீர்கள் ! என்ன, நான் சொல்லுவது புரிகிறதா ?'' என்றான் ரமேஷ்.

"இம்மாதிரி செத்தவன் போல் படுத்திருக்க என்னால் ஆகாது. நர்ஸ் வந்தால் நான் சொல்லிக் கொள்கிறேன். அப்பா உங்களுக்கு ஏதாவது வெகுமதி அளிக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார். உங்களுக்கு என்ன வெகுமதி வேண்டும், சொல்லுங்கள் !''

"எனக்கு ஒரு வெகுமதியும் வேண்டாம். அப்படியே நான் வாங்கிக் கொள்வதாயிருந்தாலும் எனக்கு இந்த வெகுமதி கொடுங்கள் என்று நான் கேட்கலாமா ? நீங்களே சொல்லுங்கள் !''

"அது சரி, அவர் தருவதை நீங்கள்வாங்கிக்கொள்ளா விட்டால் வேண்டாம். நான் தருகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். வாங்கிக் கொள்ளுவீர்களா, மாட்டீர்களா ? சொல்லுங்கள்!''

"தயவு செய்து பேசாமல் தூங்குங்களேன் !'' என்றான் ரமேஷ்.

"வெகுமதியை வாங்கிக் கொள்கிறேன் என்று நீங்கள் சொல்லாத வரையில் நான் தூங்க முடியாது. தூங்க முடியாது என்றால் தூங்க முடியாதுதான் !''

"அடாடா ! பெரிய தர்ம சங்கடமாக அல்லவா போய் விட்டது ! நீங்கள் எது தந்தாலும் நான் மகிழ்ச்சியோடு வாங்கிக் கொள்கிறேன். போதுமா ? நான் சொல்வதைக் கேளுங்கள். தயவு செய்து எனக்காகச் சற்றுக் கண்ணயருங்கள் !''

"அப்பா ! இப்பொழுதுதான் எனக்கு நிம்மதியாகப் போயிற்று. என்ன இருந்தாலும் நீங்கள் ரொம்பப் பொல்லாதவர் தான். நான் எது கொடுத்தாலும் வாங்கிக் கொள்ள வேண்டும். ஆமாம், சொல்லி விட்டேன் ! தெரிகிறதா ?'' என்று சொன்ன குஸுமா இதழ்களில் இளநகை தாண்டவமாடப் புரண்டு படுத்துக் கொண்டாள். பிறகு, "இனிமேல் நான் நிம்மதியாக நன்றாகத் தூங்கப் போகிறேன். நீங்கள் என்னோடு பேச்சுக் கொடுக்கக் கூடாது!'' என்று சொல்லி விட்டுத் தன் இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டாள்.

அருகில் உட்கார்ந்து அவளிடம் பேச்சுக் கொடுத்து மாட்டிக் கொண்டு தவிப்பதைக் காட்டிலும் அவள் தரும் வெகுமதியை வாங்கிக் கொள்கிறேன் என்று சொல்லித் தப்புவது எவ்வளவோ ஆபத்துக் குறைவான விஷயமாகப் பட்டது ரமேஷுக்கு. அதனால் அவன் படபடப்பும் கொஞ்சம் அடங்கியது. குஸுமா பெரிதாக எதைக் கொடுத்து விடப் போகிறாள் ? தனது ஒரு புகைப் படத்தையோ அல்லது புஸ்தகத்தையோ தான் அன்பளிப்பாக அளிப்பாள் என்று அவன் எண்ணினான். அதனால், "உங்கள் தேக நிலை சுகம் அடைந்ததும் என் வெகுமதியை வாங்கிக் கொள்கிறேன். மனத்தை அலட்டிக் கொள்ளாமல் நன்றாகத் தூங்குங்கள் !'' என்றான்.

"உடம்பு குணமாகிக் கொடுப்பதா ? அதெல்லாம் முடியாது. இப்பொழுதே தான் கொடுக்கப் போகிறேன் !'' என்று

## கல்வித் தொண்டு

கல்யாண் என்ற மங்களகரமான பெயர் கொண்டுள்ள பிரதேசம் பம்பாய் நகரச் சுற்றுப்புறப் பகுதிகளில் ஒன்று. இப்பகுதியில் சுமார் 500–க்கு மேற்பட்ட தென்னிந்தியக் குடும்பங்கள் உள்ளன. ஜனத்தொகைப் பெருக்கமும், வர்த்தகத் துறை வளமும் கொண்ட பம்பாய் நகரத்தைச் சேர்ந்த மேற்படி பகுதியில் உள்ள தென் இந்தியக் குழந்தைகளின் கல்வி வசதிக்காக, தென்னிந்தியர் சங்கத்தின் ஆதரவில் 6-ம் வகுப்பு வரையில் உள்ள ஒரு பள்ளிக்கூடம் வாணி வித்யாலயா என்ற பெயருடன் எட்டு வருஷ காலமாக நடந்து வருகிறது. இப் பள்ளியில் 190 இளம் மாணவர்கள் படிக்கின்றனர். "வீர அபிமன்யு", "இன்ஸ்பெக்டர்" முதலிய தமிழ் நாடகங்களைப் பள்ளி மாணவர்களையும் தென்னிந்தியர் சங்க அங்கத்தினர்களையும் கொண்டு சென்ற மார்ச்சு 5, 6 தேதிகளில் சிறப்பாக நடத்தி, நிதி வசூலித்துப் பள்ளிக் கூடத்துக்குச் சிறு கட்டடம் சொந்தமாக நிறுவப்பட்டிருக்கிறது.

மேற்படி பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த மாணவர்களை நன்கு பயிற்றித் திறம்பட நடிக்கச் செய்து தென்னிந்திய சங்கத்துக்கு நன்கொடையும் நன்மதிப்பும் சம்பாதித்துக் கொடுத்ததற்கு, நிர்வாகிகளைப் பாராட்டுகிறோம்.



ஏப்ரல் மாதம் முதல் தேதி சென்னை ஒய். எம். ஸி. ஏ. ஆதரவில் நடந்த கூட்டத்தில் கருவணு ஜலஜ குண்டுகளைப் பற்றி ராஜாஜி அருமையான சொற்பொழிவு ஆற்றினார். அணு குண்டுகளினால் உண்டாகும் பெருங் கேடுகளைப் பற்றிப் பல ஆதாரங்களுடன் அற்புதமாகப் பேசினார். கூட்டத்துக்கு ஏராளமான பிரமுகர்களும், அமெரிக்க கான்ஸல் ஜெனரல் திரு எச். ஸி. ராம்ஸே, மற்றும் கான்ஸல் பிரதிநிதிகள் முதலியவர்களும் வந்திருந்தனர். ராஜாஜி அவர்கள் தாம் விசேஷ ஆராய்ச்சியுடன் தயாரித்திருந்த பிரசங்கத்தைப் படிப்பதையும், அந்தப் பிரசங்கத்தைக் கேட்பதற்கு ஆர்வத்தோடு வந்திருந்த கூட்டத்தில் ஒரு பகுதியையும் மேலே உள்ள படத்தில் காணலாம்.

---

சொன்ன குஸுமா மறுபடியும் அவன் பக்கம் திரும்பினாள்.

"என்ன குஸுமா இது! குழந்தை மாதிரிப் பேசுகிறீர்களே! விவரம் தெரிந்த நீங்கள் இப்படி யெல்லாம் பிடிவாதம் பிடிக்கலாமா? டாக்டர் எழுந்திருக்கக் கூடாது என்று தடுத்திருக்கிறாரே, நினைவில்லையா?" என்று கேட்டான் ரமேஷ்.

"நினைவில்லாமல் என்ன? எழுந்திருக்காமலே கொடுத்தால் வாங்கிக் கொள்ளச் சம்மதம்தானே?"

"நான் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் நீங்கள்பாட்டுக்கு ஏதோ பேசிக்கொண்டே போகிறீர்களே! படுக்கையில் படுத்து உறங்கிய வண்ணமே ஒருவர் ஏதாவது கொடுக்க முடியுமா?" என்று கேட்டான் ரமேஷ்.

குஸுமா பேசாமல் தனது தலையணைக்கு அடியில் கையை விட்டுத் துழாவினாள். பிறகு கையை இறுக மூடியவண்ணம் வெளியே எடுத்தாள். அவன் கையில் தன் கையில் உள்ள பொருளை வைக்க விரும்புபவள் போல, "இந்தாருங்கள். இதைப் பிடியுங்கள்!" என்றாள்.

ரமேஷ் கையை நீட்டினான். குஸுமா மூடியிருந்த கையைத் திறந்தாள். கையில் ஒன்றும் இல்லை. ரமேஷுக்கு அவள் தன்னை வேடிக்கை செய்வதாகத் தோன்றியது. ஆனால் குஸுமா சட்டென்று தாவி அவனது நீட்டிய கரத்தைப் பிடித்துக் கொண்டாள். பிறகு தன் இன்னொரு கையிலிருந்த மோதிரத்தை எடுத்து வியப்பில் வாயைத் திறந்தவாறு உட்கார்ந்திருந்த ரமேஷின் கைவிரலில் போட்டாள்.

ரமேஷ் சட்டென்று தன் கையை இழுத்துக் கொண்டான். துடிக்கும் உள்ளத்துடன், "குஸுமா! என்ன இது? இப்படி நீங்கள் செய்வதன் கருத்து...?" என்று ஆரம்பித்த வாக்கியத்தை முடிக்காமலே நிறுத்தினான் அவன்.

"இதன் கருத்து என்னவோ அதுதான். அப்படித் தெரியவில்லையென்றால் அகராதியைப் புரட்டிப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்!" என்று குறும்புச் சிரிப்புடன் கூறிய குஸுமா, "இதோ பாருங்கள்! இனிமேல் நீங்கள் பேசக்கூடாது. நான் தூங்கப் போகிறேன்!" என்றாள். பிறகு பொருள் பொதிந்த ஒரு பார்வையை ரமேஷின் மீது வீசி விட்டுக் கண்களை மூடிக் கொண்டாள்.

அதேசமயம் அவர்கள் இருவரும் தனியாக இருந்த அந்த அறைக்குள் பிராணலால், பிஹாரிலால் ஒரு நர்ஸ் ஆகிய மூவரும் நுழைந்தார்கள். ரமேஷைப் பார்த்த பிஹாரிலால் மெதுவான குரலில், "நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டார்.

வியப்பில் மூழ்கியிருந்த ரமேஷ் மோதிரம் அணிந்திருந்த கையை மறைத்துக் கொண்டு சட்டென்று எழுந்து நின்றான். பிறகு ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு, "நான் வந்து கொஞ்ச நேரம் ஆயிற்று!" என்றான்.

"குஸுமா தூங்குகிறாளா?"

"ஆமாம்!"

"அப்படியானால் வா! நாம் போய்ப் பக்கத்து அறையில் உட்கார்ந்து கொள்வோம். இந்த நர்ஸ் அம்மாள் இவளிடம்

"உட்கார்ந்திருக்கட்டும்!" என்றார் ஸர் பிஹாரி லால்.

ரமேஷ் அவர்களுடன் அறைக்கு வெளியே வந்தான். ஆனால் தனது இருதயத்தை அந்த அறைக்குள்ளேயே விட்டுப் போவது போன்ற உணர்ச்சி அவன் உள்ளத்தில் குடி கொண்டது. திரும்பித் திரும்பி அந்த அறையையே அவன் பார்த்துக்கொண்டு சென்ற காட்சி அவனுக்கு அந்த அறையை விட்டுச் செல்ல மனம் இல்லை என்பதைச் சொல்லாமல் சொல்லியது. உள்ளத்தை ஓரிடத்தில் விட்டு விட்டு உடல் மட்டும் இன்னொரு இடத்துக்குப் போவது என்றால் அது சிரம சாத்தியமான காரியம்தானே?

* * * *

**மா**னிலத் தாயோடு நெருங்கித் தொடர்பு கொள்ளும் வாய்ப்பு நாத்பாபாவின் காரணமாக ஜகதீஷுக்குக் கிட்டியது. அன்று முதல் அவன் உண்மையாகவே நிலம், நீச்சில் அபாரப் பற்றும் சிரத்தையும் காட்டத் தொடங்கினான். பாழடைந்த கிராமமான ஓங்காரியாவில் பழைய சிவன் கோவில் ஒன்று இருந்தது. அதையே நாத்பாபா பல ஆண்டுகளாகத் தமது வாசஸ்தலமாக்கிக் கொண்டிருந்தார். பல ஆண்டுகள் பெருந்தவம் புரிந்து அவர் பல சித்திகள் பெற்றிருப்பதாக ஆரம்பத்தில் எழுந்த பேச்சு நாளடைவில் அவருக்குப் பெரும் புகழைக் கொண்டு வந்து கொட்டியது. அந்தப் புகழ் சிவன் கோவிலுக்குப் பக்கத்தில் அமைதியே உருவான ஆசிரமம் ஒன்றையும் தர்ம சத்திரம் ஒன்றையும் எழுப்பியது.

அக்கம் பக்கத்திலிருந்த நிலத்தின் பெரும் பகுதி அவரது மேற்பார்வையில் செப்பனிடப்பட்டுப் பண்பட்ட பூமியாகப் பரிணமித்தது. கோவிலைச் சுற்றி எழில் மிகு நந்தவனம் ஒன்று அமைக்கப் பட்டது. குடியானவர்களும் கூலி வேலை செய்பவர்களும் ஆங்காங்கே குடிசை போட்டுக் கொண்டு சுகமாகத் தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தனர்.

சிவன் கோவிலுக்குப் பின்னால் சின்னஞ்சிறு மடம் ஒன்றிருந்தது. சிற்சில சமயங்களில் நாத்பாபா அதற்குள் சென்று சமாதியில் ஆழ்ந்து விடுவது உண்டு என்று ஜனங்கள் பேசிக் கொண்டார்கள்.

நாத்பாபா அம்மடத்துள் சென்று சமாதியில் ஆழ்ந்து விட்டால், அப்புறம் அந்தப் பக்கம் யாருமே போக மாட்டார்கள். போனால் நாத்பாபாவின் கோபத்துக்கு இலக்காக நேரிடும் என்ற பயம் சதா சர்வ காலமும் ஜனங்களைச் சூழ்ந்து கொண்டிருந்தது.

கையில் உருவிய வாள் ஏந்திப் பூதப் பிரேத பிசாசங்களும் அரக்கர்களும் மடத்தைக் காவல் புரிந்து வருவதாகவும், தப்பித் தவறி அந்தப் பக்கம் யாராவது போய் விட்டால் அவர்கள் கதி அதோகதி தான் என்றும் மக்கள் நம்பினார்கள். சிற்சிலருக்கு அந்த அசுர உருவங்களைக் காண வேண்டும் என்ற ஆவல் இருக்கத்தான் செய்தது. இருந்தாலும் உயிர் வெல்லமாகத் தோன்றவே, அவர்கள் அந்தச் சோதனைக்குத் தங்களைப் பலியாக்கிக் கொள்ளத் துணியவில்லை. மடத்துள் சென்று சமாதியில் ஆழ்ந்துவிடும் நாத்பாபா பல தடவை மாயமாக மறைந்து போயிருக்கிறார் என்றும் எங்கே போகிறார், எப்படிப் போகிறார் என்று தெரியவில்லையென்றும் அவருடைய அத்தியந்த பக்தர்கள் கூறிக் கொண்டார்கள்.

நாட்டுப்புறத்து மக்கள் மட்டுமேதான் அவருடைய பக்தர்களாயிருந்தார்கள் என்று எண்ணிவிடக் கூடாது. அவருடைய கீர்த்தி நகரங்களில் கூடப் பரவியிருந்தது. ஆங்கிலம் படித்த அறிவாளிகள் கூட அவருடைய அமிழ்தினும் இனிய உபதேச மொழிகளைச் செவிக்கு உணவாகக் கொள்ளும் அடங்காத ஆசையுடன் ஓங்காரியாவைத் தேடி வருவதுண்டு. (தொடரும்)




## நெசவும் சாயமும்

கைத்தறி துணிக்குச் சாயத்தின் உறுதியை அனுசரித்துத்தான் மதிப்புண்டு. நமது ஜனத்தொகையில் பதின்மூன்று பேருக்கு ஒரு நெசவாளி என்றால், பத்து நெசவாளிக்கு ஒரு சாயத் தொழிலாளி வீதம் இருக்கின்றார்கள். லக்ஷக்கணக்கான சாயத் தொழிற்சாலைகள் நாட்டில் எங்கும் சிறிதாகவும், பெரிதாகவும் பரவி யிருக்கின்றன. பெருவாரியாக எல்லாம் கையினால் சாயம் தோய்க்கும் முறையிலேயே நடந்து வருகின்றன. எத்தனை ஆயிரம் பேல்கள் ஒரே நாளில் சாயம் போட வேண்டுமென்றாலும் இந்தச் சாயத் தொழிற்சாலைகளில் சாயம் போட முடியும்.

அவ்வளவு சௌகரியமும் இடமும் ஏற்கெனவே இருக்கும் போது மில் செஸ் வரியிலிருந்து வரும் தொகையைக் கொண்டு கூட்டுறவு முறையில் சாயக் கம்பெனிகளைப் புதிதாய் ஏற்படுத்தும் அவசியம் எதற்கு ஏற்பட்டது என்று தெரியவில்லை. இதற்காகச் செலவிடுவது வீண் செலவாகும்.

எந்தக் கலர் எப்படிப் போட வேண்டுமென்றாலும் ஆயிரக் கணக்கான சாயக் கம்பெனிகள் போட்டுத் தரத் தயாராய் இருக்கின்றன. இவர்களுக்கு எல்லாம் ஒரு சந்தர்ப்பம் அளித்து அப்படியும் அவர்களால் முடியவில்லை என்றால் பொதுத் தொழிற்சாலைகள் ஏற்படுத்துவது பற்றிப் பின்பு யோசித்துக் கொள்ளலாம். பொது ஜனங்கள் பணத்தை அரசாங்கம் அனாவசியமாய்ச் செலவழிப்பது சரியல்ல.

அதற்குப் பதில் 20% சதவிகித கூட்டுறவு சங்கத்தில் சேர்ந்த நெசவாளர்களுக்கு மட்டும் செஸ் வரி பணத்தை விநியோகிப்பது என்பது இல்லாமல் 80% சதவிகிதமுள்ள மற்ற நெசவாளர்களுக்கும் சமமாய் விநியோகிக்கத் திட்டமிடுவதில் மூளையைச் செலவு செய்தால் நல்லது.

நெசவுத் தொழில் என்பது ஒரு நெசவாளியை மட்டும் பொறுத்த தொழில் அல்ல. சாயம் போடுதல், சலவை செய்தல், ஆலை ஓட்டுதல், கஞ்சி போடுதல், புணைத்தல், கண்டி டப்பா சுற்றுதல், பேட் கட்டுதல் இவைகள் அத்தனையும் தனித்தனி தொழிலாளிகள் சேர்ந்து தயாரித்துக் கொடுத்தால்தான் ஒரு நெசவாளி தறியில் உட்கார்ந்து நெய்ய முடியும்.

எனவே செஸ் வரியிலிருந்து செய்யும் ஏற்பாடு சகலருக்கும் கிடைக்கும் வகையில் ஏற்பாடு செய்வது தான் நியாயம்.

தண்டையார்பேட்டை
4—4—55 சாயத்தொழிலாளி

## தமிழகமும் தொழில் வளர்ச்சியும்

மத்திய அரசாங்கம் நாட்டின் பல பாகங்களிலும் அனேக கனத்த தொழில்களை ஆரம்பித்து நடத்தி வருகிறது. அவற்றில் ஒன்று கூடச் சென்னை ராஜ்யத்தில் இல்லாதது வருந்தத்தக்கது. இதுவரை நிறுவி யிருப்பனவும் சென்னைக்கு வெளியிலேதான்; அடுத்து நிறுவப்படும் ஆலைகளும் சென்னைக்கு வெளியிலேதான்.

சிந்திரி உர உற்பத்திசாலை, பெனிஸிலின் ஆலை, டி. டி. டி. (D.D.T.) ஆலை, பத்திரிகைக் காகித உற்பத்தி சாலை, விமானத் தொழிற்சாலை, டெலிபோன் ஆலை, இயந்திர உபகரண (Machine tool) ஆலை, எலெக்ட்ரானிக்ஸ், ரேடியோ தொழிற்சாலைகள் என்று பெரிய பெரிய தொழில்களை நடத்தி வருகின்றனர். இவற்றில் ஒன்றேனும் தமிழகத்தில் இருக்கக் கூடாதா ! இன்னும் சில மாதங்களில் அல்லது சில ஆண்டுகளில் தொடங்க விருக்கும் புதிய தொழில்களைப் பற்றிச் சமீபத்தில் விவரம் வெளியாயிற்று ; வங்கத்தில் ஒரு டெலிபோன்-கேபிள் தொழிற்சாலையும், ரூர்கலாவிலும் மத்திய பிரதேசத்திலும் ஒவ்வொரு எஃகு ஆலையும், டில்லியில் மற்றுமொரு டி. டி. டி. தொழிற்சாலையும் தொடங்குகிறார்களாம்.

இப்படி எல்லா கனத்த தொழில்களையும் வெளியிலேயே அமைத்துக் கொண்டுபோனால் நம் கதி என்ன ! இந்தியா பிரிக்க முடியாத ஒரு முழு நாடுதான். ஆயினும் பல்வேறு மொழிகள் வழங்கும் நாடானதால், முக்கியமான விஷயங்களில் பல்வேறு பிரதேசங்களுக்கும் சரியான பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும்.

நெய்வேலி திட்டத்தில் தமிழ் மக்கள் மிகுந்த நம்பிக்கை வைத்துள்ளனர். அத்திட்டம் எதிர்பார்க்கும் அளவுக்கு வெற்றி யடைந்தால், நம் தொழில் வளர்ச்சிக்கு நிறைய இடம் இருக்கிறது. ஆனால், அது விஷயத்தில் எடுத்துக் கொள்ளப்படும் முயற்சி போதுமானதாக இல்லை. ஆகவே, மாகாண சர்க்கார் மத்திய சர்க்காரைத் தூண்டி நெய்வேலித் திட்டத்தில் அதிக கவனம் செலுத்தச் செய்ய வேண்டும். மேலும், நம் பகுதியில் கனத்த தொழில்களை நிறுவச் செய்ய வேண்டும்.

தொழில்களை நிறுவுவதில் பல அம்சங்கள் கவனிக்கப்பட வேண்டி யிருக்கிறது என்பது சரியே. மூலப் பொருள்கள் சமீபத்தில் கிடைத்தல், பயிற்சி பெற்ற நபர்கள் கிடைத்தல், தகுந்த சீதோஷ்ண நிலை போன்ற அம்சங்களைக் கவனிக்கவே வேண்டும். ஆயினும் பொது நலனையே குறிக்கோளாகக் கொண்டுள்ள அரசாங்கம், மேலே சொன்ன நுணுக்க அம்சங்களை மட்டுமே பெரிதாகக் கொள்ளாமல், மக்களின் நலனையும் பிரதேச வளர்ச்சியையும் முக்கியமாகக் கருத வேண்டும்.

தென்னாட்டில் தொழில் வளருவதற்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வகை செய்ய வேண்டும் என்ற கருத்தை நம் நிதி மந்திரி கனம் சுப்ரமணியம் அவர்கள் வெளியிட்டிருப்பது மகிழ்ச்சி தருகிறது. சென்னை அரசாங்கம் தனது செல்வாக்கை உபயோகித்து இது விஷயத்தில் முயற்சி எடுக்கும் என்று நம்பலாமா !

பெங்களூர்
1—4—55 பி. எஸ். நாராயணசாமி

# பிரஷால் தேய்ப்பதால்

# கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஈறுகளைப் பலப்படுத்துகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்....கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது...அது தரும் சுத்தம் மணிக்கணக்காக நீடிக்கும்!

...பலமான ஈறுகள் புதிய, இனிய சுவாசம் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத் தயாரிக்கும் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனாமலை அறிக்கும் தீய அமிலங்களையும் ... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் உதவுகிறது.




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது

**புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்**



# சின்னத் தம்பியும் திருடர்களும்

கங்க

ஒரு ஊரில் சின்னத்தம்பி என்ற ஒரு வாலிபன் இருந்தான். அவன் ஏழை. தகப்பனில்லாதவன். ஒரு நாள் அவன் பணம் சம்பாதித்து வருவதற்காகப் பட்டணத்துக்குப் புறப்பட்டான்.

அவன் கிளம்பியபோது அவன் தாயார் அவனிடம் ஒரு வைரக் கல்லைக் கொடுத்துப் பின் வருமாறு சொன்னாள்: "குழந்தாய்! உன்னுடைய தகப்பன் உனக்குத் தேடி வைத்த சொத்து இந்த வைரம் ஒன்றுதான். இதை நீ வெகு ஜாக்கிரதையாகக் கொண்டு போக வேண்டும். பட்டணத்தில் இதற்கு நல்ல விலை கொடுப்பார்கள். இதை விற்று வந்த பணத்தை முதலாக வைத்துக் கொண்டு நாணயமாக வியாபாரம் செய்தால் சீக்கிரம் நல்ல பணம் சம்பாதித்துக் கொண்டு திரும்பலாம். வழியிலே திருடர் பயம் அதிகம். வழிப்போக்கர்கள் யாரையும் நீ நம்பிவிடாதே. சிலர் உன்னோடு சிநேகமாய்ப் பேசிக் கொண்டே வந்து சமயம் பார்த்து வைரத்தை அடித்துப் பறித்துக் கொள்வார்கள். அதனால் ஜாக்கிரதையாயிருந்து பிழை" என்றாள்.

அந்த வைரத்தின் பெயர் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? அதன் பெயர் **அறிவு**.

சின்னத்தம்பி வைரத்தை வாங்கிப் பத்திரமாய் முடிந்து கொண்டு புறப்பட்டான். சாலையில் கொஞ்ச தூரம் சென்றதும் அவன் ஒரு வழிப்போக்கனைக் கண்டான். "தம்பி, எங்கே போகிறாய்?" என்று கேட்டான் அந்த வழிப்போக்கன்.

"பட்டணத்துக்குப் பணம் சம்பாதிக்கப் போகிறேன், ஐயா!" என்றான் சின்னத்தம்பி.

"அப்படியா? நானும் பட்டணத்துக்குத்தான் போகிறேன். இருவரும் சேர்ந்து போகலாம்" என்றான் வழிப்போக்கன்.

சின்னத்தம்பி தன் தாயார் சொல்லிய புத்திமதியை நினைத்துக் கொண்டான். "உன் பெயரென்ன?" என்று கேட்டான்.

"என் பெயர் **சோம்பல்**" என்று பதில் சொன்னான் வழிப்போக்கன்.

"ஓகோ! உன்னைப் பற்றி என் தாயார் சொல்லியிருக்கிறாள். நீ பொல்லாத திருடன். உன் சகவாசம் எனக்கு வேண்டாம்" என்று சொல்லிவிட்டுச் சின்னத்தம்பி ஓட்டம் பிடித்தான்.

திருடன், "இந்தா, பிடி!" என்று கூச்சலிட்டுக் கொண்டே தொடர்ந்து ஓடினான். என்ன ஓடியும் சின்னத்தம்பியை அவனால் பிடிக்க முடியவில்லை.

இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும், வேறொரு ஆள் எதிர்ப்பட்டான்.

"தம்பி, தம்பி! எங்கே போகிறாய்?" என்று அவன் கேட்டான்.

"பட்டணத்துக்குப் பணம் சம்பாதிக்கப் போகிறேன்" என்றான் சின்னத்தம்பி.

"அப்படியா? சந்தோஷம். நாம் இருவரும் பேசிக் கொண்டே போகலாம்" என்றான் அம்மனிதன்.

"நீ யார்?" என்று அவனைப் பார்த்துக் கேட்டான் சின்னத்தம்பி.

"என்னைத் தெரியாதா? நான்தான் **வியாதி**" என்று அம்மனிதன் கூறினான்.

"ஐயோ! நீ சோம்பலைவிடப் பொல்லாத திருடனாயிற்றே! நீ என் சுகத்தைத் திருடிக் கொள்வாய். வேண்டாம், உன் உறவு எனக்கு" என்று சொல்லி விட்டுச் சின்னத்தம்பி ஓட்டமெடுத்தான்.

வியாதி ஓடி ஓடிப் பார்த்தும் அவனைப் பிடிக்க முடிய வில்லை.

இன்னும் போகப் போக வழியில் சூதாட்டம், கோபம், சண்டை, மூர்க்கம், விபசாரம் முதலிய திருடர்கள் ஒவ்வொருவராக எதிர்ப்பட்டுச் சின்னத் தம்பியை வழி மடக்கப் பார்த்தார்கள். எல்லாரையும் ஏமாற்றிப் பின்னால் விட்டு விட்டுச் சின்னத்தம்பி முன்னால் போய்க் கொண்டிருந்தான்.

மேலே சொன்ன சோம்பல், வியாதி, விபசாரம் முதலிய திருடர்கள் எல்லாரும் ஒரு பெரிய கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். இக் கூட்டத்துக்கு ஒரு தலைவன் இருந்தான். அவன் பெயர் **மதுசாரம்**. இவன் சமயத்துக்குத் தகுந்தபடி வேஷம் போட்டுக் கொள்வதில் தேர்ந்தவன். கள்ளு, சாராயம், ஒயின், பிராந்தி, விஸ்கி, பீர், அபினி, கஞ்சா என்று விதவிதமான பெயர்களை வைத்துக் கொண்டு பெயருக்கேற்ப வெவ்வேறு வேஷங்கள் அவன் போட்டுக் கொள்வான்.

கடைசியாக, இத் திருடர் தலைவனை நமது சின்னத்தம்பி சந்தித்தான்.

"தம்பி, தம்பி, எங்கே போகிறாய்?" என்றான் திருடர் தலைவன்.

"பட்டணத்துக்குப் போகிறேன், நீ யார்?" என்று சின்னத்தம்பி கேட்டான்.

"என் பெயர் **மதுசாரம்**" என்றான் திருடர் தலைவன்.

சின்னத்தம்பி தனக்குள் இவ்வாறு யோசித்துக் கொண்டான் :—"இவனைப் பற்றி என் தாயார் சொல்லவில்லை. இவன் வெகு உற்சாக புருஷனாய்க் காணப்படுகிறான். உடல் பருத்து நல்ல உடையணிந்து பெரிய மனிதன் போல் தோன்றுகிறான். இவன் திருடனாயிருப்பானா? எப்படியானாலும் நாம் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். தாயார் ஒருவேளை இவனைப் பற்றிச் சொல்ல மறந்திருக்கலாம் அல்லவா?" — இப்படி யெண்ணிச் சின்னத்தம்பி வேகமாய் நடக்கலானான்.

அப்பொழுதுதிருடர்தலைவன்,"ஏனப்பா இவ்வளவு விரைவாக ஓடுகிறாய்? கொஞ்சம் மெதுவாய் நட. என்ன அவசரம்? பட்டணத்தில் நான் ரொம்ப அனுபவமுள்ளவன். பணம் சம்பாதிக்கும் வழியெல்லாம் நான் உனக்குச் சொல்லித் தருகிறேன்" என்றான்.

சின்னத்தம்பி இந்த ஆசை வார்த்தையில் மயங்கி விட்டான். "இவன் திருடனாயிருக்க மாட்டான். இவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டு கொஞ்சம் முன்னாலேயே போய்க் கொண்டிருக்கலாம். அப்படி ஒரு வேளை இவன் திருடனாயிருந்து நம்மைப் பிடிக்க வந்தாலும், ஓரே ஓட்டமாய் ஓடித் தப்பித்துக் கொள்ளலாம். இத்தனை திருடர்களை ஏமாற்றி வந்த எனக்கு இந்தப் பொதியனைத்தானா ஏமாற்ற முடியாது?" என்று அவன் எண்ணிக் கொஞ்சம் மெதுவாய் நடந்தான்.

திருடர் தலைவன் இனிமையாகப் பேசிக் கொண்டே கொஞ்சம் கொஞ்சமாய் நெருங்கி வந்தான். "ஆஹா! இவனுடன் பேசினால் எவ்வளவு உற்சாகமாயிருக்கிறது!" என்று சின்னத் தம்பி நினைத்தான். நிரம்ப அருகில் வந்ததும் திருடர் தலைவன் ஓரே தாவலாய்த் தாவிச் சின்னத் தம்பியைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு விட்டான்.

சின்னத்தம்பி ஆனமட்டும் அவன் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள முயன்றான். ஒன்றும் முடியவில்லை. திருடன் அவனைச் சோதனை போட்டு அவன் பத்திரமாய் முடிந்து வைத்திருந்த வைரத்தைப் பிடுங்கிக் கொண்டான். இதற்குள் பின்னால் தங்கிய வியாதி, விபசாரம், சூதாட்டம், சோம்பல் முதலிய திருடர்களும் ஓடி வந்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

திருடர்கள் எல்லாரும் சேர்ந்து அவனைத் தங்கள் இருப்பிடத்துக்கு வரும்படி அழைத்தார்கள். சின்னத்தம்பி பார்த்தான். "வைரந்தான் போய்விட்டது. பட்டணத்துக்குப் போய் என்ன செய்வது? இவர்களுடன் தான் போவோமே?" என்று எண்ணினான்.

பாவம்! இவ்வாறு சின்னத் தம்பி திருடர் தலைவனுக்கு அடிமைப்பட்டான். மற்ற எல்லாத் திருடர்களுக்கும் அவன் குற்றேவல் செய்ய வேண்டியிருந்தது. இவ்வாறு சிலகாலம் அடிமையாயிருந்து உழைத்து விட்டுக் கடைசியில் அவன் மாண்டு போனான்.

வாழ்க்கைப் பிரயாணம் தொடங்கும் எத்தனையோ ஏழை ஜனங்கள் சின்னத் தம்பியைப் போல் **மதுசாரம்** என்ற கொள்ளைத் தலைவனுக்கு அடிமை யாகிறார்கள். முதலிலேயே அவன் பெரிய கள்ளன் என்பதை அறிந்து அருகில் நெருங்க விடாதிருந்தால் பிழைக்கலாம். அவனுடைய இனிய பேச்சுக்குக் கொஞ்சம் செவி கொடுத்து விட்டால் பிறகு வலையில் விழ வேண்டியதுதான். வஞ்சகத்தில் அவன் மிகத் தேர்ந்தவனாதலால் அறியாத ஜனங்கள் எத்தனையோ பேர் அவனை நெருங்கிவிட்டு அதோகதி அடைகிறார்கள். இப்படிப்பட்ட கொடிய கள்ளனைப் பிடித்து நாட்டை விட்டுத் துரத்துவது தானே சர்க்காரின் கடமை?

(ராஜாஜி நடத்திய 'விமோசனம்' பத்திரிகையிலிருந்து)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

# புதிய

# பெரிய

# சைஸ்

## ரெக்ஸோனா

அதிக தெளிவான,
எழிலோங்கும்
சருமத்திற்கு

கேடில்* கலந்த
சோப் இது ஒன்றே



REGISTERED No. M. 4392
*Registered as newspaper in Ceylon*